# சந்தேகம் தெளிதல்

## முதல் பாகம்

தர்ம சக்கரத்தில் வெளிவந்தவை

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை போஸ்ட், எலமனூர் ஸ்டேஷன்
திருச்சி ஜில்லா
1970

தபோவனத் தொடர் 45

முதல் பதிப்பு 1958
இரண்டாம் பதிப்பு 1964
மூன்றும் பதிப்பு 1970

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
காரியதரிசியால் பிரசுரிக்கப்பட்டது



ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை

# முகவுரை



ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தினின்று வெளிவரும் தர்ம சக்கரம் என்ற மாத சஞ்சிகையில் 'சந்தேகம் தெளிதல்' என்ற தலைப்பில் அன்பர்களின் ஐயங்கள் தெளிவிக்கப்படுகின்றன. பல அன்பர்களின் விருப்பத்திற்கிணங்க அதில் முதல் பகுதி அறுபத்துமூன்று கேள்விகள் இப்புத்தக ரூபத்தில் வெளியிடப் பெற்றுள்ளன.

## பொருளடக்கம்

---

## சந்தேகம் தெளிதல்

**கேள்வி:** (1) நவீன வாழ்க்கை முறைப்படி அவரவர் அலுவல்களில் பெரும்பகுதியை இரவில்தான் செய்து முடிக்க இயலுகிறது. ஆகையால் அதிகாலை துயில் எழுந்திருக்கச் சாத்தியப்படுவதில்லை. சூழ்நிலையை அனுசரித்து உழைப்பாளி பிந்தி எழுந்திருப்பது பொருந்துமல்லவா?

*பண்டைக்காலத்து வாழ்க்கை முறைக்கும் நவீன வாழ்க்கை முறைக்கும் வேற்றுமையிருப்பது வாஸ்தவம். பண்டைக்காலத்து மனிதன் பொழுது படிந்த பிறகு பல அலுவல்களை நிறுத்தி வைக்கவேண்டியதாயிற்று. வீதி முழுதுக்கும் நல்ல வெளிச்சம் கொடுக்க அக்காலத்தில் தீப வசதி போதவில்லை. வீட்டுக்குள்ளேயும் தம் விருப்பம்போன்று விளக்கேற்றிவைக்க அக்காலத்து மக்களுக்கு இயலவில்லை. வெளிச்சக் குறைவு பலவிதமான வேலைகளுக்கு இடைஞ்சலாயிருந்தது. இன்றைக்கோ நிலைமை வேறு. பகல் போன்று ஊர் முழுதையும் மின் விளக்கானது செய்துவைத்துவிடுகிறது. பகலில் சூரிய வெப்பத்தின் கொடுமையுண்டு. இரவில் அது கிடையாது. ஆகவே பல அலுவல்களைப் பகலில்விட இரவில் நன்கு கவனிக்கலாம். தொழிற்சாலைகளில் பொருள்களை உண்டுபண்ணுதல், சமாசாரப் பத்திரிகைகள் அடிப்பது, ரண வைத்தியம் செய்வது— இவைபோன்ற பல அலுவல்களை இரவில் நன்கு*

செய்துமுடிக்கலாம். ஆகவே நவீன வாழ்க்கைமுறையில் ஈடுபட்டிருப்பவர்கள் இரவில் படுக்கப்போக நெடுநேரம் ஆய்விடுகிறது என்பது நாம் கண்டுவரும் காட்சியாகும். அத்தகையவர் அதிகாலையில் எழுந்திருக்க இயலாது போய்விடும் என்பதும் உண்மை.

இது சம்பந்தமாக இரண்டு பேருண்மைகளை நாம் ஞாபகத்துக்குக் கொண்டுவரவேண்டும். மனிதன் நல்ல உழைப்பாளியாகவேண்டும் என்பது ஒன்று. உழைப்பே மனிதனுக்கு ஆக்கத்தை உண்டு பண்ணுகிறது. முறையாக உழைக்கின்ற மனிதன் முன்னேற்றமடைகிறான். முறைதவறி உழைக்கின்றவனே சிறிது சிறிதாகத் தற்கொலை செய்துகொள்கிறான். அத்தகையவனுக்கு மனவமைதியில்லை; உடல் திட்பம் தேய்கிறது. மக்களோடு நல்லிணக்கம் பண்ண அவனுக்கு அவகாசமில்லை. பணம் தேடும் யந்திரமாக அவன் ஆய்விடுகிறான். அவன் வாழ்க்கைப்பயனை அறியாத உழைப்பாளியாகிறான். இரண்டாவதாக, இராக்காலத்தை ஓய்வுக்கும் உறக்கத்துக்குமாகப் பயன்படுத்துவதுதான் இயற்கையளித்துள்ள வசதி. இரவில் தூக்கத்தைக் குறைத்துப் பகலில் அதிகம் தூங்குபவன் ஆரோக்கியத்தை இழந்துவிடுகிறான். அறிவு வளர்ச்சி அத்தகையவனுக்குத் தடைப்படுகிறது. அதிகாலையில் நான்கு மணிக்கு பிரம்ம முகூர்த்தம் எனப்படுகிறது. அப்பொழுது ஆத்மசாதனம் செய்பவர் மனத்தெளிவு பெறுகின்றனர். மனிதனுக்கு ஏற்பட்டுள்ள அலுவல்

களில் மிக முக்கியமானது சான்ரேன் ஆதல். அதற்
கேற்ற சாதனங்களைச் செய்தற்கு முற்றிலும் பொருந்
திய நேரம் அதிகாலையாகும். ஆக, அதிகாலையில்
படுக்கையை விட்டு எழுந்திருக்க மனிதன் கடமைப்
பட்டிருக்கிருன். நோயாளி ஒருவனே இவ்விதிக்கு
விலக்காகிருன். அதிகாலையில் தெளிந்த மனதுடன்
எழுந்திருத்தற்பொருட்டு முன்னிரவில் மனிதன்
படுத்துறங்குதல் நன்று. முன்னிரவில் தூங்குகின்ற
தூக்கமே பின்னிரவில் தூங்குவதைவிட அதிகம்
ஓய்வு தரக்கூடியது. ஆகவே சுமார் பத்துமணிக்
குப் படுக்கச் சென்று காலையில் நான்கு அல்லது
ஐந்து மணிக்குள் எழுந்திருப்பது இயற்கைத்தாய்
அளிக்கும் வசதிகளை நன்கு பயன்படுத்துவதாகும்.
அதிகாலையில் எழுந்திருக்கும் பழக்கம் எல்லாவித
மான முன்னேற்றத்திற்கும் துணைபுரியும். காலை
வேளையில் தூங்கிக்கொண்டிருப்பவனுக்கு தமோ
குண வளர்ச்சி அதிகரிக்கும். அவனுடைய அறிவு
வளர்ச்சி தடைப்படும். ஒரு மனிதன் ஒருமாதம்
அதிகாலையில் எழுந்திருந்து நல்ல அனுஷ்டானங்
கள் செய்து பார்க்கவேண்டும். இன்னும் ஒருமாதம்
காலையில் தூங்கியிருந்து தன் உள்ளத்தில் வடி
வெடுக்கும் பாங்குகளை ஆராய்ந்து பார்க்கவேண்
டும். இப்படிச் சீர்தூக்கிப் பார்த்தால் அதிகாலை
யில் துயில் எழுதலில் உண்டாகும் சிறப்பு தனக்கே
விளங்கும். சூழ்நிலை எதுவாயினும் அதை நல் வாழ்
வுக்கு உரியதாக அமைத்துக்கொள்ளுதலே சான்ரே

ரது இயல்பாகும். அதிகாலையில் எழுந்திருத்தல் என்னும் நல்வாழ்வுத் திட்டத்தை எத்தகைய சூழ்நிலைக்கும் பறிகொடுத்துவிடலாகாது. பகலிலும் இரவிலும் செய்கிற எல்லாத் தொழில்களும் நல்வாழ்வுக்கு உற்ற துணையாக வேண்டும். யாண்டும் வைகறையாமம் துயில் எழுந்திருந்து தெய்வம் தொழுதல் வேண்டும்.

**கேள்வி :** (2) இப்பொழுது நம் நாடு அமைத்துள்ள சமயப் பற்றில்லாத அரசாங்கம் (secular government) நம் தேசீயப் பண்பாட்டுக்கு ஒத்ததா ?

தேச சரித்திரத்துக்கும் தேசப் பண்பாட்டுக்கும் தொடர்வுண்டு. வெறும் நிகழ்ச்சிகளை மட்டும் குறித்து வைப்பது சாமானியமான சரித்திரமாகும். தேசீய நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாக உயர்ந்த நோக்கங்கள் இருக்குமானால் அது பாராட்டத்தக்க சரித்திரமாகும். இந்திய தேச சரித்திரத்தில் செயலற்ற இருள் சூழ்ந்த பகுதிகள் பல இருந்திருக்கின்றன; பெருநிகழ்ச்சிகள் நிறைந்த பொற்காலங்கள் பல இருந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் தொகுத்து ஆராயுங்கால் உண்மையொன்று வெளிப்படும். அதாவது இந்திய சரித்திரமும் இந்தியப் பண்பாடும் இணைபிரியாதவைகளாம். எப்பொழுதெல்லாம் சமய வாழ்க்கையில் சமுதாயம் முன்னேற்றமடைந்ததோ அப்பொழுதெல்லாம் அது ஏனைய துறைகளில் முன்னேற்றமடைந்திருக்கிறது. பழைய காலத்து இந்திய அரசாங்கங்களெல்லாம்

சமயப்பற்று உடையவைகளாகவே அமைந்திருந் தன. நல்ல ஆட்சிமுறைக்கு ராம ராஜ்யம் என்பது பொதுப்பெயர். கீழ்த்தரமான ஆட்சிமுறைக்கு அசுர அரசாங்கம் என்பதும் ராவண ராஜ்யம் என்பதும் பொதுப் பெயர். ஆனல் ராவண ராஜ்யத்திலும் சமயப்பற்று ஏராளமாக இருந்து வந்திருக்கிறது. சிறந்த சிவபக்தர்களில் ஒருவன் ராவணன். தொகுத்து உரைக்குமிடத்து இந்திய மக்கள் இயல் பாகவே சமயப்பற்று உடையவர்கள். சமயத்தி லிருந்து பிரித்தெடுக்கப்பட்ட பகுதி எதுவும் அவர் களுடைய ஜீவிதத்தில் இல்லை. ஆத்மீக வாழ்வே அவர்களுக்கு ஜீவநாடி. அது அவர்களுடைய ரத்தத் தில் ஊறியுள்ளது. உப்பு தன் உவர்ப்பை இழந்து விட்டால் அது உப்பு அல்லாது வேறு ஏதாவது பொருள் ஆய்விடும். அங்ஙனம் இந்தியர் அத்யாத்ம வாழ்வை விட்டுவிட்டால் அவர்கள் தங்கள் வியக் தியை இழந்துவிடுவார்கள். ஒரு சமூகம் தனது வியக்தியை இழந்துவிட்டால் அது அழிந்துபோன துக்குச் சமானமாகும். இந்தியர் இன்று அரசியல் சுதந்தரத்தைப் பெற்றிருக்கின்றனர். ஜனநாயக ஆட்சியையும் உண்டுபண்ணியிருக்கின்றனர். தங்க ளுக்குத் தாங்களே உண்டுபண்ணிக்கொண்ட ஜன நாயக ஆட்சியில் சமயப்பற்றின்மையை அவர்கள் எப்படிப் புகுத்தினர்கள், ஏன் புகுத்தினர்கள் என்ற கேள்வி எழக்கூடும்.

சமயப்பற்றில்லாத அரசாங்கம் என்பதன் பொருள் சமயத்தில் நம்பிக்கை வைக்காத அரசாங்

கம் என்பதல்ல. அரசாங்கத்துக்கு உரிய சமயம் (State Religion) என்பது ஒவ்வொரு நாட்டிலும் உண்டு. இந்திய ஜனநாயக அரசாங்கம் அப்படி எந்த சமயத்தையும் அரசாங்கத்துக்குரியதென்று எடுத்துக்கொள்ளவில்லை. அதற்குச் சில காரணங் கள் உண்டு. இந்தியாவை இரண்டு நாடுகளாகப் பிரித்துப் பாகிஸ்தான், ஹிந்துஸ்தான் என்று அமைத்து வைத்துப் போன ஆங்கிலேயர் தாங்கள் இல்லாவிட்டால் இருதரத்தாரும் மதத்தின் பெய ரால் சண்டை செய்துகொள்வார்கள் என்று உல குக்குப் புகட்டி வந்திருக்கின்றனர். அவர்கள் புகட் டியது உண்மையல்லவென்று உலகுக்கு எடுத்துக் காட்டுவது இந்தியாவின் முதற்கடமையாகும். மத விஷயத்தில் நடுநாயகமாக நின்று ஆட்சிபுரிய இந்தியர்களுக்கு இயலும் என்று உலக மக்களுக்கு எடுத்துக் காட்டுவது இந்தியாவின் சிறந்த செயலா கும். சர்வதேச மகாசபையில் அத்தகைய நடுநிலைக் குத் தனிமதிப்பு ஒன்று ஏற்படும். பாகிஸ்தானே மதப்பற்றுடைய ஆட்சிமுறையைக் கையாண்டு வருகிறது. முஸ்லீம் அல்லாதாரிடத்துத் தாராள சிந்தனையுடையவர்களாக இருக்க முடியாது என் பதை அவர்கள் தங்கள் செயலில் காட்டி வருகிறார் கள். இந்திய அரசாங்கமோ எல்லா சமயத்தவ ரிடத்தும் ஒரே பாங்குடையது என்பதை நிரூபித்து வருகிறது. அதனால் உலக மக்களது முன்னிலையில் இந்தியாவானது உயர்ந்ததொரு ஸ்தானம்பெற்று

வருகிறது. இந்தியாவில் வசித்துவரும் முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகர்கள், யூதர்கள் ஆகிய மற்ற மதஸ்தர்கள் மனதில் இந்த ஏற்பாடானது நம்பிக்கையையும் ஆதரவையும் ஊட்டி வருகிறது. எல்லாச் சமயத்தவர்களுடைய சம்மதத்தையும் ஒற்றுமையையும் பெறுவதே ஒப்பற்ற ஆட்சித் திட்டமாகும். அத்தகைய நடுநிலையை இந்தியாவானது இப்பொழுது தனது பரந்த செயலின் மூலம் பெற்றுள்ளது. சமயத்தை ஆட்சிமுறையுடன் இணைத்து வைக்காததே அதற்குக் காரணமாகும்.

நமது தேசீய ஆட்சிமுறையை அதன் போக்கில் விட்டு விட்டு இந்திய மக்களாகிய நாம் சமய வாழ்க்கையை உறுதிப்படுத்துவதை நம் சொந்த அலுவலாக எடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம். பிறர்க்கு இடுக்கண் செய்யாது மதத்தை வளர்ப்பதற்கு நம் அரசாங்கம் என்றைக்கும் ஆதரவு கொடுக்கும். ஆக, சமயத்தை உறுதிப்படுத்துவது மக்களாகிய நமது கடமையாகும். ஆட்சியை நடு நாயகமாகக் கொண்டு செலுத்துதல் அரசாங்கத்தின் கடமையாகும்.

**கேள்வி : (3)** மனிதன் ஒரு தடவைதான் பிறக்கிறான்: பல பிறவிகள் அவனுக்கில்லையென்று சிலர் கருதுகின்றனர். பல பிறவிகள் உண்டு என்று நிரூபிப்பது எங்ஙனம் ?

இயற்கையில் ஒரே தடவைமட்டும் நிகழ்கின்ற நிகழ்ச்சி ஒன்றுமில்லை. எல்லா நிகழ்ச்சிகளும் எல்

லாப் பொருள்களிடத்தும் திரும்பத் திரும்ப நிகழ்கின்றன. ஒரு தடவை மழையாக விழுந்த நீர் பல தடவை மழையாக விழவல்லது. அங்ஙனம் நிகழ்ந்து கொண்டும் இருக்கிறது. பிறப்புமட்டும் ஏன் ஒரு தடவையோடு நின்றுவிடவேண்டும்?

ஜீவன் என்பது ஓர் ஆத்மா. அதற்கு உடலங்கள் மாறி மாறி அமைவது அதற்குப் புதிய புதிய அனுபவங்களைத் தருதற்பொருட்டேயாம். ஒரே தடவை ஒருநாள் பள்ளிக்கூடத்துக்குப் போகும் மாணுக்கன் அதிகம் கற்கமுடியாது. கல்வி பூர்த்தியாகும் வரையில் திரும்பத் திரும்ப அவன் பள்ளிக்கூடத்துக்குப் போய்க்கொண்டிருக்க வேண்டும். ஆத்மாவானது பரிபூரணத் தன்மையடையும் வரையில் பிறந்துகொண்டே இருக்கவேண்டும். அதுதான் இயற்கையின் பேரமைப்பாகிறது.

ஒரு பிறப்புத்தான் உண்டு என்பது ஆத்மாவுக்குத் துவக்கமும் முடிவும் உண்டு என்பதாக முடியும். ஒரு பிறப்போடு அழிந்துபோகும் ஆத்மா வாழ்ந்திருக்கும் போதும்நன்மைக்காகப்பாடுபடவேண்டியதில்லை என்று ஏற்படும். மனிதனுக்கு ஒரே ஜன்மத்தைக் கொடுத்துவிட்டுப் பிறகு அவனுடைய பாவபுண்ணியத்துக்கு ஏற்பக் கடவுள் அவனை நரகத்திலோ சுவர்க்கத்திலோ நிரந்தரமாக வைத்துவிடுகிறார் என்பதும் பொருந்தாது. ஒரு ஜன்மம் என்கிற குறுகிய காலத்தில் செய்த குற்றத்துக்கு முடிவில்லாத நரகவேதனை என்ற தண்டனையைக்

*கருணையுடையவன் விதிக்கமாட்டான். மானுட ஆட்சியிலேயே அத்தகைய கொடுமையில்லை. குற்றத்துக்கேற்ற தண்டனையும் பிறகு திருந்தியமைவதற்கேற்ற சந்தர்ப்பத்தையும் நல்ல மானுட ஆட்சி முறையானது அளிக்கிறது. மறுபிறப்பு என்ற புதிய சந்தர்ப்பத்தைக் கடவுள் கொடுக்காவிட்டால் அவன் கொடியவன் என்ற குற்றத்துக்கு ஆளாவான். பேரறிவும் பேரருளுமுடைய கடவுள் அப்படி ஒரு ஜன்மத்தை மட்டும் கொடுத்து மனிதனுடைய முன்னேற்றத்தைத் தடைப்படுத்தமாட்டார். பூராயமாய் ஆராய்ந்து பார்த்தால் ஜீவர்களுக்குப் பல பிறவிகள் உண்டு என்னும் கோட்பாடுதான் யுக்திக்கும் அனுபவத்துக்கும் பொருந்தும்.*

**கேள்வி:** (4) பகவானைவிட பகவானுடைய நாமம் பெரியது என்று கருதப்படுகிறது. ஒரு நாமமும் ஓர் ஊரும் இல்லானுக்கு எண்ணிறந்த நாமங்கள் சூட்டிக் கொள்ளலாம் என்றும் பகரப்படுகிறது. அவனுக்கு நாம் சூட்டுகிற நாமம் எப்படி அவனைவிடப் பெரியதாகமுடியும்?

*பகவானுடைய நாமங்களில் இரண்டு பகுதிகள் உண்டு. அவனுடைய மகிமைகளை விளக்குதற்காக நாம் கொடுக்கின்ற பெயர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு பகுதியாகிறது. பீஜ மந்த்ரமாக அவனுக்கு இயல்பாயமைந்தது மற்றொரு பகுதியாகிறது. நாம் கொடுக்கின்ற பெயர்களை மேலும் பெருக்கிக்கொண்டே போகலாம். அப்பெயர்களுக்கு அடிப்படையாயுள்ள*

கருத்துக்களை உணர்ந்து சொன்னால் அவை பயன் படும். பொருள் உணர்ந்து ஆயிரம் நாமங்கள் சொல்லி அர்ச்சனை செய்வது நல்லது. அதனால் இறைவனுடைய விபூதிகள் எல்லாம் ஞாபகத்துக்கு வருகின்றன. அம்முறையில் அவனுடைய மகிமை களை எண்ணுமளவு மனது தூயதாகிறது. ஆலயங் களிலும் இதர இடங்களிலும் நாம அர்ச்சனைகள் அமைத்துவைத்ததின் கோட்பாடு இதுவேயாம். எல்லா தெய்வங்களுக்கும் ஆயிரக்கணக்கில் இங் ஙனம் சொற்கள் சேர்ந்திருக்கின்றன. அவையாவும் பகவானைவிடப் பெரியவைகள் அல்ல. அத்தனை பெயர்களுள் தெய்வத்தின் சொரூபத்துக்கு பீஜமந்த் ரங்களாக அமைந்துள்ளவைகள் அலாதியானவை களாம். ஈசுவரன் நித்தியப் பொருளாயிருப்பது போன்று இந்த நாமங்களும் நித்தியமானவைகள். சான்றுகள் சில எடுத்துக்கொள்வோம். ஓம் என் னும் பிரணவம், ராம மந்த்ரம், சிவ மந்த்ரம், நாரா யண மந்த்ரம் ஆகியவைகள் மனிதரால் உண்டு பண்ணப்பட்ட சொற்கள் அல்ல. ராமன் பிறப்பதற்கு முன்பும் ராம மந்த்ரம் உண்டு. ராம நாமம் என்பது சநாதனம், பீஜம்–என்றைக்கும் அழியாத வித்து. அந்த வித்தினுடைய புறத்தோற்றம் தசரத ராமன். ஆகவே ராமனைவிட ராம நாமம் மேலானது. ராம நாம ஜபம் தொடர்ந்து செய்து ஜப சித்தியடைகிற வர்கள் ராமனை அறியலாம்; பரப் பிரம்மத்தை யறிய லாம். வால்மீகி மஹரிஷியைச் சான்றாக எடுத்துக்

கொள்வோம். அவர் முதலில் வேடனுயிருந்தார். ராம என்ற சொல்லை உச்சரிக்க முடியாத பாமரனுக இருந்தார். சிரமப்பட்டு அச்சொல்லை உச்சரிக்கக் கற்றுக்கொண்டார். அந்த மந்த்ரம் அவரை அறவே பண்படுத்தியது. அதை ஜபித்து அவர் பரப்பிரம் மத்தை யறிந்தார். பிறகு ராமனுய் அவதரித்த புருஷோத்தமனை அறிந்துகொள்ள அவருக்கு இயன்றது. மற்ருரு சான்று எடுத்துக்கொள்வோம். ராம மந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டிருந்த ஆஞ்சநேயனுக்கு அலைகடலைத் தாண்ட இயன்றது. ஆனுல் ராமன் தானே அக்கடலைக் கடந்து இலங்கை செல்லுதற்கு அணைகட்ட வேண்டியதாயிற்று. ஆக, பகவானுடைய நாமம் பகவானைவிடப் பெரியதே.

பகவானுடைய நாமத்தை வெறுமனே உச்சரித்துக் கொண்டிருந்தாலும், விளையாட்டுக்காகச் சொன்னுலும், சினத்தினுல் சொன்னுலும் அத்தனைக்கும் பயன் உண்டு. பின்பு அதன் பொருளை உணர்ந்து பக்தி பூர்வமாகச் சொன்னுல் அது விரைவில் மனதைப் பண்படுத்துகிறது. ஆனுல் அர்ச்சனைக்காக அமைந்த அத்தனை சொற்களையும் பொருளை உணராது ஓதுவதாலும் ஓதுவிப்பதாலும் நன்மை ஏற்படாது. பொருள் உணர்ந்து சில சொற்களைச் சொன்னுலும் அது நல்ல வழிபாடாகும். மந்த்ரமாக அமைந்துள்ள ஒரு சொல்லை ஓயாது உச்சரிக்க வேண்டும். அப்பொழுது அது ஜபம் என்னும் பெயர் பெறுகிறது. ஆனுல் அர்ச்சனைக்கு அமைந்

*துள்ள பல சொற்களைப் பொருள் உணர்ந்து சொன்னால்தான் பயன்படும். பகவானுடைய நாமமாகிய ஒரு சொல் நம்மை பகவானிடம் கொண்டு சேர்க்குமாதலால் அது பகவானைவிடப் பெரியதே.*

**கேள்வி:** (5) மறுபிறவிக் கொள்கையும் சுவர்க்க நரகக் கொள்கையும் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன அன்றோ? ஆயினும் அவ்விரண்டும் நம் புராணங்களில் பேசப்படுகின்றன. நல்வினை தீவினைப் பயன்களை சுவர்க்கத்திலோ நரகத்திலோ அனுபவித்து முடிந்த பின்பு, மறுபிறப்பிலும் அவ்வினைப் பயன் உயிரைத் தொடர்ந்து வரும் என்பது எவ்வாறு பொருந்தும்?

*வினை இருக்கும் பரியந்தம் வினைப்பயன் உண்டு. உயிர்களுக்கு வினையோ முடிவில்லாது பெருகிக் கொண்டே போகிறது. பழைய வினைகளை அனுபவித்து முடிப்பதற்கு முன்பு புதிய வினைகள் உயிர்களால் வருவிக்கப்படுகின்றன. வினைப்பயன் இன்ப துன்பமாக வடிவெடுக்கிறது. துன்பத்துக்கு ஏதுவான வினை அதிகரித்துவிட்டால் அப்பொழுது அது நரகம் எனப்படுகிறது. இவ்வுலகிலேயே நரகத்தை அனுபவிப்பவர் உண்டு. இன்பத்துக்கு ஏதுவான வினை அதிகரித்துவிட்டால் அது சுவர்க்கம் எனப்படுகிறது. இம் மண்ணுலகிலேயே சுவர்க்க வாழ்வு வாழ்பவர்கள் உண்டு. இங்கு ஒருவன் நோய்வாய்ப் பட்டிருந்தால் அது நரகத்துக்குச் சமானமானது. நோய் குணமடைந்த பிறகு திரும்பவும் நோய் வரவும் கூடும். அங்ஙனம் சொர்க்க நரகம் பல தடவைகளில்*

ஒரு ஜீவனுக்கு உண்டாகின்றன. புண்ணிய கர்மம் மிகைப்படும்போது சுவர்க்கப் பிராப்தி ஏற்படுகிறது. புண்ணியம் அனுபவித்தான பிறகு அந்த ஜீவன் திரும்பவும் வினையைப் பெருக்குதற்கு மண்ணுலகுக்கு வருகிருன். பாபம் அதிகரித்தால் அவன் நரகவேதனையடைகிருன். வேதனைப்பட்டுப் பாப மூட்டை குறைந்தால் அதே ஜீவன் மண்ணில் வந்து பிறக்கிருன். சுவர்க்கம் நரகம் இரண்டுக்கும் இடைநிலையில் இருப்பது இவ்வுலகம். இதில் சுகம் துக்கம் இரண்டும் உண்டு. ஆக, ஒவ்வொரு ஜீவனும் சுவர்க்கத்திலும் மண்ணுலகிலும் நரகத்திலும் மாறி மாறி உழன்று வருகிருன். இவை யாவும் வினைப்பயனை அனுசரித்து வருகின்றன. மேலும் இவை யாவும் ஜீவனைப் பண்படுத்துதற்கு உதவுகின்றன. பண்பாடு அடையுமளவு புதிய வினைகள் வளர்வதில்லை; பழைய வினை தேய்கிறது. வினை முற்றிலும் ஒழிந்துபோனல் முக்தியுண்டாகிறது. அதுவரையில் ஜீவன் வினைப் பயனுகிய சுகதுக்கங்களை ஏதேனும் ஒருலகில் அனுபவித்தே ஆகவேண்டும். சுவர்க்கம் அல்லது நரகத்தில் அனுபவிப்பது ஒரு சிறு பகுதியேயாம். பாக்கியுள்ள வினைப்பயனுக்கு ஏற்ற புதிய சூழ்நிலையில் பிறக்க மனிதன் மண்ணுலகுக்கு வருகிருன்.

**கேள்வி :** (6) இயற்கைக்கு அப்பாற்பட்டது கடவுள் என்று குறிப்பிடப்படுகிறது. இன்னும் இயற்கையையே மனிதன் பூரணமாக அறிந்துகொள்ளவில்லை. அத்தகையவன் இயற்கைக்கு அப்பால் உள்ளதை எப்படி அறிந்துகொள்வான் ?

அறிவு, மனிதர் எல்லார்க்கும் ஒரே அளவில் அமையவில்லை. பேரறிஞராகவும் சிற்றறிஞராகவும் மனிதர் எக்காலத்திலும் இருக்கின்றனர். இயற்கையைப்பற்றிய ஆராய்ச்சியை ஒரு படித்தரத்தில் நிறுத்தி வைத்துவிட்டு இயற்கைக்கப்பால் தங்களுடைய தீட்டிய பேரறிவைச் செலுத்திக் கடவுளை அறிந்தார்கள் முனிவர்கள். இயற்கைக்குக் கடவுள் தான் மூலப்பொருள். மூலப்பொருளை அறியாது அதன் வெறும் வெளித் தோற்றத்தை எவ்வளவு தான் ஆராய்ந்தாலும் அதற்கு முடிவில்லை. ஆக, கடவுளை அறிகின்றவனே இயற்கையையும் உள்ள படி அறிய வல்லவனாகிறான்.

**கேள்வி :** (7) கண்ணன் புகட்டிய கீதையைக் கேட்டு அர்ஜுனன் ஐயத்தை அகற்றினான்; நல்ல வீரன் ஆனான். அவனுடைய சந்தேகங்களும் அகன்றன. அதே கீதையை நாம் படிக்கிறோம்: கேட்கிறோம்; அதற்கு வியாக்கியானங்களும் பல செய்கிறோம்; ஆனால் அர்ஜுனன் அடைந்த பெருநிலையை நாம் ஏன் அடைவதில்லை ?

அர்ஜுனன் ஒரே தடவை கேட்டான். தனது மனக்குழப்பம் போய்விட்டது என்றான்; பாரமார்த்திக விஷயத்தைப் பற்றிய ஞானம் வந்துவிட்டது என்று இயம்பினான். அருளுக்குப் பாத்திரமாகி உறுதிபெற்றவன் ஆனான். கண்ணன் சொற்படி செயல்புரியவும் ஆயத்தமாயிருந்தான். நாமோ காலமெல்லாம் கீதை பாராயணம் செய்கிறோம்; வியாக்

யானங்களையும் விரிக்கிறோம். ஆனால் ஒரு நன்மையும் அடையப் பெறுதவர்களாயிருக்கிறோம். அப்படி ஒன்றும் அடையாததற்குக் காரணமும் உண்டு. ஒரு நிகழ்ச்சியை இங்கு நினைவுக்குக் கொண்டுவருவோம். பெரிய க்ஷேத்திரம் ஒன்றில் சில பண்டிதர்கள் கூடியிருந்து பகவத் கீதைக்கு விதவிதமான வியாக்கியானங்கள் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது ஆங்கு பாமரன் ஒருவன் ஆனந்த பரவசம் அடைந்தவனாக அமர்ந்திருந்தான். அக்காட்சியைக் காணலுற்ற பண்டிதர்கள் வியப்படைந்தார்கள். "படிப்பு வாசனையில்லாத உனக்கு நாங்கள் பகர்வதில் என்ன புலப்படுகிறது?" என்று வினவினார்கள். "எனக்கு ஒன்றும் புலப்படவில்லை. ஆனால், கண்ணன் பெயரைக் கேட்டமாத்திரத்தில் அவனுடைய கருணாகர முகவிலாசம் என் மனதில் ஆழ்ந்து பிரகாசிக்கிறது. அதினின்று ஊற்றெடுக்கும் ஆனந்தத்தை என்னால் அடக்க முடியவில்லை" என்றான். கல்வியில்லாத அந்தப் பாமரனுக்கு பக்தியிருந்தது. அதனால் ஞானக்கண் வந்துவிட்டது. பக்தி நிறைந்திருப்பவர்களுக்குக் கீதையை ஒருதடவை படித்தால் அல்லது கேட்டால் போதுமானது. வெறும் வாசா ஞானத்தில் மகிழ்வடைபவர்கள் பல ஜன்மங்களில் முயன்றும் அருளுக்குப் பாத்திரமாக மாட்டார்கள். நல்ல ஆத்ம சாதகர்களைக் காண்பது அரிது. அத்தகைய சாதகர்களுக்கே கீதை முழுதும் பயன்படும்.

**கேள்வி : (8)**

அருளால் எவையும்பார் என்றான் – அத்தை
அறியாதேசுட்டிஎன் னறிவாலே பார்த்தேன்,
இருளான பொருள் கண்டதல்லால் – கண்ட,
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி — (13)

அன்றென்றும் ஆமென்றும் உண்டோ – உனக்கு
ஆனந்தம் வேண்டின் அறிவாகிச் சற்றே
நின்றால் தெரியுமெனவே – மறை
நீதியெம் ஆதி நிகழ்த்தினான் தோழி — (30)

தாயுமானவர் ஆனந்தக் களிப்பில் இவ்விரண்டு பாடல்களும் இருக்கின்றன. "அறிவை"ப்பற்றிய கருத்தில் இவ்விரண்டு பாடல்களும் முரண்பட்டவைகளாகத் தோன்றுகின்றன. தயவுசெய்து விளக்கவும்.

*அறிவில் தூய அறிவு என்றும் போலி அறிவு என்றும் இரண்டு கூறுகள் உண்டு. தூய அறிவுக்கு சுத்த சைதன்யம் என்பது வேதாந்த பரிபாஷை. அதை சித் என்றும், பிரக்ஞை என்றும் பகர்வதுண்டு. போலி அறிவைச் சித் ஆபாசம் என்று வேதாந்தம் கூறுகிறது. சூரியப் பிரகாசம் போன்றது சுத்த சைதன்யம். சூரியனிடத்திருந்து வாங்கித் தன்னுடையது போன்று காட்டும் சந்திர வெளிச்சம் போன்றது சித் ஆபாசம். மனிதனிடத்து ஜீவபோதம் இருக்கின்றபொழுது அவன் சித் ஆபாசன் ஆகின்றான். அவனுடைய அறிவு போலி அறிவாகும். போலி அறிவைக்கொண்டு பொருளை உள்ளபடி அறிய முடியாது; பொருள் சிறிது விளங்கியும் விளங்கா*

மலும் போய்விடும். சந்திர வெளிச்சத்துக்குத் தோற்றமும் மறைவும் இருப்பதுபோன்று ஜீவனுடைய அறிவுக்குத் தெளிவும் மயக்கமும் உண்டு. அமாவாசையன்று சந்திரன் வானத்தில் இருந்தும் இல்லாததுபோன்று ஆய்விடுகிறது. மானுட அறிவு விழிப்பு வேளையில் மாத்திரம் உதவுகிறது. உலகையும் தன்னையும் ஓரளவு அறிந்தும் அறியாமலும் அது இருக்கிறது. மயக்கம், உறக்கம் ஆகியவைகளில் தன்னையும் அறிதற்குத் தன் அறிவு பயன்படுகிறதில்லை. இது எல்லா ஜீவர்களின் அனுபவம். ஆகவே மானுட அறிவு நிலையற்றது என்பது உறுதியாயிற்று.

நிலையற்ற கருவி கரணங்களை உடைத்திருக்கும் போதும் மனிதன் அனைத்தையும் அருளால் பார்த்துப் பழக வேண்டும் என்பது கோட்பாடு. சந்திரனும் பூமியும் முன்பு ஒருகால் சூரியனிடத்திருந்தவைகள். அப்பொழுது அவைகள் ஒளிப்பிழம்பாயிருந்தன. இப்பொழுது இருள் மயமாய்விட்டன. திரும்பவும் சூரியனிடத்து அவைகளைப் போட்டுவிட்டால் பழையபடி அவைகள் பிரகாசம் பெற்றுவிடும். அதே விதத்தில் மனிதன் தன்னையும் உலகையும் கடவுள் சொரூபமாகவே கண்டு பழகுவானாகில் அவனுடைய போலி அறிவு மெய்யறிவாக மாறுகிறது. அவனுக்கு மயக்கம் தெளிகிறது. பேரறிவு சொரூபமாக அவன் ஆய்விடுகிறான். பிறகு மயக்கமோ கீழ்மையில் வீழ்ச்சியோ அவனுக்கு இல்லை. பரம்

பொருளில் கலத்தல் என்பதும், முக்தி என்பதும், வீடு என்பதும் அதுவே. ஆக அருளால் எதையும் பார்ப்பது நல்ல சாதனமாகிறது. மானுட அறிவைக் கொண்டு பரதத்துவத்தை ஆராய முயல்வது பயனற்ற முயற்சியாகிறது. அருளால் பார்ப்பது மெய்யறிவு பெறுதற்கு உபாயமாகும். எல்லாம் தெய்வ சொரூபம் என்னும் உணர்ச்சிகொள்ளுதலே அருள் நோக்கமாகும்.

**கேள்வி: (9)** வாழ்க்கையில் நமக்கு ஏதாவது கஷ்டம் வந்துவிட்டால் அல்லது சந்தேகம் வந்துவிட்டால் கோயிலில் பூ வைத்துக்கேட்கிறோம். உண்மையில் கடவுளிடமிருந்து நமக்குப் பூவின் மூலமாக உத்தரவு வருகிறதா?

கோவிலில் பூ வைத்துக் கடவுளுடைய உத்தரவை எதிர்பார்த்து நிற்கும் பழக்கம் பலர்க்கிடையிலிருக்கிறது. பாமரர்க்கிடையில் அதிகமாகவும், கற்றவர்க்கிடையில் குறைவாகவும் இப்பழக்கத்தைக் காணலாம். மனப்பூர்வமாகவே இதில் நம்பிக்கை வைக்கின்றவர்கள் பலபேர் இருக்கின்றனர். ஆனல் இது சாஸ்திரோக்தமானதா, தத்துவத்துக்குப் பொருந்தியதா என்கின்ற ஆராய்ச்சியை அவர்கள் செய்வதில்லை. பூ வைத்துக் கோயிலில் சுவாமியின் உத்தரவு கேட்கும் பலபேர் உண்மையாகவே குழந்தை போன்ற கபடமற்ற நம்பிக்கை உடையவர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய களங்கமற்ற மனப்பான்மை பாராட்டத் தக்கது. அது ஒரு புறம் இருக்க இம்முறையானது ஈசனுடைய திரு

வுளத்துக்கு முற்றிலும் ஒத்ததாயிருக்கிறதா என்பதைத்தான் நாம் ஆராயவேண்டும்.

கோயிலில் பொதுவாக இரண்டுவித நிறமுடைய பூக்களைத் தனித்தனியே கட்டி சுவாமியின் முன்னிலையில் வைப்பார்கள். எண்ணிய எண்ணம் தங்களுக்கு அனுகூலமாக ஆகும் என்ருல் ஒரு நிறப் பூ வரவேண்டுமென்று மனதிற்குள் சங்கற்பித்துக் கொள்வார்கள். பிரதிகூலமாகப் போய்விடுமென்ருல் மற்ருெரு நிறப் பூ கைக்கு வரவேண்டுமென்று நினைத்துக்கொள்வார்கள். இரண்டு கட்டையும் சந்நிதியில் வைத்துப் பூஜை செய்து ஏதேனும் ஒன்றை எடுத்து வரும்படி பூஜாரியிடம் பகர்வார்கள். கைக்கு வரும் பூவை அனுசரித்து கடவுளின் திருவுளம் அல்லது உத்தரவு அத்தகையதென்று அவர்கள் முடிவு கட்டுவார்கள். மற்றும் ஒருமுறையைக் கையாளுபவர்களும் உண்டு. கோயிலில் எழுந்தருளியிருக்கும் விக்கிரகத்தின் தலையில் வெள்ளைப் பூ ஒன்று, சிவப்புப் பூ ஒன்று வைத்துவிடுவார்கள். ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்ய கடவுளுடைய அனுமதியிருக்கிறதென்ருல் வெள்ளைப்பூ கீழே விழவேண்டும் என்று பிரார்த்திப்பார்கள். அனுமதியில்லை என்ருல் சிவப்புப் பூ கீழே விழவேண்டுமென்பார்கள். பிறகு பிரார்த்தனையும் மணியடித்தலும், சில இடங்களில் கொட்டுதலும் நிகழும். பூ வீழ்வதைக் கண்டு தெய்வத்தின் திருவுளத்தை அறிகிருர்கள்.

இதை ஒட்டிய நிகழ்ச்சி ஒன்றை இங்கு தெரிவிப்பது உசிதமாகும். சில வருடங்களுக்கு முன்பு தபோவனத்துக்கு அன்பர் ஒருவர் வந்து சேர்ந்தார். நூறுமைலுக்கு அப்பாலுள்ள ஊர் ஒன்றிலிருந்து பிரயாணம் பண்ணி வந்தவர் அவர். வினயத்துடன் சில விஷயங்களை அவர் வினவினார். அதற்கு விடை தர முடியாது என்றோம். அவர் மனதில் இருந்ததையெல்லாம் தெளிவுபடுத்தி விளக்கும்படி நாம் வேண்டினோம். அவர் கொடுத்த செய்தியின் சாரம் வருமாறு: சுமார் பத்து அல்லது பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு அவர் ஊரிலிருந்து அவருக்குச் சொந்தமாயிருந்த ஒரு சிறுவனும்,சிறுமியும் காணாது போய்விட்டார்கள். வழிப்போக்கர்களாயிருந்த வயிராகிகள் யாரோஅவர்களை அழைத்துக்கொண்டு போயிருக்கவேண்டும் என்பது அவர்களுடைய நம்பிக்கை. கோயிலில் அவர் பூவைத்துக் கேட்டார். அவருக்கு விடையும் கிடைத்தது. அதாவது காவிரிக் கரையில் தென்னந் தோப்புகளுக்கு இடையில் ஒரு ஸ்தாபனத்தில் அவர்கள் வாழ்ந்துவருகிறார்கள் என்பது தெய்வத்திடமிருந்து அவர் பெற்ற தகவல் ஆகும்.

இதையெல்லாம் கேட்டபின் அதில் நம்பிக்கை வைக்கவேண்டாமென்றும் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு காணமற்போன சிறுவர்கள் இப்பொழுது பழைய இடத்தில் வந்து இன்புடன் தங்கியிருக்கும் இயல்பு உடைத்திருக்கமாட்டார்கள் என்

றும் அவர்களை அடையாளம் கண்டுபிடிப்பதும் சாத்தியமல்ல வென்றும் அவருக்குச் சமாதானம் சொல்லி அனுப்பவேண்டியதாயிற்று. கேட்டவர் கபடமற்றவர்; ஏழை நெஞ்சம் படைத்தவர். அவர் போன்றவர்கள் இவ்விதம் நம்பிக்கை வைப்பதைத் தான் ஆங்காங்கு காண்கின்றோம்.

மனிதன் தன் ஆசையால் தூண்டப்பெற்று பல செயல்களைச் செய்கின்றான். கடவுளுடைய துணையையும் அவன் நாடுதல் உண்டு. தொடுத்த கருமம் நிறைவேறுவதுமுண்டு; தோல்வியுறுவதுமுண்டு. எது நிகழ்ந்தாலும் இறுதியில் அது அம்மனிதனுடைய நன்மைக்கேயாம். ஆசையற்றவர்கள் கடவுளாக்ஞைப்படி கருமம் செய்யக் காத்திருக்கின்றனர். அத்தகையவர்களுக்கு தெய்வம் அகத்தே மனச்சாட்சியாகவும் புறத்தே வசதியான சூழ்நிலையாகவும் இருந்து எத்தகைய கருமத்தில் ஈடுபடவேண்டுமென்பதைக் காட்டியருள்கின்றது. இதைத்தான் உண்மையில் தெய்வ சங்கல்பம் என்று சொல்லவேண்டும். முற்றும் தெய்வத்தை நம்பியிருக்கின்றவர்களுக்கு தெய்வத்திடமிருந்து, எதைச் செய்வது, எதைத் தவிர்ப்பது என்ற ஆதேசம் வருகின்றது. பூ வைத்துக் கேட்பது அக்ஞானத்திலிருக்கும் மக்கள் கையாளும் முறை ஆகும். அதைக் கையாளாதிருப்பதே அறிஞர்க்கு அழகு ஆகும். அதில் வரும் அனுகூலம் அல்லது பிரதிகூலமான செயல் வெறும் தற்செயலே. அம்முறையினின்று விவேக வளர்ச்சி உண்

*டாவதை நாம் காண்பதில்லை. உண்மையில் கடவுளைச் சார்ந்திருப்பவர்க்கே விவேகமும் வளர்ந்து கொண்டே வருகிறது.*

**கேள்வி : (10)** புருஷாகாரம் அல்லது மானுடப் பிரயத்தனம் முன்னேற்றத்துக்கு முற்றிலும் இன்றியமையாதது என்பது ஒரு கோட்பாடு. மனிதன் கடவுளைச் சார்ந்திருக்கக் கற்றுக்கொள்ளுதலே வாழ்க்கையின் முடிவான லக்ஷியம் என்பது மற்றொரு கோட்பாடு. இவ்விரண்டு கோட்பாடுகளும் ஒன்றோடொன்று முரண்படுபவைகள் அல்லவா ?

*இரண்டு கோட்பாடுகளையும் தனித் தனியே ஆராய்ந்து பார்ப்போம். பிரயத்தனமில்லாது எவ்வுயிர்க்கும் முன்னேற்றமில்லை. எல்லா உயிர்களும் ஓயாது முயன்று வருகின்றன. முயற்சியின் வலிவுக்கு ஏற்ப முன்னேற்றம் விரைவில் வந்தமைகிறது. மற்ற உயிர்களின் முயற்சியைவிட மனிதனுடைய முயற்சி பன்மடங்கு மேலானது. உலகில் நாம் கண்டு வரும் மாறுபாடுகளனைத்தும் முயற்சியின் பயனேயாம். ஒரு மனிதனுடைய முயற்சி அல்லது சிரத்தை எவ்வளவு பெரியதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் முன்னேறுகிறான் என்று கீதா சாஸ்திரம் பகர்கிறது.*

श्रद्धामयोऽयं पुरुषः यो यच्छ्रद्धः स एव सः

மனிதன் சிரத்தை மயமானவன், சிரத்தை யெதுவோ அதுவே அவனுமாம்.

*இந்த முயற்சியே புருஷாகாரம் எனப்படுகிறது.*

சிரத்தை உடையவனாக வாழ்கின்ற மனிதன் உலகிலே தனித்து வாழ்பவன் அல்லன். சமூகத்தோடு அவன் சம்பந்தப்பட்டவனாக இருக்கிறான். சமூகத்தோடு அவன் வைக்கும் இணக்கமும் அவனுடைய முயற்சியை விளக்குகிறது. மற்றவர்களோடு நல்லிணக்கம் வைப்பது மேலான முயற்சி. மற்றவர்களைப் புறக்கணிப்பது அல்லது அவர்களுக்கு இடைஞ்சல் செய்வது கீழான முயற்சி. மற்றவர்களுக்குத் தடை செய்யுமளவு ஒருவனுடைய வாழ்வு தானே தடைப்பட்டுப்போய்விடுகிறது. மற்றவர்களுக்குத் துணைபுரியுமளவு தனது சொந்த வாழ்வு எங்கிருந்தோ துணையைப் பெறுகிறது. இப் பெரிய பாடத்தைக் கற்றுக்கொள்ள மனிதன் நெடுங்காலம் எடுத்துக்கொள்கிறான். இதைக் கற்றான பிறகு மனிதனுடைய புருஷாகாரம் புதியதொரு வடிவு எடுக்கிறது. பிறர்க்குப் பணிவிடை செய்தலிலேயே அவன் தன்னை மறந்துவிடுகிறான். பிறர் பொருட்டு உழைத்து அவன் பிறர் மயம் ஆய்விடுகிறான். அதாவது தான் வேறு, பிறர் வேறு என்ற வேற்றுமை போய்விடுகிறது. உயிரனைத்தும் ஒரே பேருயிராக அவனுக்குக் காட்சி கொடுக்கிறது. ஆக, மனிதனுடைய பிரயத்தனத்தின் முடிவான நிலை மானுடச் சிறுமையை இழந்து தெய்வீகப் பெருநிலையைப் பெறுதலாம். அனைத்தையும் ஒரே பரம புருஷனைக் காண்கின்ற பெருநிலைக்கு மனிதனைப் புருஷாகாரம் அழைத்துச் செல்கிறது.

இனி, கடவுளைச் சார்ந்திருத்தல் என்னும் கோட்பாட்டை ஆராய்ந்து பார்ப்போம். இது ஆத்ம சமர்ப்பணம் என்றும் பெயர்பெறுகிறது. பிரபத்தி அல்லது சரணாகதி என்றும் இது அழைக்கப்படுகிறது. அடைக்கலம் புகுதல் என்று ஆன்றோர் இக் கோட்பாட்டைப் பகர்கின்றனர்.

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।

தர்மங்களை யெல்லாம் அறவே தியஜித்து
விட்டு என்னையே சரணடைக —

என்று பகவான் கீதையில் பகர்ந்திருக்கிறார். சுயப்பிரயத்தனம் பண்ணுகின்றவர்களுக்கு ஆத்ம சமர்ப்பணம் இல்லையென்றும், ஆத்ம சமர்ப்பணம் பண்ணுகின்றவர்களுக்குச் சுயப்பிரயத்தனம் இல்லையென்றும் வெளித்தோற்றத்துக்குத் தென்படுகிறது. உண்மையில் ஆத்ம சமர்ப்பணம் அல்லது சரணாகதி சுயப்பிரயத்தனத்தின் உச்ச நிலையாகும்.

சுயப்பிரயத்தனம் பண்ணுகின்றவன் கடவுளுடைய துணையைப் புறக்கணிப்பவன் அல்லன். தன் யத்தனத்துக்குக் கடவுள் சகாயம் வேண்டும் என்று அவன் எண்ணுகிறான். மற்ற உயிர்களின் ஆதரவும் வேண்டுமென்று அவன் நினைக்கிறான்.

இத்தகைய எண்ணத்துடன் பிரயத்தனம் பண்ணுகின்றவன் நாளடைவில் தன்னுடைய சொந்த ஆசாபாசங்களை யெல்லாம் ஒதுக்கிவிடுகிறான். ஈசுவர சங்கல்பத்துக்கு ஒப்ப முயலுதல் தன் கடமை




யென்று உணர்கின்றான். பிறகு தன் முயற்சியும் கடவுளிடத்திருந்தே வருகிறது என்று அறிகிறான். கடவுள் ஆட்டுபவர், ஜீவன் ஆடுபவன்; கடவுள் கர்த்தா, ஜீவன் கருவி. கடைசியில் தான் கருவி என்கிற எண்ணமும் அவனை விட்டுப் போய்விடுகிறது. கர்த்தாவாக இருப்பவரும் கருவியாக இருப்பவரும் அவரே என்ற எண்ணம் வந்துவிடுகிறது. அந்த எண்ணம் ஓங்குமளவு ஜீவனுடைய செயல்களெல்லாம் செயற்கரிய பெருஞ் செயல்களாய்விடுகின்றன. உண்மையில் அவன் வாயிலாக ஈசுவரக் கிருத்தியமே நடைபெறுகிறது.

தோற்றத்தளவில் முரண்படுகின்ற சுயப்பிரயத்தனமும் ஆத்ம சமர்ப்பணமும் ஆதிமுதல் அந்தம் வரையில் ஜீவபோதத்தை அழித்துவிடுவதற்கென்றே அமைந்தவைகளாய்விடுகின்றன. தன் முயற்சியில் மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு தான் தனது என்பனவற்றை மற்றவைகளுக்காகவென்று ஒப்பிக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் முன்னேறுகிறான். அதாவது அவனது ஜீவபோதம் தேய்கிறது; பரபோதம் வளர்கிறது. ஆத்ம சமர்ப்பணத்தின் வாயிலாகவும் எல்லாம் ஈசன் செயல் என்று கர்மம் செய்வதின் வாயிலாகவும் ஜீவபோதம் தேய்கிறது; பரபோதம் வளர்கிறது. உண்மையில் இருப்பது பரமபுருஷன் ஒருவனே. அவனுடைய எண்ணிறந்த தோற்றங்கள் ஆகின்றன இத்தனை உயிர்களும். தன் முயற்சியில் தன்னை

அனைத்துமாய்க் காண முயலுவது புருஷாகாரம். அனைத்தையும் அவன் மயமாய்க் காணுவது ஆத்ம சமர்ப்பணம். ஆக, பெயரளவில் இவை முரண்படுபவைகளாகத் தென்படுகின்றன. புருஷாகாரத்தை ஞானசாதனம் என்றும், ஆத்ம சமர்ப்பணத்தை பக்தி சாதனம் என்றும் சௌகரியத்துக்காகச் சொல்லலாம். உண்மையில் ஞான சாதனம் வேறு பக்தி சாதனம் வேறு அல்ல. ஜீவப் பிரயத்தனத்தில் பெரிய பிரயத்தனம் தன்னைப் பரமாத்மாவிடத்தில் கொடுத்துவிடுதலாம். ஆக, புருஷாகாரமே ஆத்ம சமர்ப்பணம் ஆய்விடுகிறது. செயற்கரிய செயல் என்று இதைப் பகரவேண்டும்.

> செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார்.

**கேள்வி: (11)** கடவுள் பாரபக்ஷமற்றவர் என்று எல்லாரும் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால் எங்கு நோக்கினும் ஏற்றத் தாழ்வுகள் ஏராளமாக இருக்கின்றன. 'முன் வினைப்பயன்' என்று பகராது பதில் அளித்தல் வேண்டும்.

ஏற்றத் தாழ்வு சிருஷ்டிக்கு முற்றிலும் அவசியம். எல்லாம் ஒரே விதமாக சிருஷ்டிப்பது என்பதில் பொருள் இல்லை. எல்லாம் ஒரேவிதமாக இருப்பதும், சம்ஹாரம் ஆவதும் ஒன்றேயாம். அயர்ந்து தூங்குகிற நிலையில் ஏற்றத் தாழ்வு இல்லை. அந்நிலை பிரளயத்துக்கு ஒப்பானது. விழித்துக் கொண்டவுடன் மனப்பான்மையிலும், ஆற்றலிலும்,

செயலிலும் ஏற்றத் தாழ்வு காண்கின்றோம். ஆசிரிய ரிடத்து ஏற்றமும், மாணக்கனிடத்துத் தாழ்வும் இருப்பது இயல்பு. மாணக்கனும் ஆசிரியனும் ஒரே தரத்தில் இருந்துவிட்டால் புகட்டுகிற வேலையும் இல்லை; கற்கிற வேலையும் இல்லை. அறிவில் இங்ஙனம் ஏற்றத் தாழ்வு இருப்பதுதான் இயற்கையின் அமைப்பு. ஆற்றலை இனி எடுத்துக்கொள்வோம். வேலை செய்வதில் எல்லோருக்கும் ஒரே விதமான திறமை கிடையாது. அனுபவப்பட்டவர்களுக்கு அதிக திறமையும், அனுபவம் இல்லாதவர்களுக்குக் குறைந்த திறமையும் இருப்பது இயல்பு. வயதும் அதற்கு ஒரு காரணமாகிறது. இளையவர்களுக்கு ஆற்றல் குறைந்து உள்ளது. முதியோர்களுக்கு அது மிகைபட இருக்கிறது. அதற்குமேல் அறிவையும் சாமர்த்தியத்தையும் அடிப்படையாகக் கொண்டு சிலர்க்கு ஆற்றல் ஓங்குகிறது. சிலருக்கு அது நிதான மாக வருகிறது. ஆற்றலில் உள்ள ஏற்றத் தாழ்வே முயற்சிக்குத் தூண்டுதல் தருகிறது. பந்தயம் ஓடுகிற வர்கள் எல்லார்க்கும் ஒரேவிதமான ஆற்றலிருந்தால் பந்தயம் ஓடுதலில் பொருள் இல்லை. முயற்சிக்கும் ஆங்கு இடமில்லாது போய்விடுகிறது. பந்தய விளை யாட்டில் சுவையும் இல்லாது போய்விடும். வாழ்வே பந்தயம் போன்றது. ஒருவனிடத்து அதிக அறிவும் ஆற்றலும் இருப்பது மற்றொருவனுக்குத் தூண்டு தலை உண்டுபண்ணுகிறது. சில வேளையில் பொரு மையை உண்டுபண்ணிவிடலாம். பொருமையும் ஒரு

விதத் தூண்டுதலேயாம். ஆனால் அது எதிர்மறைத் தூண்டுதலாகிறது. இயற்கையினுடைய நடை முறையைத் துருவி ஆராய்ந்து பார்த்தால் ஏற்றத் தாழ்வே எல்லா விதமான இயக்கங்களுக்கும் மூல காரணமாக அமைகிறது என்பது விளங்கும். மலை ஏற்றமாகவும் கடல் தாழ்வாகவும் அமையாது போய் விட்டால் நதி ஓடமுடியாது. நதி ஓடாவிட்டால் மண்ணுலக வாழ்வே தடைப்பட்டுவிடும். வேற்றுமையே விதவிதமான அனுபவங்களை உண்டுபண்ணுகிறது. மனிதனுக்கு வெற்றியும் பாடம் புகட்டுகின்றது; தோல்வியும் பாடம் புகட்டுகின்றது. வெற்றி தோல்வி என்ற ஏற்றத் தாழ்வு இல்லாது போய்விட்டால் மனிதன் பண்பாடு அடைவதற்கு இயற்கையானது வேண்டிய வசதிகளெல்லாம் செய்துவைக்கவில்லை என்று முடிந்துவிடுகிறது.

நம் கைவிரல்கள் நீண்டும் குறுகியும் இருக்கின்றன. விரல்களிடத்து நாம் பக்ஷபாதம் வைத்திருக்கிறோம் என்று அதிலிருந்து முடிவுகட்டலாகாது. விரல்கள் நீண்டும் குறுகியும் இருப்பதே விதவிதமான வினையாற்றுதற்கு ஏற்ற அமைப்பு ஆகிறது. நம் உடலமைப்பில் காலை ஒருவிதமாக, தலையை இன்னொரு விதமாக அமைத்துக்கொண்டதை பக்ஷபாதம் என்று பகரலாமா? அவயவ அமைப்பில் இந்த வேறுபாடுகள் இருந்தே ஆகவேண்டும். இல்லாவிடில் நம் உடல் வாழ்வு நன்கு நிகழாது. நம் உடல் அமைப்பிலுள்ள உயர்வு தாழ்வே இயற்கை அமைப்பிலும்

உண்டு. உயர்வு தாழ்வு இல்லாவிட்டால் சிருஷ்டியில்லை; சிருஷ்டியில்லாவிட்டால் அனுபவம் இல்லை; அனுபவம் இல்லாவிட்டால் முன்னேற்றம் இல்லை. முன்னேற்றமடையாதவர் ஞானமில்லா ஜடப்பொருளுக்கு ஒப்பானவர் ஆய்விடுகின்றனர். ஜடப்பொருளை ஜட நிலையிலேயே வைத்திருப்பது இயற்கையின் திட்டமன்று. ஜடப்பொருளைச் சேதனப் பொருளாக அல்லது அறிவு நிறைந்த உயிராக மாற்றியமைப்பது இயற்கையின் திட்டம். ஓர் உயிர் விரைவில் முன்னேற்றம் அடைகின்றது. மற்றொன்று நிதானமாக முன்னேற்றம் அடைகின்றது. அதைத் தான் நாம் ஏற்றத் தாழ்வு என்கின்றோம். உண்மையில் அது பாரபக்ஷமன்று. ஆக, உள்ள அமைப்பு உத்தமமான அமைப்பு ஆகிறது. கடவுள்மீதோ இயற்கையின்மீதோ குறை கூறுதற்கு இடமில்லை.

**கேள்வி: (12)** புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவதால் பாபம் நீங்குகிறது என்று சொல்லுகின்றனர். பின்பு புண்ணிய க்ஷேத்திரங்களில் போய் பாபம் செய்தால் அப்பாபம் பன்மடங்கு அதிகரிக்கிறது என்கின்றனர். இது முரண்பாடு அல்லவா? பாபம் செய்யும் தௌர்ப்பாக்கியவான்கள் புண்ணிய க்ஷேத்திரத்துக்குப் போகாமலே இருந்துவிடுவது நலமல்லவா?

எந்த இடம் நல்வாழ்வுக்கும் தூய எண்ணத்துக்கும் துணைபுரிகிறதோ அது புண்ணிய க்ஷேத்திரமாகும். இயற்கையின் வசதியும், மனிதனுடைய சத்கர்மமும், தெய்விக எண்ணங்களும் சேர்ந்து ஒரு

இடத்தைப் புண்ணிய க்ஷேத்திரம் ஆக்கிவிடுகின்றன. நல்லார் வசிக்குமிடமே நாளடைவில் புண்ணிய க்ஷேத்திரமாகிவிடுகிறது. அத்தகைய சூழ்நிலே பின்னும் வருகிற ஆத்ம சாதகர்களுக்கு அனுகூலமான இடமாகும். ஆகவே, அதன் புண்ணிய விசேஷம் பெருகிக்கொண்டே போகிறது. நலம் தருகிற ஓர் இடத்தை நல்ல காரியத்துக்கே பயன்படுத்த வேண்டும். அதிலிருந்துதான் நன்மையடைய வேண்டும் என்ற ஆர்வமும் ஒருவனுக்குத் தேவையாகிறது. அத்தகைய மனப்பான்மையும் நம்பிக்கையும் உடையவர் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவதால் விரைவில் மனபரிபாகம் அடைகின்றனர்.

இயல்பாகவே புனிதம் வாய்க்கப்பெற்ற புனல் கங்கா நீர். அதில் நீராடுவதால் உடல் சுத்தியடைகிறது. வேறு நலன்கள் உடலுக்கும் உள்ளத்துக்கும் உண்டாகின்றன. அப்புண்ணிய நதிக்குள் ஒருவன் மலம் கழித்து அழுக்குப் பண்ணிவிடுவானுகில் அது தனக்கும் கேடு, மற்றவர்க்கும் கேடு, நதியும் தோஷமுடையதாகிறது. கங்கையுடன் தொடர்வு வைக்க வேண்டும். ஆனுல் கங்கையை அழுக்குப்படுத்தலாகாது. அதை அழுக்குப்படுத்தியவன் பன்மடங்கு கேடு செய்தவன் ஆகிருன்.

எதிரொலி கேட்குமிடத்தில் நமது சொல்லே திரும்பவும் நமக்கு வருகிறது. வினைப்பயனை விரைவில் கொண்டுவர வல்லது புண்ணிய க்ஷேத்திரம். ஆங்கு மனிதன் எதை எண்ணுகிருனே அது பன்

மடங்கு வலிவுடையதாக விரைவில் அவனிடம் திரும்பி வருகிறது. மேலான எண்ணம் பன்மடங்கு மேம்படுகிறது; கீழான எண்ணமும் அப்படியே ஆகிறது. அதை எண்ணியவனுக்கே சொந்தமாகப் பிறந்த அவனிடம் விரைவில் திரும்பி வந்துவிடுகிறது. அவரவர் வினையின் பயன் பன்மடங்கு வலிவுடைய தாக அவரவர்க்கு வந்து சேருகிறது. புண்ணியம் பன்மடங்காகப் பெருகுவது போன்று பாபமும் ஆங்கு வலுக்கிறது.

நான் பாபம் செய்யும் பாங்குடையோன் என்று மனிதன் தன்னைச் சிறுமைப்படுத்தி எண்ணிக்கொண்டிருக்கலாகாது. அதனால் அவன் அதிகமாகவே சிறுமைப்படுவான். நலமே செய்யத் துணியவேண்டும். அதற்கு அனுகூலமான சூழ்நிலையையும் நாடவேண்டும். புண்ணிய க்ஷேத்திரம் மிக அனுகூலமான சூழ்நிலை என்பதை நல்லார் அதிவிரைவில் அறிகின்றனர். மற்றவர்களும் அத்தகைய உறுதியான மனப்பான்மையுடன் ஆங்குச் சென்று அது தருகிற உதவியைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். இயற்கையினின்று மனிதன் எத்தனையோ விதமான உதவிகளைப் பெறுகிறான். அவைகளுள் புண்ணிய க்ஷேத்திரங்கள் வழங்கும் அருள்நிலை மிக மேலானது. கெட்ட மனமுடையவர்க்குக் கேடான வினைப்பயனை விரைவில் உண்டுபண்ணிவிடுதல் என்னும் ஆபத்து இருக்கிறது. ஆதலால் தீய செயல் எதையும் அவன் ஆங்குச் செய்யலாகாது. நல்ல மனமுடையவர்க்கு

நலமே ஓங்குதல் அதன் சிறப்பு ஆகும். கேட்டைத் தவிர்த்து நலத்தை விரைவில் அடைந்திட மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும். புண்ணிய க்ஷேத்திரத்தைப் புண்ணியத்துக்கென்றே பயன்படுத்த வேண்டும்.

**கேள்வி : (13)** மாறுபட்ட மனப்பாங்குடைய பாரத மக்களை ஒன்றுசேர்க்க ஒரு சிறந்த விளக்கமான திட்டம் யாது?

மாறுபாடு இயற்கையின் அமைப்பு ஆகும். மாறுபாடு இல்லையெனில் சிருஷ்டியில்லை. உடல் அமைப்பிலோ, மன அமைப்பிலோ, வாழ்க்கை முறையிலோ இரண்டுபேர் ஒரேவிதமாக இருக்கமுடியாது. எங்கு பார்த்தாலும் கண்கூடாக விளங்கும் மாறுபாட்டை நாம் அங்கீகரித்தே ஆகவேண்டும். மாறுபாட்டின் உச்சநிலையை பரதகண்டத்திலே காணலாம். உலகெங்குமுள்ள வேறுபாடுகளெல்லாம் ஒன்று கூடியது இந்த நாடு என்றால் அது மிகையாகாது. இன வேறுபாடு, நிறவேறுபாடு, மதவேறுபாடு, சமய வேறுபாடு, சமூகப் பழக்கவழக்க வேறுபாடு, மொழி வேறுபாடு இவைபோன்ற எண்ணிறந்த வேறுபாடுகள் உண்டு.

இயற்கையைப் போற்றுதல் என்பது அதன்கண் உள்ள மாறுதலை ரசித்தலாம். அதை மாற்ற யாராலும் முடியாது; மாற்ற முயலுபவர் வீணே வருந்தியவர் ஆவர். மாறுபாட்டை அங்கீகரித்துக் கொள்ளுதல் வாழ்க்கையின் முதல் பாடமாகும். ஒரு

குடும்பத்துக்குள் இருப்பவர் எல்லார்க்கும் ஒரேவித மனப்பான்மையில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வித எண்ணமும் கொள்கையும் உடையவர் ஆகின்றனர். ஆயினும் குடும்பத்துக்குள் அன்பு உண்டு, ஒற்றுமையுண்டு. பிறர் கொள்கைக்கு அனுமதி கொடுப்பது அன்பின் அறிகுறி. கொள்கையில் வேறுபடுபவனை வெறுப்பது வெறியின் அறிகுறி. வெறி கொண்டவன் தனக்கும் நலம் செய்ய முடியாது; உலகுக்கும் நலம் செய்ய முடியாது. நமக்கு நாம் நல்ல கொள்கை கொண்டிருத்தல் வேண்டும். அதை நன்கு கடைப்பிடிக்கவும் வேண்டும். இதே கொள்கைச் சுதந்திரத்தை மற்றவர்க்கும் கொடுக்கவேண்டும். உலகில் எல்லாக் கொள்கைக்கும் இடமுண்டு. அன்புடன் நலன் அனைத்தையும் ஆமோதித்து அவைகளுக்கு இடந்தருதலே நல்ல திட்டமாகும். நம் நாடு இம்முறையை என்றைக்கும் கடைப்பிடித்து வந்துள்ளது. இதைவிட மேலான திட்டம் ஒன்றை மனதால் எண்ணவும் நமக்கு இயலாது. கேடுகள் சமுதாயத்தில் இருந்தால் தகுந்த பிரசாரம் செய்து அக்கேடுகளை நீக்க முயற்சியெடுத்துக் கொள்ளலாம்.

**கேள்வி : (14)** நம் நாட்டில் கபீர்தாஸ் முதல் காந்திஜி வரை ஹிந்து—முஸ்லீம் ஒற்றுமைக்காக சேவை செய்தும் அக்காரியம் சித்தியடையாமல் கடைசியாக நாட்டிற்கே கேட்டையும் விளைவித்தது. இதற்குக் காரணம் யாது ?

இந்தியாவினுள் எல்லாவிதமான சமுதாயங்களும் குடியேறின. வெல்லுதற்கு வந்தவர்கள்,

வியாபாரத்துக்காக வந்தவர்கள், வாழ வந்தவர்கள் ஆகிய எல்லா விதமான பாங்குடையவர்களும் இங்கு இருக்கிறார்கள். இது இந்தியாவின் தனிச் சிறப்பு ஆகும். உலகத்தில் உள்ள எல்லாவிதமான மக்களையும் ஒன்றுசேர்த்து இந்தியாவில் காணலாம். அத்தனைவித மக்களுக்கிடையில் சண்டை சச்சரவு இல்லாப்பான்மை பலர்க்கிடையில் வந்துவிட்டது. குடியேறியவர்களுள் பெரிய போராட்டம் இந்து-முஸ்லீம்களுக்கிடையில்தான் நெடுநாளாக இருந்து வருகிறது. முஸ்லீம்கள் இந்தியாவுக்குள் வந்து சுமார் ஐந்நூறு வருஷங்கள் ஆய்விட்டன. ஒரு நாட்டுக்கு ஐந்நூறு வருஷம் நெடுங்காலம் ஆகாது. தனி மனிதனுடைய ஜீவிதத்தில் ஒரு மாதம் எவ்வளவோ அவ்வளவுதான் ஐந்நூறு வருஷம் என்பது ஒரு சமுதாயத்துக்கு. இதற்குள்ளாக மனப்பான்மையில் எவ்வளவோ முன்னேற்றம் வந்திருக்கிறது. இன்னும் இருநூறு வருஷங்களுக்குள் இதைவிடப் பன்மடங்கு அதிகமான மனம் மாறுதல் வந்துவிடும். கபீர்தாஸ், காந்திஜி போன்றவர்கள் முன் மாதிரியாக அமைந்தவர்கள். அவர்கள் வழியைப் பின்பற்றி எதிர்கால சமுதாயம் நிச்சயமாக அமைந்துவிடும். இப்பொழுது கேடு என்று நாம் பகர்வது தவிர்க்கமுடியாத நிலையாகும். உலக வாழ்வில் கேடுகள் பல இருக்கின்றன. அவைகளைச் சமாளிப்பதும் ஒருவிதப் பயிற்சியாகும். எதிர்கால இந்தியாவில் இந்து-முஸ்லீம் ஒற்றுமை ஏற்பட்டே ஆகும். இரு

*தரத்தாருடைய நன்மையை முன்னிட்டு அவர்கள் ஒற்றுமை பண்ணிக்கொள்வார்கள்.*

**கேள்வி:** (15) ஆத்மாவுக்கு ஆதியில்லை, அந்தமில்லை, இன்ப துன்பமில்லை, பிறப்பு இறப்பு இல்லை என்பது ஒரு கோட்பாடு. வினைப்பயனுக்கு ஏற்ப அது சுவர்க்கத்தையும் நரகத்தையும் மண்ணுலக வாழ்க்கையையும் ஓயாது எடுத்துக்கொண்டிருப்பது என்பது மற்றொரு கொள்கை. இவ்விரண்டையும் சமரசப்படுத்துவது எப்படி?

*புளியங்காய் மேல் ஓட்டில் பற்று உடையதாயிருக்கிறது. புளியம்பழத்துக்கு மேல் ஓட்டில் பற்று இல்லை. அங்ஙனம் பக்குவப்படாத ஆத்மா பிரகிருதியில் கட்டுண்டு கிடக்கிறது. பிரகிருதியில் கட்டுப்பட்டு இருக்கும்போது அதற்கு வினைப்பயன் உண்டு. வினைப்பயனுக்கு ஏற்ப அது மண்ணுலகில் பிறக்கிறது, சுவர்கத்துக்குப் போகிறது, நரகத்துக்கும் போகிறது. இப்படிக் கணக்கற்ற பிறவிகள் வாயிலாக ஆத்மாவானது தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்கிறது. பக்குவம் அடைந்து வர வர வினைத் தளையினின்று விடுபடுகிறது; முக்தியடைகிறது. முக்தியடைந்தபின் தன் பிறவிகளைப்பற்றி விசாரித்துப் பார்த்தால் அதெல்லாம் வெறும் மனோ கற்பிதத்தால் வந்தது என்பது விளங்குகிறது. பிறவாத, இறவாத, மாறுபாடு அடையாத ஆத்மா தான் பிறந்ததாக, இறந்ததாக, பல பிறவிகள் எடுத்ததாக எண்ணி மயக்கமடைந்தது. உண்மையில் அத்தகைய*

மாறுதல் ஒன்றும் அதற்கு வரவில்லை. கண்ணாடியில் தென்படுகிற பிம்பங்கள் கண்ணாடியில் ஒட்டுவதில்லை. வினையும் வினைப்பயனும் ஆத்மாவை ஒட்டுவதில்லை. ஆக, அக்ஞான நிலையில் தன்னிடத்து மாறுதல் இருப்பதாக அது எண்ணிக்கொள்கிறது. ஞானம் வரும்போது தன்னைப்பற்றிய உண்மை வெளியாகிறது.

**கேள்வி: (16)** டில்லியில் நிர்வாணமாக சாதுக்கள் ஊர் வலம் போகின்றார்களாம். சிவலிங்க வழிபாட்டில் கீழான கருத்து இருக்கிறதாம். இப்படியெல்லாம் Life, The Readers Digest ஆகிய அமெரிக்கப் பத்திரிகைகள் நம் நாட்டுப் பழக்க வழக்கத்தைத் தாக்கி எழுதியிருக்கின்றன. இதற்குத் தகுந்த பதில் சொல்லுவது ஹிந்துக்களின் கடமையல்லவா? சிவபெருமானை லிங்க ரூபமாக வழிபடுவதன் பொருள் என்ன?

*ஹிரிஷீகேசம் போன்ற க்ஷேத்திரங்களில் நாகா சாதுக்கள் பெருங் கூட்டமாக நிர்வாணமாக ஊர் வலம் போவதுண்டு. அவர்கள் உடையணியாது இருந்து பழகி வருகின்றனர். தாங்கமுடியாத பனியிலும் உடலிலே துணிபோட்டுக்கொள்வதில்லை. உலக மக்களுக்கிடையில் வரும்பொழுதும் உடலை மூடுவதில்லை. இது அநாகரிகமானது என்று ஒரு கூட்டத்தாருக்குத் தென்படலாம். அந்தச் சாதுக்களின் அடிப்படைக் கருத்தை ஆராய்ந்து பார்ப்போம். சிறு குழந்தைகள் நிர்வாணமாக இருக்கின்றன.*

அதைக்குறித்து அவைகள் வெட்கப்படுவதில்லை. தேகாத்மபுத்தி அல்லது உடல் உணர்ச்சி வருகின்ற போது சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் வெட்கம் வந்துவிடுகிறது. உடலை உடையால் மறைத்து வைக்கும் எண்ணம் ஏற்படுகிறது.

திரும்பவும் உடல் உணர்ச்சியைத் தாண்டி அப்பால் செல்லுவது ஞானியின் குறிக்கோள். உடல் உணர்ச்சி இருப்பவனுக்கு ஞானம் இல்லை. ஏசு நாதரும் இக்கோட்பாட்டைப் பகர்ந்திருக்கிறார். உடலுணர்ச்சியைக் கடந்து செல்லுதற்கு நிர்வாண மாக இருக்க வேண்டும் என்னும் அவசியமில்லை. ஆயினும் அது ஒரு சாதனம் என்பதைப் பெரியோர் அங்கீகரித்திருக்கின்றனர். சாதுக்கள் நிர்வாண மாக ஊர்வலம் போவது காட்சிக்குக் காட்டுமிராண் டித்தனம் எனினும் கொள்கையில் அது மேலானது. அவர்களுடைய மனப்பான்மை கீழ்த்தரமானதன்று. மனப்பான்மையினின்றே ஒரு செயலின் மேன்மை யையும் கீழ்மையையும் பொருள்படுத்தவேண்டும்.

அமெரிக்காவில் நிர்வாணமாகக் களியாட்டங் கள் நடப்பதுண்டு. அதைப் பார்க்கப் பலபேர் பொருள் கொடுத்துப் போகின்றனர். உடல் இன் பத்தை ஒட்டிய கீழான உணர்ச்சியை உண்டுபண்ணு வது அதன் நோக்கமாகும். அதனோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியர் செய்யும் செயலில் மேன்மை யையே யாண்டும் காணலாம்.

*மாறுதல் ஒன்றும் அதற்கு வரவில்லை. கண்ணாடியில் தென்படுகிற பிம்பங்கள் கண்ணாடியில் ஒட்டுவதில்லை. வினையும் வினைப்பயனும் ஆத்மாவை ஒட்டுவதில்லை. ஆக, அக்ஞான நிலையில் தன்னிடத்து மாறுதல் இருப்பதாக அது எண்ணிக்கொள்கிறது. ஞானம் வரும்போது தன்னைப்பற்றிய உண்மை வெளியாகிறது.*

**கேள்வி: (16)** டில்லியில் நிர்வாணமாக சாதுக்கள் ஊர் வலம் போகின்றார்களாம். சிவலிங்க வழிபாட்டில் கீழான கருத்து இருக்கிறதாம். இப்படியெல்லாம் Life, The Readers Digest ஆகிய அமெரிக்கப் பத்திரிகைகள் நம் நாட்டுப் பழக்க வழக்கத்தைத் தாக்கி எழுதியிருக்கின்றன. இதற்குத் தகுந்த பதில் சொல்லுவது ஹிந்துக்களின் கடமையல்லவா? சிவபெருமானை லிங்க ரூபமாக வழிபடுவதன் பொருள் என்ன?

*ஹிரிஷீகேசம் போன்ற க்ஷேத்திரங்களில் நாகா சாதுக்கள் பெருங் கூட்டமாக நிர்வாணமாக ஊர் வலம் போவதுண்டு. அவர்கள் உடையணியாது இருந்து பழகி வருகின்றனர். தாங்கமுடியாத பனியிலும் உடலிலே துணிபோட்டுக்கொள்வதில்லை. உலக மக்களுக்கிடையில் வரும்பொழுதும் உடலை மூடுவதில்லை. இது அநாகரிகமானது என்று ஒரு கூட்டத்தாருக்குத் தென்படலாம். அந்தச் சாதுக்களின் அடிப்படைக் கருத்தை ஆராய்ந்து பார்ப்போம். சிறு குழந்தைகள் நிர்வாணமாக இருக்கின்றன.*

அதைக்குறித்து அவைகள் வெட்கப்படுவதில்லை. தேகாத்மபுத்தி அல்லது உடல் உணர்ச்சி வருகின்ற போது சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் வெட்கம் வந்துவிடுகிறது. உடலை உடையால் மறைத்து வைக்கும் எண்ணம் ஏற்படுகிறது.

திரும்பவும் உடல் உணர்ச்சியைத் தாண்டி அப்பால் செல்லுவது ஞானியின் குறிக்கோள். உடல் உணர்ச்சி இருப்பவனுக்கு ஞானம் இல்லை. ஏசுநாதரும் இக்கோட்பாட்டைப் பகர்ந்திருக்கிறார். உடலுணர்ச்சியைக் கடந்து செல்லுதற்கு நிர்வாணமாக இருக்க வேண்டும் என்னும் அவசியமில்லை. ஆயினும் அது ஒரு சாதனம் என்பதைப் பெரியோர் அங்கீகரித்திருக்கின்றனர். சாதுக்கள் நிர்வாணமாக ஊர்வலம் போவது காட்சிக்குக் காட்டுமிராண்டித்தனம் எனினும் கொள்கையில் அது மேலானது. அவர்களுடைய மனப்பான்மை கீழ்த்தரமானதன்று. மனப்பான்மையினின்றே ஒரு செயலின் மேன்மையையும் கீழ்மையையும் பொருள்படுத்தவேண்டும்.

அமெரிக்காவில் நிர்வாணமாகக் களியாட்டங்கள் நடப்பதுண்டு. அதைப் பார்க்கப் பலபேர் பொருள் கொடுத்துப் போகின்றனர். உடல் இன்பத்தை ஒட்டிய கீழான உணர்ச்சியை உண்டுபண்ணுவது அதன் நோக்கமாகும். அதனோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியர் செய்யும் செயலில் மேன்மையையே யாண்டும் காணலாம்.

சிவலிங்க வழிபாட்டில் இரண்டு தத்துவங்கள் புதைந்து கிடக்கின்றன. ஒன்று கடவுளுக்கு அவயவம் இல்லை. குணம் குறியற்றது அது என்பதை விளக்குகிறது. மற்றது அது குறியின் சின்னமாகும். சிவமும் சக்தியும் சேர்ந்து இயற்கையாகப் பரிணமிக்கிறது என்பது அதன் கோட்பாடு. உயிர்கள் தோன்றுவதும் ஆண் பெண்ணின் சேர்க்கையாலே என்பதையும் அது குறிக்கிறது. இந்தச் சின்னத்தில் கீழ்மை காண்போர் தங்கள் உடல் சொரூபமே கீழ்மையின் தோற்றம் என்பதைமறந்துவிடலாகாது. கீழான செய்லின் விளைவாகவே இத்தனை விதமான உடல்கள் தோன்றியிருக்கின்றன. அதைக்குறித்து மேன்மகன் வெட்கப்படவேண்டும். அப்படி வெட்கப்படுதற்குப் பதிலாக உடலைப் பாராட்டுதலிலேயே அவன் கண்ணும் கருத்துமாயிருக்கிருன். அவன் கீழ்மையைப் போற்றுகிருன் என்று பொருள்படுகிறது. ஒரு மனிதனைப் பார்த்த உடனே இவன் ஆண் பெண்ணின் சேர்க்கையின் விளைவு என்ற கீழான கருத்து நம் மனதில் உதிப்பதில்லை. இம் மனிதன் எத்தகைய பரிபாகமுடையவன் என்பதையே நாம் பெரிதும் கருத்தில் எடுத்துக்கொள்கிரேம். மேன்மகன் ஒருவனைச் சந்திக்கும்பொழுது அவனுடைய மேன்மையே நமக்கு யாண்டும் ஞாபகத்துக்கு வருகிறது.

சிவலிங்கம் சிவசக்தியின் சேர்க்கைக்குச் சின்னம் என்ருலும் அதை வணங்குகின்றவர்களுடைய

*உள்ளத்தில் கீழான எண்ணம் ஒன்றும் உதிப்ப தில்லை; கணக்கற்ற மேலான எண்ணங்களே உதிக் கின்றன. அத்தெய்வம் எல்லாம் வல்லது, எங்கும் நிறைந்தது, உயிர்க்குயிராயிருப்பது, அதனிடத் திருந்தே அண்டம் யாவும் பிண்டம் யாவும் தோன்றி வந்துள்ளன என்ற எண்ணங்கள் தான் வழிபடுபவர் கருத்தில் உதிக்கின்றன.*

*இந்திய மக்களைச் சிறுமைப்படுத்த வேண்டு மென்று பிரசாரத்துக்காக எழுதிய அவதூறு நிறைந்த கட்டுரைகளைக் கண்டு நாம் மனம் கலங்கி விடலாகாது. செடியில் முள் இருப்பது போன்று ஒவ்வொரு சமுதாயத்திலும் நலமும் கேடும் தென் படலாம். கேட்டைப் பொருள்படுத்தாது நலத்தையே நாடுவது நல்லோர் இயல்பு. கேடில்லாத சமுதாயம் உலகில் இல்லை. நமது சமுதாயத்தை ஆராய்ந்து பார்த்தாலோ பழக்கவழக்கத்திலும் மனப்பான்மை யிலும் வேறு எந்த சமுதாயத்துக்கும் பின் வாங்கிய தல்ல என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.*

**கேள்வி: (17)** சில வைதிக அந்தணர்கள் வேத தர்மத்தை மீண்டும் உறுதிபெறச் செய்யவேண்டும் என்ற நோக் கத்துடன் பசுவதை (பசு: ஆடு) யுடன் கூடிய யாகத் தைச் சிற்சில இடங்களில் செய்து வருகின்றனர். ராஜகிருஹத்தில் பிம்பிசார மன்னனுடைய யாகசாலை யில் ஆடொன்றின் உயிரைக் காப்பாற்றத் தமது உயிரைத் தியாகம் செய்ய முன்வந்த புத்த பகவான்

வாழ்ந்த இந்நாட்டிலே இவ்வாறு நடைபெறுவது பொருத்தமாகுமா?

பழையது ஒன்றுக்கு பெரிய மதிப்புக்கொடுப்பது மானுட இயல்பு. மிகப் பழைய பழக்க வழக்கங்கள் பார்உலகில் பல இடங்களில் மறைந்துபட்டுப்போகாது இருப்பதை ஆங்காங்கு காணலாம். அப்படி அவைகள் காக்கப்படுகின்றன வெனினும் அவை யாவும் போற்றத்தக்க பெரும் செயல்கள் அல்ல என்பதும் துருவி ஆராய்கின்ற அறிவுடையோர்க்கு விளங்கும்.

பழையதை முன்னிட்டுப் பெரிய மதிப்புப் பெற்றிருப்பவைகளில் ஒன்று வேதம். நாளடைவில் நான்கு வேதங்களாக அது வடிவெடுத்தது. இயற்கையின் சிறப்புக்கும் இழி நிலைக்கும் சான்று ஆகும் வேதம். ஆகவே, வேதத்தில் அடங்கியிருக்கின்ற அனைத்துமே மேலானவைகள் என்று எண்ணிவிடலாகாது. இயற்கையில் மேலான அமைப்புகளும் உண்டு; கீழான அமைப்புகளும் உண்டு. அதே பிரகாரம் வேதத்திலும் மேலான கருத்துக்களையும் கீழான கருத்துக்களையும் காணலாம்.

ஞானகாண்டம் என்னும் சீரிய பகுதி வேதத்தினின்று பிரித்தெடுக்கப்பட்டதாகும். வேதாந்தம் என்னும் பெயர் பெற்று என்றென்றும் அது சிறந்த நிலையிலே யாண்டும் இருந்து வருகிறது. எச்சமூகத்தாராலும் எக்காலத்திலும் ஞானகாண்டத்தின்மீது குறை காணமுடியாது. நல்லோர்க்குற்ற

அருள் விருந்தென்று ஞானகாண்டத்தைப் பகர வேண்டும்.

கரும காண்டம் என்னும் பகுதியில் சிறப்பும் சீர்கேடும் கலந்து கிடக்கின்றன. சீர்கேடுகளை ஒழித்து விடுவதற்கென்றே மத ஆசாரியர்கள் அப்போதைக்கப்போது தோன்றி வந்திருக்கின்றனர். யாகம் என்னும் வைதிக கர்மத்தின் உயர்ந்த பகுதியானது "தான், தனது" என்பனவற்றைத் தியாகம் செய்வதற்கு அமைந்ததாம். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். விச்வஜித் யக்ஞம் என்பது ஓர் ஒப்பற்ற யாகம் ஆகும். அதைச் செவ்வனே செய்து முடிப்பவனுக்கு விச்வமனைத்தும் சொந்தமாய்விடுகிறது. அதற்கு முதல் நிபந்தனை அத்தகைய யாகம் செய்கின்ற யஜமானன், "தான், தனது" என்பனவற்றை யெல்லாம் பிறர்பொருட்டு மனமுவந்து எடுத்து வழங்கிவிடவேண்டும். அத்தகைய யாகத்தில் அடங்கியுள்ள மேலாம் கோட்பாடு விவேகிகளுக்கு நன்கு விளங்குகிறது.

சுயநலக்காரர்களுக்கென்றமைந்த யாகங்கள் உண்டு, சுகபோகங்களை விரும்புகின்றவர்களுக்கென்றமைந்த யாகங்கள் உண்டு; பிறர்க்குத் தீங்குசெய்வதற்கென்று அமைந்துள்ள யாகங்கள் உண்டு, மற்ற உயிர்களை வதை செய்து அதன் பயனைத் தான் நலன் அடைய வேண்டுமென்று செய்யப்படும் யாகங்களும் உண்டு. அவரவர் மனநிலைக்கு ஏற்ப செய்

யப்படும் யாகம் மேலானது அல்லது கீழானது ஆகிறது.

இன்றைக்கு தேவாராதனையாக வடிவெடுத்திருப்பது வேத காலத்தில் யாகமென்னும் பெயர் பெற்றிருந்தது. தேவாராதனையில் வனதேவதைகளுக்கு உயிர்ப்பலி கொடுத்து வணங்கும் அசுர வழிபாடு முதல் நிர்க்குண பிரம்ம உபாசனை செய்யும் பாரமார்த்திகப் பெருநிலை பரியந்தம் விதவிதமான படித்தரங்கள் உண்டு. அவரவர் மனபரிபாகத்துக்கு இத்தனைவித ஆராதனைகளே சான்று ஆகும். உயிர்ப்பலி கொடுத்து தெய்வத்தை வணங்குகின்றவர்கள் எல்லாரும் கீழ்த்தரமான மக்களே. சங்கிலிக் கருப்பனுக்குக் கிடாவெட்டுபவரும் வேத நெறிப்படி அஜமேத யக்ஞம் செய்பவரும் பான்மையில் ஒரே வித மக்களே. ஒன்று கண்யமான ஸம்ஸ்கிருதப் பெயர் பெற்றிருக்கலாம்; மற்றொன்று கரடுமுரடான பிராகிருத மொழியாயிருக்கலாம். கீழ்த்தரமான மக்களே இத்தகைய அசுர ஆராதனையில் இறங்குவார்கள்.

காட்டுமிராண்டித் தனத்துக்கு நிகராயிருந்த உயிர்வதை செய்யும் யாகங்களை அறவே ஒழிக்க புத்தர் பெருமான் தோன்றினார். வெற்றிகரமான அவருடைய பெருமுயற்சிக்குப் பிறகு நாட்டில் அத்தகைய யாகங்களெல்லாம் எடுபட்டுப்போய்விட்டன. பின்பு அத்தகைய கர்மகாண்டத்தின் புன்மைகளை மேலும் வேர் அறக் களைய சங்கரர், ராமானுஜர்,

மத்வர் முதலாயினோர் தோன்றினர். இம்மூன்று ஆசாரியர்கள் காட்டியுள்ள தெள்ளிய வேதாந்த நெறிகளைப் பின்பற்றுபவர்களே உண்மையான அந்தணர் ஆகின்றனர். 'அந்தணர் என்போர் அறவோர், மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்,' என்னும் மறைமொழியை இலக்காக வைத்துக் கொண்டே அந்தணர் யார் என்று நாம் ஆராயவேண்டும். பொன் என்று பெயர் படைத்திருப்பதெல்லாம் பொன் ஆகாது. அந்தணர் என்று தம்மை அழைத்துக்கொள்பவர் எல்லாம் அந்தணர் ஆகார். மனபரிபாகத்தையும் அதற்கேற்ற சீரிய செயலையும் கொண்டே அந்தணர் யார் என்று நிர்ணயிக்கவேண்டும்.

ஆட்டைச் சித்திரவதை செய்கின்ற அடாத செயல் அஜமேத யக்ஞம் என்னும் பெயருடன் அரிதாக ஆங்காங்குத் தென்படலாம். ஆனல் பழைய பெருவாரியான புல்லிய செயலாக இனி அது ஒரு நாளும் வடிவெடுக்கப் போவதில்லை. இப்படித் தென்படும் செயல்கள் ஓர் உண்மையை விளக்குகின்றன. மனிதனிடத்திருந்து கீழான மனப்பான்மையை எத்தகைய பேராசிரியர் அல்லது பேர் அவதார புருஷன் தோன்றி வந்தாலும் அறவே நீக்கிவிட முடியாது என்பது வெளியாகிறது. முன்பு ஒரு காலத்தில் இவர்கள் போன்ற மூட நம்பிக்கையுடையவர்கள் ஏராளமாயிருந்திருக்கின்றனர் என்பதை இக்காலத்தவர் தெரிந்து கொள்ளுதற்கு இவர்கள் வெறும்

*மாதிரி மனிதர் ஆகின்றனர். தர்மத்தை உள்ளபடி நிலைநாட்டுதற்கோ அல்லது யாகம் செய்பவர்களை எத்துறையிலாவது மேலோங்கச் செய்வதற்கோ உயிர் வதையுடன் கூடிய யாகம் உதவாது.*

**கேள்வி : (18)** போர்க்களத்திலே எதிரியைக் கொல்லுகின்றவனும் எதிரியால் கொல்லப்படுகின்றவனும் வீர சுவர்க்கம் பெறுகின்றார்கள் என்பது கொள்கை. அதே போன்று யாகத்திலே ஆகுதியாகத் தரப்பட்ட உயிர்களும், ஆகுதியாகத் தருகின்ற எஜமானனும் நற்கதியடைகின்றார்கள் என்பது வேத வாக்கு. யக்ஞத்தில் பசுக்களை (ஆடு முதலியவைகளை) ஆகுதியாகத் தரலாகாது என்று முன் கேள்வியில் முடிவுகட்டியது வேதப் பிரமாணத்துக்கு முரண்பட்டதல்லவா?

*போர்க்களத்திலே மாய்ப்பவனும், மடிபவனும் வீரசுவர்க்கம் பெறுகிறார்கள் என்று முடிவுகட்ட யுக்தி வேண்டியவாறு இடங்கொடுக்கின்றது. அதன் உண்மையை நாம் நன்கு உணரலாம். ஆனால் அதில் அடங்கியிருக்கிற உண்மை போரில் மடிகின்ற எல்லாருக்கும் பொருந்தாது. போரிலே உயிர்களைப் பாழாக்குகின்றவர்கள் எல்லாருக்குமே பொருந்தாது. எப்படி என்று பார்ப்போம். போர்புரிகிறவன் எப்பொழுதும் சுயநலத்துக்கென்று சண்டையிடலாகாது. கேட்டை அகற்றி நலத்தை நிலைநாட்டுதற்கென்றே போராட வேண்டும். நலத்தை நாடும் இருவர்க்கிடையில் போராட்டம் கிடையாது. ஏதேனும் ஒரு கட்சி முறைதவறி நடந்தால்தான் போர்*

தொடுக்க ஹேது ஏற்படுகிறது. அக்கிரமத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஒருவன் போர்புரியத் துணிகின்றான்; சாவதற்கு அஞ்சுவதில்லை. எனினும் சுயநலம் என்னும் அரக்கத்தன்மையால் தூண்டப் பெறுவதால் அவனிடத்து மிளிர்வது வீரம் அல்ல, அசுரனுக்குரிய சூரத்தன்மையேயாம். அவன் மடியுங்கால் தீமை மடிகிறது. அவன் மேன்மையடைவது மனம் மாறும்பொழுதேயாம். மனம் நல்லதாக அவனுக்கு மாறாவிட்டால் ஒவ்வொரு மரணமும், ஒவ்வொரு ஜனனமும் அவன் இன்னும் அதிகமாகக் கீழ்மை அடைவதற்கே முகாமையாகும். சுயநலமில்லாத மேலான லக்ஷியத்தின் பொருட்டு தர்மயுத்தத்தில் தன் உயிரைக் கொடுப்பவனே வீர சுவர்க்கம் போன்ற மேன்மை யெய்துகிறான். ஆக, இந்த உபமானத்தை இங்கு எடுத்துக்கொள்ளுதல் ஒவ்வாது.

யக்ஞம் என்பதின் அடிப்படைக் கருத்து சுயநலத் தியாகம் என்பதாம். ஒரு சிலர் கூடிக்கொண்டு அஜமேத யக்ஞம் என்னும் ஒரு யாகத்தை இந்நாளில் ஏதோ சில இடங்களில் செய்கிறார்கள். அப்படிச் செய்வதின் அடிப்படை நோக்கம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். எத்தகைய சுயநலத்தை அவர்கள் தியாகம் செய்துள்ளார்கள், என்ன விதத்தில் நாள் ஏற ஏற அவர்கள் பரந்த மனமுடையவர்களாக மாறியமைகிறார்கள், மன்னுயிர் அனைத்துக்கும் பயன்படுகிற நல்வாழ்வு அவர்களிடம் எப்படிப் புதியதாக வந்தமைந்துகொண்

டிருக்கிறது என்றும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். அஜமேத யக்ஞத்தில் சுயநல வளர்ச்சிக்கு அறிகுறிகளைக் காணலாம்; சுயநலத் தியாகத்துக்கு அறிகுறிகளைக் காணமுடியாது.

போர்க்களத்தில் இருதரத்தாரும் அவரவர் கொண்டிருந்த லக்ஷியத்தின் பொருட்டு உயிர் துறக்கத் துணிந்தே முன்வருகின்றனர். கெட்டவனும் தன் லக்ஷியத்தின் பொருட்டுத் தன் உயிரைக் கொடுக்க ஆயத்தமாக முன்வருவது பாராட்டத் தக்கது. ஆடு ஒன்று தான் யாகசாலையிலே உயிர் துறப்பதின் மூலம் மேன்மையடையப் போவதாக உணர்வதில்லை. உணரும் சக்தியும் அதற்கு இல்லை. அது மேன்மையடையும் என்று அதன் உயிரை வாங்குகின்ற யாக கர்த்தாக்கள் நினைக்கிறார்கள். ஆட்டின் வாயை அவர்கள் இறுகக் கட்டிவிடுகிறார்கள். அதற்குக் கூக்குரலிட இயலாது. உயிர்களின் உணர்ச்சியை அறிவிக்கும் கருவிகளைப் பலப்பல விதங்களிலே இக்காலத்திய பௌதிக விக்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். யாகசாலையில் சித்திரவதை செய்யப்படும் ஆட்டின் உடலிலே அக்கருவியை வைத்துப்பார்த்தால் அது படும் வேதனையைக் கல்நெஞ்சம் படைத்த யாக கர்த்தாக்கள் அறிந்துகொள்ள இயலாவிட்டாலும் அக்கருவியானது ஐயம் திரிபு அற விளக்கிக்காட்டிவிடும். வெட்டுண்டு சாவதில் துன்பம் அதிகம் இல்லை. பீஜத்தின்கண் நெறியுண்டு சாவதில் ஆடு படும் வேத

னையை ஆடுதான் உணருகிறது; இதை விக்ஞானக் கருவிகள்தான் விளக்கிக் காட்டமுடியும். மறுமையில் மறி மேன்மையுறுகிறது என்பது குருட்டு நம்பிக்கையல்லாது அதற்குப் பிரமாணம் இம் மண்ணுலகில் எதையும் காணமுடியாது.

இத்தகைய குருட்டு நம்பிக்கையைச் சான்றோர்கள் எல்லோரும் தீவிரமாகத் தாக்கியிருக்கின்றனர். பொருந்தாத கர்மகாண்டத்தை ஒழித்தற்கென்றே ஆசாரிய புருஷர்கள் எல்லோரும் நாளடைவில் அவதரித்து வருபவர் ஆயினர். அவர்களுள் ஒருவர் கையாண்ட முறையை ஈண்டு ஞாபகத்துக்குக் கொண்டுவருவது பொருந்தும். ராஜகிருஹம் என்னும் பட்டணத்திலே பிம்பிசாரன் என்னும் மன்னன் நடாத்திய யாகத்திலே கணக்கற்ற ஆடுகள் பலியிடப்பட்டன. அதற்காக ஒரு மந்தை ஒரு தடவை ஓட்டிக்கொண்டு போகப்பட்டது. அக்காட்சியைப் புத்தர் பெம்மான் பார்த்தார். அவருக்கு மனம் இளகிற்று. ஆட்டு மந்தையைப் பார்த்து அவர் இயம்பினர்: "நீங்கள் எல்லோரும் மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. மண்ணுலகில் உங்கள் வாழ்வு முடிவுக்கு வந்துவிட்டது. அதற்கிடையில் உங்களுக்கேற்படும் துயரத்தில் ஒரு சிறிதையாவது துடைக்க, நான் பணிவுடன் முன்வருகிறேன்." இங்ஙனம் சொல்லிக் கொண்டு நடக்கமுடியாத ஆடு ஒன்றை அவர் தூக்கித் தோளில் போட்டுக்கொண்டார். இடையன்

அதை வருத்தி ஓட்டியதைக் கண்டு சகிக்க அவருக்கு இயலவில்லை. ஆட்டு மந்தையுடன் அவர் யாகசாலைக்குள் நுழைந்தார். அவரைக் கண்டதும் யாகசாலையிலிருந்தவர்கள் எல்லோரும் தங்களை யறியாது வணக்கத்துடன் எழுந்து நின்றனர். போற்றுதற்குரிய பெரியவர் ஒருவர் முன்னிலையில் இத்தகைய வணங்கும் மனப்பான்மை இயல்பாக வந்துவிடுகிறது. பிறகு புத்தருக்கும் யாகம் செய்தவர்களுக்கும் இடையில் பேச்சுவார்த்தை ஒன்று நிகழ்ந்தது :

'பிற உயிரைக் கொன்று இம்மையிலாவது மறுமையிலாவது இன்பம் பெற முயலுவது பொருந்துமா ?' என்று புத்தர் கேட்டார்.

'யாகத்தில் மடியும் உயிர்கள் மறுமையில் மேன்மையடைகின்றன. யாகம் செய்கின்றவர்க்கும் மேன்மையுண்டு' என்ற பதில் வந்தது.

'அது உங்களுக்கு எப்படித் தெரியும் ?' என்று வினவினர்.

'வேதப் பிரமாணம் பொய் போகாதது' என்று வேதியர்கள் விடை விடுத்தனர்.

'யாகத்தில் மடியும் உயிர்களனைத்துக்கும் இது பொதுவான விதியா ?' என்று காருண்ய மூர்த்தி மேலும் கேட்டார்.

'யாகத்தில் ஆகுதியாகும் உயிர்களனைத்துக்கும் இது பொது விதி' என்று விடை வந்தது.

'யாகத்தில் மடியும் மனிதன் கதி என்ன ஆகிறது ?' என்று புத்தர் கேட்டார்.

'மனிதனும் மேன்மையுறுகிருன்' என்று மறு மொழி கூறினர்.

'இதை முற்றிலும் நம்புகின்றீர்களா?'

'ஆம், நம்புகின்ருேம்.'

இப்பொழுது புத்தர் பகர்வாராயினர்: 'இதோ இங்கு அமர்ந்திருக்கும் வயோதிகர்களைப் பாருங் கள். இவர்களில் இரண்டொருவராவது உங்க ளுடைய பிதாக்களாகவோ, பிதாமகன்களாகவோ இருக்கக்கூடும். அவர்களுக்கு இவ்வுலகில் இனிப் பெறுதற்கு சுகம் ஒன்றுமில்லை; இந்திரியங்கள் தேய்ந்துவிட்டன; அங்கங்கள் தளர்ந்துவிட்டன; தள்ளாடிக் காலங் கழிக்கின்றனர். வீடு போ போ என்கின்றது; சுடுகாடு வா வா என்று அழைக்கின் றது. பயனற்ற இம்மை வாழ்வு அவர்களுக்கும் தலைச் சுமை; அவர்களைப் பராமரிக்கின்ற உங்களுக்கும் தலைச்சுமை; இவர்களைப் பிடித்து ஹோமாக்கினியில் ஆகுதியாகப் போட்டுவிடுங்கள். உடனே அவர் களுக்கும் சுவர்க்கப் பிராப்தி வருகிறது. நீங்களும் தந்தை, பாட்டன்மார்க்குப் பெருங் கடமையைச் செய்தவர்கள் ஆவீர்கள். இச் செயலிலே துணியுங் கள் பார்க்கலாம்' என்ருர். அதற்கு அக்கூட்டத்தார் சம்மதிக்கவில்லை. அப்படியாயின் அவர்கள் வேதத் தில் நம்பிக்கை வைத்தவர்கள் அல்லர்; வெறும் வேஷதாரிகள் என்று புத்தர் முடிவுகட்டினுர்.

வேதத்தில் நம்பிக்கை வைக்கின்ற மக்கள் இம் மண்ணுலகில் மிக மிகச் சிலரே உளர். வேதப் பிரமா

ணம் என்னும் பெயர் வைத்துக்கொண்டு வாழும் சுய நலப் பித்தர்களையே ஏராளமாக எக்காலத்திலும் காணலாம். வேதம் இடுகிற ஆணைகளுள் மிக மிகப் பெரியது 'கர்மத்தாலன்று, சந்தான விருத்தியினாலன்று, செல்வத்தால் அன்று, தியாகத்தாலேயே அமிர்தத்வம் அடையப்பெறுகிறது' என்பதாகும். இப்படி ஆணையிடுகின்ற வேதத்துக்கு முற்றிலும் அடிபணிகின்ற வைதிகன் ஏதேனும் ஒருவனையாவது இன்றைக்கு நாம் காணமுடியுமா? உண்மையை உரைக்குங்கால் மனிதன் பொதுவாக வேதத்தைப் பின்பற்றுபவனும் அல்லன், ஆகமத்தைப் பின்பற்றுபவனும் அல்லன், அல்லது வேறு எந்த சன்மார்க்கத்தைப் பின்பற்றுபவனும் அல்லன். வேதம், ஆகமம், சன்மார்க்கம் ஆகியவைகளின் பிரமாணம் என்று சொல்லிக்கொண்டு தன் சுயநலத்தையே நிலை நாட்டுகின்றான். சுயநலம் கொண்டுள்ள மனிதனுக்கு வைதிக வாழ்வு என்பது வெறும் பேச்சளவிலேயேயாம். இம்மையில் நலம் அடையாத ஒருவன், இம்மையில் உயிர்களுக்கு அன்பு காட்டாத ஒருவன் மறுமையிலும் எந்த மேன்மையையும் அடையப் போவதில்லை.

**கேள்வி: (19)** கடவுளின் திருநாமத்தை தினந்தோறும் தவறாமல் காலை மாலை இருவேளைகளிலும் ஜபம் செய்பவர்கள் அடையும் நிலை யாது?

*பாமரராகிய நாம் கடவுளைக் கண்டவர்கள் அல்லர். ஆனால் கடவுளினுடைய திருநாமத்தை நாம்*

*அறிந்திருக்கிறோம். கடவுள் பெரியவரா, அவர் திருநாமம் பெரியதா என்று ஆராய்ச்சி செய்துள்ள பெரியோர்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் ஏகோபித்து முடிவு செய்திருப்பது கடவுளைவிடப் பெரியது கடவுளின் திருநாமம் என்பதாம். அத்திருநாமம் நம் கைவசம் உளது. எவ்வளவுக்கெவ்வளவு நாம் அதை ஓதுகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு நலன் அடைகின்றோம். நம்பிக்கைவைத்துப் பக்தி விசுவாசத்துடன் ஓதுபவர்க்கு மனத்தூய்மை விரைவில் வந்தமைகிறது. உணர்வற்று ஓதுபவரும் நாளடைவில் மனத்தெளிவு பெறுகின்றனர். மனந்தெளிந்தவர்களே கடவுள் மகிமையையும் பிறகு கடவுள் சொரூபத்தையும் சுவானுபூதியில் பெறமுடியும். ஆக, மனம் தெளிவு அடைவது நாமஜபத்தின் விளைவாம்.*

**கேள்வி : (20)** இந்தியாவில் முஸ்லீம்கள் கால்வைத்த நாளிலிருந்து ஹிந்துஸ்திரீகளைக் கற்பழிப்பதும் மதம்மாற்றுவதும் கோயில்களை இடித்து மசூதி கட்டுவதும் சர்வ சகஜமாகிவிட்டது. யாராலும் வெல்லமுடியாத சிவாஜி, பிருதிவி முதலிய வீரர்களுடைய ராஜீய நடவடிக்கையால் அவற்றுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியவில்லை. ஜகத்குரு ஆதிசங்கரர் அவர் காலத்திலெழுந்த மத எதிர்ப்புக்களைத் தன் ஆத்மசக்தியால் வென்றார். பின்னர் பாதுஷாவை ராமபக்தியால் ராமதாஸ் வென்றார். எனவே அட்டூழியத்தை வென்றுதானாகவேண்டும்; திருத்த முடியாது. இராமரால் இலங்கையை

வெல்ல முடிந்ததே தவிர ராவணனை சன்மார்க்கனுக்க முடியவில்லையே? பின் ஏன் தற்போதைய மதத்தலைவர் களும் தெய்வ அருள் பெற்றவர்களும் தங்கள் சக்தி யால் நவகாளி நிகழ்ச்சிகள் நிகழாமல் தடுக்கக் கூடாது? ஏன், இப்பொழுது ஆதிசங்கரர் காலத்தில் இருந்த தெய்வசக்தியும் அருளும் மங்கிவிட்டதா?

*சில பெரியோர்கள் தங்கள் ஆத்மசக்தியால் ஏதோ இரண்டொரு மனிதர்களைக் கொடூரத் தன் மையினின்று மாற்றியிருக்கிறார்கள். ஜன சமூகம் முழுமையுமே மாற்றும் வல்லமை அவர்களுக்கு இல்லை. வாய்ப் பேச்சிலோ கைத்திறத்திலோ மதச் சண்டை உலகில் என்றென்றும் இருந்துவரும். மனி தனுடைய முன்னேற்றத்துக்கு அரசியல் சண்டை போன்று மதச்சண்டையும் மறைமுகமாகத் துணை புரிகிறது. ராமனுக்கு ராவணனைக் கொல்ல முடிந் தது. அவனுடைய மனதை மாற்றமுடியவில்லை. நாம் பெற வேண்டிய பாடம் முழுதும் அந்த ஒரு செயலில் அடங்கியிருக்கிறது. அவரவர் சக்திக்கு ஏற்ப சமுதாயத்திலிருக்கும் எல்லோரும் தீமையை எதிர்த்துப் போராடக் கடமைப்பட்டிருக்கின்றனர். தெய்வமே பல அசுரர்களை அழித்ததாக ஐதிகம் உண்டு. ஆயினும் உலகினின்று அசுர இயல்பு அறவே அழிந்துபோய் விடவில்லை. நல்லியல்புக்கும் கெட்ட இயல்புக்கும் இடையில் என்றென்றும் போராட்டம் இருக்கும். இப்போராட்டமே வாழ்வு என்னும் பெயர் பெறுகிறது.*

**கேள்வி: (21)** சுவாமி விவேகானந்தர், பண்டித ஜவஹர் லால் நேரு முதலியோர் இராமாயணத்தை ஆரிய திரா விடப்போர் என்று குறிப்பிடுகிறார்கள். இதன் கருத் தென்ன?

*ஜவஹர்லால் நேருவுடைய புத்தகங்களையும் பிரசங்கங்களையும் நாம் முழுதும் படித்தவர்களோ கேட்டவர்களோ அல்ல. எந்த இடத்தில் எந்த சந்தர்ப்பத்தில் இராமாயணத்தை ஆரிய திராவிட போராட்டம் என்று சொன்னார் என்று யூகிக்கவும் நமக்கு முடியாது. அவர் அங்ஙனம் பகர்ந்திருப்பாரா கில் அவர் சரித்திரத்தையோ, சாஸ்திரத்தையோ ஆழ்ந்து ஆராய்ந்தவர் அல்லர் என்றே நாம் உறுதி கூறலாம்.*

*சுவாமி விவேகானந்தருடைய நூல்கள் ஆங்கி லத்தில் எட்டுத் தொகுதிகளும் நம் கைவசமிருக்கின் றன. ராமாயணத்தை அவர் பெரிதும் பாராட்டு கிறார். இந்துக்களின் நாகரீகமும் பண்பாடும் ராமா யணத்தில் புதைந்துகிடக்கின்றன என்று போற்று கிறார். அவர் அதை ஆரிய திராவிடப் போராட்ட மென்று கனவிலும் கருதக்கிடையாது. அத்தகைய போராட்டம் அவருடைய மனதில் எழுந்ததும் இல்லை. யாருடைய மனதில் போராட்டமும் குழப்ப மும் இருக்கிறதோ அவர்களுக்குத்தான் இத்தகைய குயுக்திகளும் மனதிலே தோன்றுவன ஆகும். மானுட வர்க்கம் முழுதையும் ஒரு குடும்பமாக விவேகானந் தர் எடுத்துக் கொண்டார். மாகாணப் பிணக்கையோ*

மொழிப் பிணக்கையோ, ஜாதிப் பிணக்கையோ உண்டு பண்ணுகின்ற எண்ணத்தை அவர் கனவிலும் கருதக்கிடையாது.

வால்மீகி இயற்றி வைத்திருக்கிற பிரகாரம் ராமாயணம் இப்பொழுது நம்கைவசத்திலிருக்கிறது. இந்தியாவில் எல்லா மாகாணங்களிலும் அது ஒரு சிறந்த இதிகாசமாகப் பாராட்டப்பட்டு வருகிறது. மக்கள் பல்லாயிரம் பேருக்கு அது ஒரு சிறந்த வழி காட்டியாக பல்லாண்டு இருந்து வந்திருக்கிறது. இனியும் அப்படியே அது இருக்கப்போகிறது. யார் முயன்ருலும் அதை அழித்துவிட முடியாது. அத்தகைய இதிகாசத்தினுள் இன்றைக்குக் கற்பனை யாக கிளம்பியிருக்கும் ஆரிய திராவிடப் போராட் டத்துக்கு சான்று ஏதேனும் இருக்கிறதா என்று ஆராய்ந்து பார்ப்போம்.

ஆரியன் யார், திராவிடன் யார் என்பது முதல் கேள்வி. இராமாயணம் போன்ற நூல்களில் ஆரியன் என்பவன் ஒரு அலாதியான ஜாதியைச் சேர்ந்தவன் என்று பொருள்படும் விளக்கம் எவ்விடத்திலும் இல்லை. ஆரியன் என்னும் பதத்துக்குப் பொருள் பண்பட்டவன் அல்லது மேன்மகன் என்பதாகிறது. அனரியன் என்று சொன்னல் கீழோன் அல்லது கயவன் என்று பொருள்படுகிறது. வரம் கேட்ட கைகேயியைத் திட்டிய தசரதன் 'அனரியே' என்று அவளை திரஸ்கரிக்கின்ருர். கானகத்தில் தன் உயிரைக்கொடுத்து சீதையைக்காக்க முயன்ற

ஜடாயுவை சீதை 'ஆரியா' என்று அழைக்கின்ருள். ஆரியன் என்னும் சொல் ஒரு ஜாதியைக் குறிக்கிற தென்ருல் ஜடாயு ராமாயணத்தின்படி ஆரியன் ஆய் விடுகிறது. கைகேயி ஆரிய ஜாதியைச் சேராதவள் ஆய்விடுகிருள். இது எவ்வளவு பொருத்தமற்ற பிரச்னை என்பது ராமாயணத்தினின்று நமக்குக் கிடைக்கிறது. ஆனுல் ராமாயணம் அமைந்தது எந்த ஜாதியினுடைய பெருமைக்காகவோ அல்லது சிறுமைக்காகவோ அல்ல.

நான்கு வேதம் ஆரியர்களுடையவை என்பது ஐதீகம். வேதம் யாருக்குச் சொந்தமோ அவர்கள் ஆரியர்கள் என்னும் கோட்பாட்டை இன்றைக்கு யாரும் மறுப்பது கிடையாது. வால்மீகி ராமாயணப் படி ராவணன் நான்கு வேதங்களை நன்ருக ஓதி ஆராய்ந்தவன். சாமவேதகானம் பண்ணுவதில் அவன் பெரிய நிபுணன். வேதசாஸ்திரத்தை அவன் கற்றறிந்திருந்த அவ்வளவு தூரம் ஸ்ரீ ராமன் கற் றிருந்தான் என்று சொல்லுதற்கு வால்மீகி ராமா யணத்தில் போதிய ஆதாரம் இல்லை. மேலும் ராவ ணன் பிராம்மணன் என்றும் அதே ராமாயணம் பகர் கிறது. பிராம்மணர்கள் எல்லோரையும் ஆரியர் என்று, இப்பிணக்கைக் கிளப்புபவர்களும் ஒத்துக் கொள்கிருர்கள். இக்கோட்பாட்டின்படி தென் இலங்கையிலிருந்த இராவணன் ஆரியன் ஆகின்ருன். வடக்கே அயோத்தியில் இருந்த பிராம்மணன் அல் லாத, க்ஷத்திரியனுயிருந்த தசரத ராமனை இவர்கள்

கொள்கையின்படி திராவிடன் என்று யூகிக்க இடமிருக்கிறது. ஆக, ராமாயணத்தை ஆரிய திராவிடப் போராட்டமென்ருல் தங்களைச் சிறுமைப்படுத்துதற்கென்றே ஆரியர் வடக்கேயிருந்து தோன்றிவந்திருக்கின்றனர் என்று கூக்குரலிடும் கூட்டத்தார் ஸ்ரீ ராமனுடைய செயலைப்பற்றி அவமானமடைவதற்கு இடமில்லை. திராவிடன் ஒருவன் ஆரியனைத் தகர்த்துவிட்டான் என்று அவர்கள் பெருமை பாராட்டிக் கொள்ளலாம். ஆனல் இத்தகைய கொள்கையோ உண்மையோடு ஒட்டியதன்று. பயனற்ற வீண் விவாதத்தை இது கிளப்புவதாகும்.

ஸ்ரீ ராமனும் லக்ஷ்மணனும் ஹனுமானை பம்பா சரசுக்குப் பக்கத்தில் சந்தித்தார்கள். சிறிது நேரம் பேச்சுவார்த்தை நடந்ததற்குள்ளேயே ஹனுமான் சாஸ்திரங்களை முறையாகக் கற்றறிந்த மேன் மகன் என்று ஸ்ரீ ராமர் அறிந்து கொள்கிருர். ஆங்கு ஜாதியைப்பற்றிய பேச்சு இல்லை. பண்பாட்டைப்பற்றிய பாராட்டுதலே முன்னணியில் வந்து நிற்கிறது.

அடுத்தபடியாக இராமாயணத்துக்குத் தக்க அரங்கங்களாக அமைந்த அயோத்தி, கிஷ்கிந்தை, இலங்கை ஆகிய மூன்று ராஜதானிகளை ஆராய்ந்து பார்ப்போம். மூன்று ராஜதானிகளிலும் நலம் கேடு ஆகிய இரண்டு சக்திகளுக்கிடையிலே போராட்டம். ராமன் தீமைக்கு எந்த இடத்திலும் ஆதரவுகொடுக்கவில்லை. நலத்தை நிலைநாட்டுதற்கே பெருமுயற்சி எடுத்துக்கொண்டார். தந்தை பொய் பகர்பவர்

அல்ல என்பதை நிரூபிப்பதற்காக நீண்ட வன வாசத்தை அவர் ஏற்றுக்கொண்டார். ஆனால் மாற்ருந்தாயின் போக்கு பாராட்டத்தக்கதன்று என்பதை ராமனுடைய இளையவன் சொல்லிலும் செயலிலும் நிரூபிக்கின்ருன். கிஷ்கிந்தையில் எதையும் ராமன் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ளவில்லை. அடாத செயல் புரிந்த மூத்தவனை ஒழித்துவிட்டு நேர்மை நிறைந்த இளையவனை அரசாள நியமிக்கிருர். கிஷ்கிந்தையிலிருந்து அவர் ஒரு பொருளையும் அயோத்திக்கு எடுத்துச்செல்லவில்லை. அயோத்திக்கு அழைத்துச் சென்று சுக்ரீவனுக்கு அங்கிருந்து சம்மானம் கொடுத்து அனுப்புகிருர். லங்காபுரியில் பெரும் போர் புரிந்தது தீமையைத் தகர்த்தற் பொருட்டேயாம். ஜாதிப்பிணக்குக்கு ஆங்கு இடமில்லை. அரக்க இயல்பு படைத்த அண்ணனை மண்ணுலகினின்று அகற்றிவிட்டு, நேர்மை பிறழாத இளையவனை நாட்டுக்கு அரசனுக நியமிக்கின்ருர் அறம்வளர்த்த நம்பி. இளையவனுகிய விபீஷணனையும் அவர் பிறகு அயோத்திக்கு அழைத்துச் சென்றிருந்தார். விபீஷணனுக்கும் விலையுயர்ந்த ரத்தினம் முதலியவைகளை அயோத்தியினின்று சம்மானமாகக் கொடுத்து தென் இலங்கைக்கு அனுப்பினுர். வெற்றி கொண்ட வேந்தன் தோல்வியடைந்தவர்களை சூறையாடுவது சிற்றியல்பு படைத்த உலகத்தவர் போக்கு. ஆனல் இவ்வுலகில் யாரையும், எந்நாட்டையும் ராமன் சூறையாடவில்லை. கேட்டைக் களைந்தார்;

நலத்தை நிலைநாட்டினர். அதற்காகவென்றே அவர் வாழ்ந்திருந்தார். பிற ஆட்சியிலிருந்து பொருளைப் பறிப்பதற்குப் பதிலாகத் தாமே தம் சொந்த நாட்டிலிருந்து பொருளை வெகுமதியாக வழங்கினர்.

ஆக, ராமாயணம் நலம் கேடு ஆகிய இரண்டுக்கும் இடையே உள்ள போராட்டத்துக்கு விளக்கமாக அமைகிறதே ஒழிய ஜாதிப் பிணக்கையோ, மாகாணப் பிணக்கையோ உண்டுபண்ணுவதற்காக அமைந்ததல்ல. பக்தியுடன் ராமாயணம் படிப்பவரும், கேட்பவரும் இத்தகைய வேற்றுமைகளையெல்லாம் மறந்துவிட்டு, கேட்டை நிராகரித்து, நலத்திலே நாட்டமுடையவர் ஆகின்றனர். இத்தகைய நன்மையை மக்கள் எல்லார்க்கிடையிலும் பரப்புதற்கென்றே ராமாயணம் அமைந்தது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**கேள்வி:** (22) ஆண்டவனுல் அளிக்கப்பட்ட ஒரு பிறவிதான் உண்டு. அதைத் தொடர்ந்து வினைப்பயனும் மறு பிறப்புக்களும் இல்லை என்கின்றன சில சமயங்கள். அவை உண்டு என்கின்றன வேறு சில சமயங்கள். எதை ஏற்பது, எதை விலக்குவது?

ஒரு பிறப்புதான் உண்டு என்பது ஏக ஜன்மவாதம். முக்தியடையும் வரையில் பல பிறவிகள் உண்டு என்பது புனர்ஜன்மவாதம். ஏக ஜன்மவாதம் ஆசியாக் கண்டத்தின் மேற்குப் பகுதியில் தோன்றிய யூத மதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம் ஆகியவைகளுக்கு சம்மதம். புனர்ஜன்மவாதம்

இந்தியாவிலும் சீனுவிலும் தோன்றிய மற்றெல்லா மதங்களுக்கும் சம்மதம். ஆண்டவன் ஒரு பிறவியைத் தான் தருகிருர் என்பது யுக்திக்குப் பொருந்தாது. மனிதனை அறிவிலும் ஆற்றலிலும் ஏற்றத் தாழ்வாகக் கடவுள் ஏன் படைக்க வேண்டும்? அது அவருடைய விருப்பம் என்று சமாதானம் சொல்லுவது இயற்கை அமைப்புக்கு விரோதமானது. மனிதன் பக்குவமடைவதற்கு ஒரு ஜன்மம் போதாது. பள்ளியில் பாடம் படிப்பதற்குப் பல வகுப்புக்கள் வேண்டும். மாணுக்கன் தரத்துக்கு ஏற்ப ஒவ்வொரு வகுப்பிலும் சில காலம் இருந்தாக வேண்டும். பல பிறவிகள் என்பது அதேபோன்றது. ஆத்மா பக்குவம் ஆவதற்குப் பல ஜன்மங்கள் எடுத்துக்கொள்கிறது. ஒரு ஜன்மத்தில் அடைந்துள்ள பரிபக்குவத்தை ஒட்டி அடுத்த ஜன்மம் வருகிறது. ஆகையால்தான் மக்களுள் ஏற்றத் தாழ்வையும் காண்கிறேம். பக்குவம் அடைதற்கு வேண்டியவாறு வசதியைச் செய்துகொடுப்பது தான் கருணைக் கடவுளின் செயலாகும். தமக்கு விரும்பியபடியெல்லாம் தாறுமாருக அவர் உயிர்களைப் படைத்து விடுகிருர் என்பது அறிவுடையோர்க்கு ஏற்புடையது ஆகாது.

முன்பு நிகழ்ந்த பல செயல்களை இப்பொழுது மறந்துவிடுகிறேம். மறந்ததனுல் முன்பு அச்செயல்கள் நிகழவில்லை என்று சொல்லலாமா? பழைய பிறவிகளை மறக்கடிப்பதற்கே புதிய பிறவிகள் வருகின்றன. அவைகளை ஞாபகத்துக்குக் கொண்டு

வந்தால் ஞாபக சக்திக்கு அது பெரும் சுமையாகும்; அதனால் துன்பமும் அதிகரிக்கும். ஆகவே பழைய அனுபவம் மட்டும் சுபாவமாக மனதில் நின்று விடுகிறது. பயன்படாத மற்ற பகுதிகளெல்லாம் ஞாபகத்தினின்று மறைந்துபோய் விடுகின்றன. அதற்காகவென்று சில யோக சாதனங்கள் செய்தால் பழைய பிறவிகளை ஞாபகத்துக்குக் கொண்டு வரலாம் என்கிறது யோக சாஸ்திரம். ஆக, பல பிறவிகள் இருப்பதுதான் உயிர்களின் முன்னேற்றத்துக்குத் தக்க துணையாகிறது. ஒரு பிறவி என்னும் கோட்பாட்டை முன்னேற்றத்துக்கு ஒவ்வாதது என்று விலக்கவேண்டும்.

**கேள்வி: (23)** செத்தவர் ஆவி உலகில் இருக்கின்றனர் என்றும் அவர்களோடு பேசலாம் என்றும் சிலர் பகர்கின்றனர். இதைப்பற்றிய உண்மை யாது? எவ்வளவு காலம் செத்தவர் ஆவி உலகில் இருக்கின்றனர்?

கால அளவை நமக்கு வேறு, செத்தவர்களுக்கு வேறு. அயர்ந்து தூங்குகின்ற ஒருவன் காலத்தைக் கடந்து இருப்பது போன்று செத்துப்போன ஆத்மாக்கள் நமக்கு அளவையாக இருக்கும் காலத்தில் கட்டுப்படுவதில்லை. ஆக, எவ்வளவு காலம் அவைகள் வேறு நிலையில் இருக்கின்றன என்னும் கேள்விக்குப் பொருத்தமான விடை கொடுக்க முடியாது. ஒரு நிலையில் ஐந்து நிமிஷமாகத் தென்படுவது மற்றொரு நிலையில் ஐந்து ஆண்டு அல்லது ஐம்பது

ஆண்டுகள் ஆய்விடலாம். நாம் காணும் கனவே அதற்குச் சான்று.

செத்தவர் பெரிதும் அயர்ந்து தூங்குகிற நிலையில் இருக்கின்றனர். ஒருசிலர் மட்டும் சொப்பனம் காண்கின்ற நிலைக்கு வருகின்றனர். அவர் காணும் சொப்பனம் நல்லதாயிருந்தால் அதைச் சொர்க்க வாழ்வு என்று எண்ணுகின்றனர். சொப்பனம் கெட்டதாயிருந்தால் அது நரகம் எனப்படுகிறது. அவரவர் வினைக்கு ஏற்ப அந்நிலையில் கொஞ்சகாலம் இருந்துவிட்டு வசதியான சூழ்நிலை அமையும்போது மறுபடியும் மண்ணுலகில் பிறக்க வருகின்றனர்.

அவர்களோடு பேச்சுவார்த்தை வைத்துக் கொள்வது நமக்குச் சாத்தியமன்று. இன்று ஆவி உலகப் பேச்சு என்று உலவிவரும் வதந்திகளெல்லாம் பெரிதும் ஆதரவு அற்றவைகள். மண்ணுலகத்தவரோடு தொடர்வு காட்டக்கூடிய சூக்ஷ்ம சரீரத்தில் அமைந்திருக்கும் பாங்கு ஏதோ சில ஆத்மாக்களுக்கு மட்டும் உண்டு. அவர்களுடைய மன நிலையை வாங்கிக்கொள்ளும் தன்மை மக்களுள் யாரோ சிலருக்குத்தான் வந்தமைகிறது. ஆகையினால்தான் பொதுவாக செத்தவர்களுக்கும் நமக்கும் எந்தவிதமான நேர் தொடர்வு கிடையாது. அவர்களைக் குறித்து நாம் எண்ணும் நல்லெண்ணங்கள் மட்டும் அவர்களுக்கு ஓரளவில் பயன்படுகிறது. செத்தவர்களோடு பேசுதல் என்னும் ஆதரவற்ற நம்பிக்கையை அடியோடு மறந்துவிடுவதே உத்தமம்.

**கேள்வி : (24)** ஆத்மா பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை என்பது ஒரு கோட்பாடு. அது பல பிறவி எடுக்கிறது என்பது இன்னொரு கோட்பாடு. உலகில் ஜனத் தொகை ஒரு காலத்தில் அதிகமாகவும் இன்னொரு காலத்தில் குறைவாகவும் இருக்கிறது. குறைந்து போனபொழுது அவ்வாத்மாக்கள் நிலை என்ன வாயிற்று ?

*அஞ்ஞான நிலையிலிருக்கும் ஆத்மா சரீரத்தோடு கூடியது. அதைத்தான் ஜீவாத்மா என்கிறோம். சரீரத்தை அப்போதைக்கப்போது ஆத்மா மாற்றிக் கொண்டே வருகிறது. சரீரத்தை மாற்றும் நிலையைத் தான் மரணம் என்றும் ஜனனம் என்றும் பகர் கிறோம். ஒரு சரீரத்தைக் களைந்துவிட்டால் அந்த ஆத்மா நமக்குத் தென்படுவதில்லையாதலால் அது செத்துப்போய்விட்டது என்கிறோம். புதிய உடலை எடுத்துக்கொண்டால் அந்த ஆத்மா பிறந்திருக் கிறது என்கிறோம். ஆக, பிறப்பு இறப்பு என்பது உடலைக் குறித்த சொற்களாம். உடலை எடுக்கும் ஆத்மாவோ என்றென்றைக்கும் உள்ள அழியாத வஸ்து.*

*ஆத்மாக்கள் பிறப்பது இந்த மண்ணுலகம் ஒன் றில் மட்டுமல்ல. மனிதர்கள் ஒரு தடவை ஒரு சந்தைக் கடைக்குப் போகின்றனர். மற்றொரு தடவை இன்னொரு சந்தைக் கடைக்குப் போகின் றனர். ஒரு வாரத்தில் ஒரு சந்தைக் கடையில் கூட் டம் குறைந்துபோய்விட்டால் அங்கு வருகிற மக்க*

ளில் பெரும்பாலர் இல்லாது போய்விட்டார்கள் என்று முடிவுகட்டலாகாது. வேறு எங்கேயோ இருக்கிருர்கள் என்றுதான் முடிவுகட்டவேண்டும். அதேவிதத்தில் மண்ணுலகில் ஜனத்தொகை குறைந்துபோனல் ஆத்மாக்களில் பலர் வேறு ஏதோ உலகில் போயிருக்கிருர்கள் என்று யூகிக்கவேண்டும். ஜனத்தொகையின் பெருக்கும் குறைவும் ஆத்மாக்களின் தொகையைக் கணக்கிடுதற்கு போதிய ஆதாரம் ஆகாது. இங்கு இல்லாவிட்டால் அவர்கள் வேறு எங்கேயோ இருக்கிருர்கள் என்று யூகிக்க வேண்டும்.

**கேள்வி: (25)** விஞ்ஞானத்துறையில் மேம்பட்ட அமெரிக்கா, ரஷ்யா முதலிய நாடுகள் வளப்பமாகவும், ஆத்மீகத்தில் உயர்ந்த இந்தியா தரித்திரத்திலும் கல்வி அறிவில்லாதவர்களாயும் இருக்கக் காரணம் என்ன? விஞ்ஞானம் ஆத்மீகத்தைவிடச் சிறந்தது என்று தானே தெரிகிறது?

இவ்வுலக வாழ்க்கையைப்பற்றிய வசதிகளையும் நுட்பங்களையும் புகட்டுவது விஞ்ஞானம். அது போதிக்கின்ற உண்மைகளையெல்லாம் பயன்படுத்திஞல் இவ்வுலக வாழ்க்கையை உயர்ந்ததாகச் செய்து கொள்ளலாம்; நல்ல சுகஜீவனம் பண்ணலாம். ஆத்மீக ஞானம் என்பது ஒழுக்கத்தையும் இவ்வுலகுக்கப்பாலுள்ள பாரமார்த்திகப் பெருவாழ்வையும் புகட்டுவதாகும். வாழ்க்கை சம்பந்தமான சிக்கலான பிரச்னைகளையெல்லாம் அது தீர்த்துவைக்கிறது.

மரணத்தின் மர்மத்தை அது விளக்குகிறது. துன்பங்களினின்று தப்பித்துக்கொள்ளுதற்கும் ஆத்ம ஞானம் வழிகாட்டுகிறது. மனிதனை மேலோனுக்கு தற்கு ஆத்மீகத்துறை ஒன்றே உற்ற உபாயம். இந்த ஞானம் சிறப்பாக இந்தியாவில் தோன்றியது. இன்றைக்கும் அது இந்தியாவிலேயே சிறப்பாக யாரோ சிலரிடத்தில் நிலைபெற்றிருக்கிறது.

இந்திய மக்கள் இன்றைக்கு ஊக்கம் குன்றியவர்களாக, ஆற்றல் அற்றவர்களாக இருக்கிறார்கள். இவ்வுலக வாழ்க்கையை செப்பனிட்டுக் கொள்ளுதற்கு ஏதுவாக இருக்கிற விஞ்ஞானத்தில் தீவிரமாகச் செல்லுதற்கு அவர்களுக்கு இயலுகிறதில்லை. ஆத்மீக வாழ்வை உறுதியாகக் கடைப்பிடிக்கவும் அவர்களுக்கு சாத்தியமாவதில்லை. சமுதாயம் முழுதும் தளர்வுற்று இருப்பதால் இகலோக வாழ்வையோ, பரலோக வாழ்வையோ பெறத் தகுதியற்றவர்களாக இருக்கிறார்கள். மேல்நாட்டவர்கள் இகலோக வாழ்வை நன்கு அனுபவித்து வருகிறார்கள். விஞ்ஞானத்தை அதற்கு நன்றாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். ஊக்கம் உடையவர்க்கே இகலோகமும் கிடைக்கின்றது, பரலோகமும் கிடைக்கின்றது. பாரமார்த்திக வாழ்வில் இன்றைக்கு மேல்நாட்டவர்களில் யாரோ சிலர் ஈடுபடுகின்றனர். அதனால் ஆத்மீக வாழ்விலும் அவர்களில் சிலர் விரைந்து முன்னேற்றமடைகின்றனர்.

ஊக்கம் உடையவன் எதையும் தன்னுடைய முன்னேற்றத்துக்குப் பயன்படுத்திக்கொள்ள முடி

யும். ஊக்கம் இல்லாதவனிடத்து எவ்வளவு உயர்ந்த ஞானமிருந்தாலும், எவ்வளவு பெரிய செல்வம் இருந்தாலும் இரண்டும் வீணாய்ப் போய்விடும். நாம் வலிவு குன்றியவர்களாக இருக்கின்றோம் என்பது வெளிப்படை.

விஞ்ஞானம் வேதாந்தம் ஆகிய இரண்டையும் நன்கு பயன்படுத்துகிற மனிதனே இகம் பரம் ஆகியவைகளை இனிது பெறமுடியும் என்பது விவேகானந்த சுவாமிகளின் கொள்கை. இவ்விரண்டையும் இனிது பயன்படுத்துகின்ற உயர்நிலைக்கு நம்நாடு இன்னும் வரவில்லை. அப்படி உயர்வு அடைந்தான பிறகு விஞ்ஞானம் பெரியது; பின்பு அதைவிடப் பெரியது ஆத்மீக ஞானம் என்பதை நமது சமுதாயம் அதனுடைய ஜீவிதத்தின் வாயிலாக விளக்க வல்லதாகும்.

**கேள்வி: (26)** மனிதனுக்கு இரண்டு சக்திகள் உள்ளனவாம். ஒரு சக்தி அவனைக் கெட்ட வழிகளில் இறங்கும்படி தூண்டி அவனுடைய வாழ்க்கையையே பாழாகும்படி செய்கிறது. அதாவது காமமோக வலையில் அகப்படச் செய்து அவனைச் சீரழித்து உயிரையும் வாங்குகிறது. மற்றொரு சக்தி அவனை உலகம் மெச்சும்படி செய்கிறது; பஞ்சேந்திரியங்களை அடக்க உதவுகிறது. இவ்விரு சக்திகளும் ஒரு மனத்துள்ளே அடங்கியுள்ளன. ஆனால் பெரும்பாலான மக்களின் வாழ்வில் முதலில் சொன்ன சக்தியே தலைதூக்கி நிற்கிறது.

ஏதோ ஒருசில உத்தமரின் வாழ்வில்தான் இரண்டாவது சக்தி தலைதூக்குகிறது. இதற்குக் காரணம் யாது?

இயற்கையிலும் மனிதனிடத்தும் இருக்கும் சக்தி ஒன்றே. அது இரண்டு விதத்தில் பரிணமிக்கின்றது. உண்டுபண்ணும் தன்மை உடையதாக அது பரிணமிக்கும்பொழுது அதை மேலான சக்தி என்கின்றோம். அழிக்கும் தன்மையதாக அது பரிணமித்தால் அதைக் கீழானதென்கிறோம். ஆசை என்னும் சக்தியைச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். கல்வி கற்க ஒருவன் ஆசைப்படுகிறான். அத்தகைய ஆசை அவனை மேலோன் ஆக்குகிறது. இந்திரிய சுகத்துக்கு இன்னொருவன் ஆசைப்படுகின்றான். அதற்கு இடங்கொடுப்பதால் அவன் கீழ்மை அடைகிறான். இரண்டுக்கும் ஆசை ஒன்றே. கீழ்மை அடைவதினின்று விரைவில் அல்லது நாளடைவில் ஓர் உண்மை புலப்படும். மனது பொறிவழியே செல்லும் கீழான ஆசைக்கு இடங்கொடுக்கலாகாது. இடங்கொடுக்குமளவு மனிதன் கெட்டுப்போய்விடுவான். இத்தகைய அனுபவம் பெறுவதற்கே உயிர் வாழ்க்கை ஏற்பட்டிருக்கிறது. அனுபவம் ஒவ்வொன்றும் விவேகம் உதயமாவதற்கு முகாமையாகிறது. விவேகத்தை விரைவில் பெறுகின்றவர் சான்றோர். நெடுநாளைக்குப் பிறகு அதை அடைபவர் பொதுமக்கள். இன்பமாகவும் துன்பமாகவும் பரிணமிக்கின்ற சக்தி ஏதேனும் ஒருவிதத்தில் நமக்குப் பாடம் புகட்டிக் கொண்டே இருக்கிறது. பெரும்பாலோர் மேலான

பாடத்தை விரைவில் கற்றுக்கொள்ள இயலாதவர்களாக இருக்கிறார்கள் என்பது வெளிப்படை. எனக்கு நலம் தருவது எது என்று விசாரித்துக்கொண்டே ஒருவன் ஆசையை நிறைவேற்றி வருவானாகில் அவன் விரைவில் கெட்ட ஆசைகளைக் களைந்து நல்ல ஆசையில் ஈடுபடுவான்.

**கேள்வி : (27)** ஜீவியத்தை இன்சூர் செய்வது அறநெறிக்கு மாறானதா? கடவுள் இட்ட திட்டத்திற்கு அது முரண்படுவதாகுமா?

குடும்பத்தை நிர்வகித்துவரும் ஒருவர் தனது காலத்துக்குப் பிறகு குடும்பத்திலுள்ளவர்களுக்குப் பொருளாதார நெருக்கடி பெரியது ஒன்றும் ஏற்படாதிருத்தல் பொருட்டு தனது ஜீவியத்தை இன்சூர் செய்துகொள்கிறார். லௌகிக அமைப்பை ஆராயுங்கால் இது பாராட்டத்தக்க நல்ல ஏற்பாடே. உதவி இல்லாதவர்களுக்கு ஒரு கம்பெனியின் மூலமாக ஒரு சுமாரான உதவி கிடைக்கிறது.

ஆனால் பக்தி மார்க்கத்தில் தீவிரமாகப் போகிறவர்கள் தங்களுடைய வாழ்க்கையை இன்சூர் செய்வதில்லை; செய்வதும் பக்திக்குப் பொருந்தாது. பக்தர்கள் கூடியவரையில் குடும்ப வாழ்க்கையில் சிக்கலான பிரச்னை இல்லாது பார்த்துக்கொள்கின்றனர். அதற்குமேல் அவர்கள் முற்றிலும் தெய்வத்தையே நம்பியிருக்கின்றனர். தெய்வ நம்பிக்கை ஒன்றே அவர்களுடைய இன்சூரன்ஸ் பாலிசி ஆகும்.

**கேள்வி :** (28) மகாபாரத யுத்தத்திலே கண்ணன், கர்ணனிடம் இறுதிக்கட்டத்தில் அவனைக் காத்து நின்ற தர்மதேவதையை (புண்யத்தின் பலன்களை) யாசித்துப் பெற்ருன் என்று கூறப்படுகிறது. புண்யம் பாபம் என்று சொல்லப்படுவது ஒருவனின் செய்கைகளின் விளைவு. அதேபோல் கர்ணனின் கொடைத் தன்மையின் விளைவு தர்ம தேவதையாக அவனைக் காத்து நிற்கின்றது கடைசி நேரத்தில். அது அவன் சக்திக்கு உட்படாதது. அதைத் தானமாக அளிக்க, அவனுக்குச் சாத்தியப்படுமா ? நற்காரியங்களைச் செய்துகொண்டே அதன் பலாபலன்களை இழக்க முடியுமா? பாபம் செய்தால் ஒரு வேளை நற்பலன்களை இழக்கலாம். எந்த நற்செயலின் விளைவாக இந்தப் புண்ணியங்கள் தர்ம தேவதையாக அதன் கடன் உணர்ந்து அதுவாக நியதிப்படி அவனை அடைந்ததோ அதே நற்செய்கை தானமளிப்பது காரணமாக அந்தப் புண்யங்கள் அவனை விட்டு நீங்குவது என்பது நியதிக்கு மாறுபட்ட செயல் அல்லவா ? அப்படியே அந்தப் புண்யங்கள் அவனைவிட்டு அகன்றுவிட்டது என்ருலும் இப்போது கண்ணனுக்கு மகத்தான தானம் செய்கிருனே அதற்குரிய தேவதை இத்தனை நேரம் இவனைக் காத்து நின்றதைவிட அதிக வலியுடையது ஒன்று இவனுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டியது நியாயமல்லவா? அப்படியில்லாமல் அர்ஜுனனுல் கர்ணன் கொல்லப்படுவது முறையா? இது எல்லோருடைய செயலுக்கும் அப்பாற்பட்டது.

எனவே கீதையின் சாரம் அதற்குக் காரணமானால் இம் மாதிரி யாசிப்பது போன்ற சூழ்ச்சி நாடகங்கள் அவசியமில்லையல்லவா !

எது பாபம், எது புண்ணியம் என்பதை தெளிவு படத் தெரிந்துகொள்ள வேண்டும். ஒரு மனிதன் எந்நிலையில் இருக்கின்றானோ அந்நிலையினின்று அவனை மேலே உயர்த்தும் செயல் எதுவோ அது அவனுக்குப் புண்ணியமாகும். அவன் இருக்கும் நிலையிலிருந்து அவனைக் கீழ்மைக்குக் கொண்டு வரும் செயல் பாபம் ஆகும். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒரு மாணாக்கன் நான்காவது வகுப்பிலும் மற்றொருவன் ஆறுவது வகுப்பிலும் வாசிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். நான்காவது வகுப்பு மாணாக்கன் ஐந்தாவது வகுப்புக்குப் போவது புண்யச் செயல். ஆறும் வகுப்பில் வாசிக்கும் மாணாக்கன் அவ்வகுப்புக்குத் தகுதியற்றவனென்று ஐந்தாம் வகுப்புக்குக் கடத்தப்படுவானாகில் அவனுக்கு அது பாபச் செயல். இருவரும் வந்தது ஐந்தாவது வகுப்புக்கு எனினும் ஒருவனுக்குப் புண்ணியம் ஆகிறது, மற்றொருவனுக்கு அது பாபம் ஆகிறது. பாப புண்ணியத்தை அளப்பதற்கு இதை மாதிரியாக வைத்துக்கொள்ளலாம்.

வினைப்பயன் மனிதனுக்குப் பிறவியை வளர்த்துக்கொண்டே போகிறது. கெட்ட வினையில் பற்றுதல் வைத்திருப்பவனுக்கு பாபம் வளர்ந்து கீழான பிறவி அமைகிறது. நல்ல வினையில் பற்றுதல்

வைத்து அதைத் தீவிரமாகச் செய்கிறவனுக்குப் புண்ணியம் வளர்ந்து நல்ல பிறவி கிட்டுகிறது. நல்வினையில் பற்றுதல் வைப்பது ஒன்றே தீவினையை அகற்றுதற்கு உற்ற உபாயம். நல்வினையில் ஊறி வளர்ந்த பிறகு அந்த வினையையும் பற்றற்றுச்செய்து பழகவேண்டும். பற்றற்ற செயல் என்றால் பொருள் என்ன என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும். டாக்டர் ஒருவர் நேர்மையாக வைத்தியம் பண்ணுகிறார்; அது நல்வினை. தனக்கு ஏராளமாகப் பணம் சேரவேண்டுமென்று எண்ணிநோயாளிகளிடமிருந்து கண்டிப்பாக பணம் வாங்கித் தன் கடமையைச் செய்வது பற்றுடைய நல்வினையாகும். பணத்தைப் பற்றி ஒன்றும் நினையாது தன் கடமையை மகிழ்வுடன் செய்துகொண்டு போவது நிஷ்காமிய கர்மமாகும்; அதாவது அதுவே பற்றற்ற வினை. பணமுடையவர் பணமில்லாதார் ஆகிய எல்லோருக்கும் ஒரே விதமான சிகிச்சை, பிறகு யார் எதைக் கட்டணமாகக் கொடுத்தாலும் அதை ஏற்றுக்கொள்ளுதல், ஏற்றுக்கொண்ட செல்வத்தையும் நல்ல காரியத்திலேயே செலவிட்டுக் கொண்டிருத்தல்—இதுவே பற்றற்ற வினையாகும். பற்றற்ற வினை மனதைத் தூயதாக்குகிறது. தூய மனதில் நல்ல ஞானம் உதயமாகிறது.

கருமயோகி ஒருவன் கடவுள் பொருட்டே வாழ்ந்திருக்கவேண்டும். கடவுள் பொருட்டே கர்மம் செய்ய வேண்டும். தனக்குக் கிடைக்கும் பணத்

தைத் தெய்வம் தந்தது என்று கருதுகிறான். அதைச் செலவிடுவதை அவன் தேவ ஆராதனையாகக் கருதுகிறான். நாள்தோறும் தனது ஜீவிதத்தை அவன் இறைவனுக்கே ஒப்படைத்துப் பழகுகிறான். ஆத்ம சாதகன் ஒருவன் தான் பயிலுகின்ற பக்தி, தியானம், பணிவிடை ஆகிய எல்லாவற்றையும் அன்றன்று இறைவனுக்கு சமர்ப்பணம் பண்ணிவிடுகிறான். அப்பொழுதுதான் அவன் முக்திக்குத் தகுதியுடையவன் ஆகின்றான்.

இருள்சேர் இருவினையும் சேரா, இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு

என்பது மறைமொழி.

நல்வினை தீவினை ஆகிய இருவினைகளும் இருள் சேர்ந்தவைகள் என்று கருதப்படுகின்றன. அவைகள் பிறவியைப் பெருக்குவதே அதற்குக் காரணமாகும். ஆகவே நல்வினையும் ஒருவகை பந்தபாசமாகிறது. கொடை ஆகிய நல்வினையை கர்ணன் ஓயாது செய்து வந்தான். ஆனால் தனக்குச் சொர்க்கமோ உயர்ந்த பதவியோ கிட்டவேண்டும் என்ற ஆசை அவனுக்குக் கிடையாது. அந்த அளவில் அது நிஷ்காமிய கர்மமாகும். கர்ணன் நல்ல கர்மயோகி. கர்மயோகிக்குச் சொந்தமானது என்பது ஒன்றும் இல்லை. எண்ணத்தைப் பொறுத்தே உடைமையும், வறுமையும் வந்து அமைகின்றன. கர்ணனுடைய எண்ணம் உயர்ந்தது. ஆக, அவனுக்கு வறுமை கிடையாது. செல்வம் படைத்த

மற்ற பேர் அரசர்கள் அவனுக்கு ஒப்பு ஆகார். ஏனென்றால் எண்ணத்திலோ, அல்லது தாராளமாக் எடுத்து வழங்கும் பாங்கிலோ அவர்கள் கர்ணனுக்கு நிகர் ஆகார்கள். இந்த உயர்ந்த எண்ணமே கர்ணனை மோக்ஷ சாம்ராஜ்யத்துக்குத் தகுதியுடையவனாகச் செய்து வந்தது. மேலும் பிறப்பு எடுப்பது அவனுக்கு அவசியமில்லை. அவன் நிறைவேற்ற வேண்டிய ஆசையும் ஒன்றும் பாக்கியில்லை. தான் வாழ்ந்திருக்கும் வரையில் தன்னிடத்திருந்தது அனைத்தும் பொது உடைமையாகப் போகவேண்டும் என்பது ஒன்றே அவனது விருப்பம். அதை ஆசை என்று நாம் பொருள்படுத்தலாகாது. ஆசையைக் கடந்த உயர்ந்த நிலை ஆகும் அது.

கண்ணபிரான் கர்ணனுடைய மகிமையை உலகுக்குக் காட்ட எண்ணங்கொண்டான். வினைத்தளைகள் அனைத்தினின்றும் அவன் விடுபட்டவன் என்பதையும் நிரூபிக்க நாராயணன் திருவுளம் கொண்டான். கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏற்பட்ட யுத்தம் பிராரப்த கர்மபலன் ஆகும். ஏதேனும் ஒரு வினையாற்றி உடலை உகுத்துவிடவே அவர்கள் உலகில் வாழ்ந்திருந்தனர். வினை எது ஆனாலும் அதை இறைவனுக்கு ஒப்படைத்து இறைவனுடைய பிரபஞ்ச நிர்வாகம் என்பதில் சேர்த்துவிடுகின்ற சான்றோர் போர் புரிதல் போன்ற வினையின் வாயிலாகவும் முக்தியடைகின்றனர். பிரபஞ்ச நடைமுறையில் எல்லா வினைகளுக்கும் இடமுண்டு. எனவே,

அர்ஜுனனும் கர்ணனும் தங்களுக்குக் கடைசியாக எஞ்சியிருக்கும் ஊழ் வினையை அப்படி ஒழித்து விடுவதே முறையாகும்.

இந்தச் சூழ்நிலையை கிருஷ்ணன் நன்கு பயன் படுத்திக்கொண்டான். கர்ணனுடைய பெருமையை விளக்குதற்கு அவன் முன் வந்தான்; போர்க்களத் தில் யாசகத்துக்குப் போனான். கொடுப்பதற்கு ஒன்றுமில்லையே என்று கர்ணன் வருந்தினான். நல் வினைப் பயனில் அவன் பற்று வைக்கவில்லை என் பதை அந்த வருத்தமே விளக்குகிறது. 'இல்லை, கொடுப்பதற்கு உன்னிடம் ஒன்று உண்டு' என்று யாசகன் ஞாபகமூட்டினான். 'அப்படியிருக்குமாகில் அது உம்முடையதே' என்று கர்ணன் உடனே உடன் படிக்கை செய்துவிடுகின்றான். 'கொடையின் விளைவு ஆகிய புண்ணியத்தைத் தா' என்று யாச கன் கேட்டான். அத்தகையது ஒன்று எனக்குச் சொந்தமாக இருக்குமாகில் இப்பொழுதே அது உமக்கு உரியதாகட்டும்' என்கின்றான் கர்ணன். அவ னுடைய மன பரிபாகத்தின் உச்சநிலை அது. அப்படி எல்லாம் கொடுத்துவிட்டதின் விளைவாக அவனுக்கு முக்தி கிட்டுகிறது. ஆக, கிருஷ்ணன் கர்ணனை ஆட் கொண்டான்; வினைத் தளையினின்று விடுவித்தான்; முக்தியை நல்கினான். சூழ்ச்சி போன்று மதுசூதனன் பண்ணியது கர்ணன் போன்ற உத்தம ஆத்மா ஒரு வனை ஆட்கொள்ளுதல் பொருட்டேயாம். பின்பு, போரில் அவனுடைய உடலம் கீழே வீழ்ந்தது.

முட்டையினின்று மேலே பறந்துசெல்லும் பறவைக்கு முட்டையின் மேல் ஓடு எப்படி உடைந்து எங்கு விழுந்தால்தான் என்ன? உடல் அழிவதைச் சான்றோர் இங்ஙனம் பொருள்படுத்தாது விட்டுவிடுகின்றனர். ஜீவாத்மா பரமாத்மாவில் கலப்பதே அவர்கள் காட்சியில் படும் சிறந்த செயல் ஆகும். அத்தகைய முக்தியை முதலில் கர்ணன் பெற்றான். தன் வினைப்பயன் முடிந்த பிறகு அர்ஜுனனும் அதைப் பெறுதற்கு ஆயத்தமாயிருந்தான்.

**கேள்வி : (29)** மௌனம் என்பதன் பொருள் யாது? உடல், வாய் இரண்டையும் அடக்க முடிவதாகத் தெரிகிறது. மனம் மட்டும் அடங்காமல் சங்கற்பித்துக்கொண்டே இருக்கிறது. அதை அடக்கும் முறை யாது?

மௌனத்துக்குப் பல படித்தரங்கள் உண்டு. ஓயாது மிகைபட பொருளற்ற பேச்சுக்களைப் பேசிக் கொண்டிருப்பவனுக்குப் பொருள் உள்ள பேச்சுக்களை மட்டும் பேசுவது மௌனமாகும்.

பொருள் உள்ள பேச்சுக்களை மிகைபடப் பேசுபவனுக்கு அவைகளை அளவுபடப் பேசுதல் மௌனமாகும்.

பேச வேண்டிய நல்ல விஷயத்தையும் பிறர் கேட்டால் ஒழிய பேசாதிருப்பது அதிலும் உயர்ந்த மௌனமாகும்.

பிறர் பேசும்படி தூண்டினாலும் அப்பேச்சு பிறருக்கோ தனக்கோ அதிகம் பயன்படாது என்று

*தெரிந்தால் பேசாது அடங்கியிருப்பது அதிலும் உயர்ந்த மௌனமாகும்.*

*இப்படி மௌனத்திலே மேலே போகப் போக மனம் அடங்கியிருப்பதற்கு அந்த மௌன நிலையே புறக்குறியாகிறது.*

*ஒருவன் வாய் பேசாதிருந்தாலும் மனதுக்குள்ளே விதவிதமான எண்ணங்கள் உதித்துக் கொண்டிருக்கலாம். அது பேசுதற்குக் கிட்டத்தட்ட சமானமாகிறது. அத்தகைய எண்ணங்களும் உதிக்கலாகாது. கடவுள் சிந்தனை வலுத்துவந்தால் வேறு எண்ணங்கள் அடிபட்டுப்போம். கடவுளுடைய ஒரே ஒரு எண்ணம் நிலைத்து நின்றுவிட்டால் அது பண்பட்ட நிலை. அந்தப் பண்பட்ட நிலையில் மனது நசித்து விட்டால் மௌனம் ஆங்குப் பூர்த்தியாகிறது. எஞ்சியிருப்பது பிரம்ம சொரூபம்.*

**கேள்வி : (30)** மெய்க்குரு ஒருவருடைய உபதேசம் நேரடியாக இல்லாமலேயே நாம ஜபம், வேதாந்த விசாரம், தூய வாழ்க்கை முதலியவைகளாலேயே ஒருவர் ஆத்ம ஞானத்தை அடைவது சாத்தியந்தானா? அர்த்தமின்றி வாக்கு இல்லை, பொருளின்றிப் பெயர் இல்லை. பொருளை அறியாமல் வெறும் நாமஜெபம் எவ்வளவு வரைக்கும் பயனளிக்கும்? குரு அவசியம் என்றால் அவரைத் தேடி அடையவேண்டியதா? அப்படியென்றால் இவரைக் குருவாக அடையலாம், இவரை அடையக்கூடாது என்று நாம் எதைக்கொண்டு நிர்ணயிப்பது? அல்லது நமக்கு பரிபாகம் வந்தவுடன்

ஞானகுரு ஒருவர் தானாக ஏற்பட்டு ஆத்ம ஞானத்தை உபதேசிப்பாரா ?

பெரியோர்களுடைய பாரமார்த்திக வாழ்வினின்று இக்கேள்விகளுக்குப் பொருத்தமான விடைகளைப் பெறலாம். எரிகின்ற ஒரு தீபத்திலிருந்து மற்றொரு தீபத்தை ஏற்றிவைக்கலாம். அல்லது இரண்டு மரக்குச்சிகளை ஒன்றன்மீது ஒன்றை விரைந்து உரைத்துத் தீயை உண்டுபண்ணலாம். தீயைப் பெறுதற்கு இரண்டு முறைகளும் சரியானவைகளேயாம். அதேவிதத்தில் ஞானகுரு ஒருவரிடமிருந்து பரிபாகம் அடைந்துள்ள சிஷ்யன் ஞானத்தைப் பெறலாம். குரு ஸ்தானத்தில் இருப்பவரிடம் ஞானம் இல்லாது போய்விட்டாலோ, அல்லது சிஷ்யன் சரியான பரிபக்குவம் அடையாதிருந்தாலோ ஞானத்தை குரு சிஷ்ய பரம்பரை முறையிலே வளர்க்கமுடியாது.

மரக்கட்டைகளை உரைத்துத் தீயை உண்டுபண்ணுவது போன்று சுயப் பிரயத்தனத்தினாலேயே ஒருவன் ஞானத்தைப் பெறலாம். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ராமதீர்த்த சுவாமிகள், ஸ்ரீ ரமண மஹரிஷி ஆகிய இக்காலத்திய பெரியவர்களையே இதற்குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். குருவின் துணையின்றி நேர்மையான பாரமார்த்திக வாழ்வினின்று இவர்கள் ஞானத்தைப் பெற்றார்கள். சுயப் பிரயத்தனத்தால் தெய்வ தரிசனம் அடையப்பெற்ற பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ண பரம்ஹம்ஸர் சில குருமார்களை ஒரு

வர்பின் ஒருவராக ஏற்று அவர்கள் சொற்படி நடந்து விதவிதமான அனுபவங்களைப் பெற்றார். குருவைத் தேடி வீணே அலைந்து திரியவேண்டாம். சாதனத்தை முறையாகச் செய்துகொண்டுபோ. அப்படி முறை யாகச் செய்துகொண்டு போகின்றவனுக்குக் கடவுள் கிருபையும் குருவின் துணையும் தாமே வந்தமை கின்றன. இக்கோட்பாடுதான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய ஜீவிதத்திலிருந்து நமக்குக் கிடைக்கும் பாடமாகும்.

ஒவ்வொரு பதத்துக்கும் அர்த்தம் உண்டு. ஆனால் துவக்கத்திலேயே நாம் அர்த்தத்தை தெரிந்து கொள்ள முடியாது. பதத்தை மட்டும் உச்சரித்துக் கொண்டே போனால் அது மனதைப் பண்படுத்த வல்லது. பண்பட்டான பிறகு அதன் அர்த்தம் மன தில் உதயமாகும். இதற்குத் தக்க சான்று வால்மீகி மஹரிஷி. 'ராமா' என்னும் பதத்தை அவர் ஓயாது உச்சரித்தார்; மனபரிபாகம் அடைந்தார்; மஹரிஷி ஆனார். அப்பதத்தின் அர்த்தம் ஆகிய ராமசரிதம் முழுதும் அவர் மனதில் உதயமாயிற்று. ஆதி காவிய மாக இராமாயணத்தை அமைத்தார்.

'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமசிவாயவே' என்கிறார் சைவசமயக் குரவர் ஒருவர்.

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே

என்கின்றது திருமந்திரம். அர்த்தம் தெரியாது கடவுளுடைய நாமமாகிய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே போனால் மனபரிபாகம் ஆய்விடுகிறது. பொருளும் பிறகு விளங்கிவிடுகிறது என்பதுதான் பெரியோர்கள் அனுபவத்தில் கண்டுள்ள உண்மையாகும். ஆகவே, மந்திரங்களுக்கு அர்த்தம் தெரியாவிட்டாலும் அவைகளைப் பக்தி சிரத்தையுடன் ஓயாது உச்சரிப்பதே முறை.

குருவைத் தேடி நாம் அலையவேண்டியதில்லை. நல்வாழ்வு வாழவேண்டும் என்று ஊக்கங்கொண்டிருக்கவேண்டும். தக்க தருணத்தில் குருவை நாம் அடையவேண்டிய அவசியம் ஏற்படும்பொழுது சர்வேசுவரனே அச்செயலை நிறைவேற்றி வைப்பார். உணவு பசியைப் போக்குவது போன்று யார் நமது வாழ்வைச் செப்பனிடுகின்றாரோ அத்தகையவரை செப்பனிடுதல் என்னும் செயல் நிறைவேறியான பிறகு குரு என்று அங்கீகரித்துக்கொள்ளலாம். விவேகானந்த சுவாமிகள் அதைத்தான் செய்தார்.

**கேள்வி: (31)** தன்னுடைய சொந்த சமய நம்பிக்கைகளை, சம்பிரதாயங்களை தந்தை ஒருவர் எந்த அளவுக்குத் தன்னுடைய மக்களுக்கு வலுக்கட்டாயமாகப் புகுத்தலாம்? ஒரு குறிப்பிட்ட நம்பிக்கை, விசுவாசம் இவற்றிற்கான சூழ்நிலையை மட்டும் தனது குடும்பத்தில் ஏற்படுத்தும் குடும்பத்தலைவன் குடும்பத்தில் உள்ள மற்ற ஜீவர்களின் சுயவளர்ச்சிக்கு ஹானி செய்கின்றானல்லவா?

சமய உணர்ச்சியிலே ஒரு மனிதன் வளர்ச்சி யடைந்து வருவது ஒரு செடியின் வளர்ச்சிக்கு ஒப்பாகிறது. செடி சிறியதாக இருக்கும்பொழுது அதற்கு வேலி கட்டவேண்டும். மிகைபட வெயிலோ, காற்ருே, மழையோ அதைத் தாக்கலாகாது. அவ்வளவு பெரிய பாதுகாப்பு அதற்குக் கொடுப்பது அவசியம். ஒரு குடும்பத்தில் இருக்கும் எல்லோர்க்கும் அக்குடும்பத்திற்குத் தலைவனுக இருப்பவனே பொருள் கொடுத்து ஆதரிப்பது போன்று சமய உணர்ச்சியும் கொடுத்து ஆதரிக்கவேண்டும். இயற்கையின் பரந்த நடைமுறையை ஆராய்ந்து பார்த்தால் ஒரு பேருண்மை விளங்கும். ஒவ்வோர் உயிரும் அதற்குத் தகுந்த சூழ்நிலையிலேயே பெரிதும் பிறப்பெடுக்கிறது என்பதே அவ்வுண்மையாகும். இக்கோட்பாட்டை ஆங்கிலத்தில், The law of affinity என்றும் The law of natural selection என்றும் பகர்வார்கள். இக்கோட்பாட்டின்படி ஒரு குடும்பத்திலே பிறக்கின்ற சிறுவர்களுக்கு அக்குடும்பத்தைச் சேர்ந்த பெரியோர்கள் ஐதிகமாக அக்குடும்பத்தில் வந்துள்ள மதக் கோட்பாடுகளையே நன்கு போதிக்க வேண்டும். ஏதேனும் ஒரு மதக்கோட்பாட்டில் நன்ருக ஊறி வளரும் மனிதன் ஒருவனுக்கு மன பரிபாகம் உண்டாகிறது. பிறகு தன் மதத்தையே வேண்டுமென்ருல் மாற்றி யமைத்துக்கொள்ளும் விவேகமும் சிரத்தையும் காலக்கிரமத்தில் வந்தமையும். சிறு செடி மரம் ஆகும்பொழுது வேலியை

அகற்றிவிடுதற்கு இது ஒப்பு ஆகும். சிறுவனுக்குரிய செல்வத்தை முதியோர் காப்பாளராக இருந்து வேண்டியவாறு வளர்ப்பது போன்று சிறுவர்க்கு சமய உணர்ச்சியைத் தமக்குத் தோன்றியவாறும், தமது குல ஐதிகத்துக்கு ஏற்றவாறும் ஏராளமாக வழங்குவதே தகப்பனுடைய கடமையாகும். ஏதேனும் ஒருவிதத்தில் சமய அனுஷ்டானத்தைக் கட்டாயப்படுத்தி சிறுவர்கள் உள்ளத்தில் செலுத்துவதுதான் தகப்பனுடைய கடமை. மைந்தன் பெரியவன் ஆனபிறகு தனக்கு வேண்டிய முறையில் அவன் அதை மாற்றியமைத்துக்கொள்ளலாம். இத்தகைய சமய அனுஷ்டான சுதந்தரம் நம் நாட்டில் எக்காலத்திலும் இருந்து வந்திருக்கிறது.

**கேள்வி: (32)** ஜீவர்கள் பிரம்மத்தின் சிறு பொறிகள். நாம் பிரம்மம்தான் என்றால் பிரம்மத்தைப் போலல்லாது ஜீவன் ஏன் துன்பப்படுகிறது? ஒருவன் நிரந்தர இன்பத்திலும் நிரந்தர துன்பத்திலும் இருப்பதில்லையே. ஆகவே நாம் பிரம்மம் என்றால் ஆனந்தம் இல்லையே. ஆகவே இறைவன், உயிர், பாசம் என்ற முப்பொருள் உண்டு ஒன்றே அல்ல. முடிவில் இருப்பவை முப்பொருளா அல்லது ஒரு பொருளா?

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை பலவிதமான உபமானங்களைக்கொண்டு விளக்கியிருக்கிறார்கள். உபமானத்தில் ஏகதேச உண்மைதான் கிடைக்கும். முழு உண்மையைப் படிப்பதாலும், கேட்பதாலும், சம்வாதம் செய்வ

தாலும் தெரிந்துகொள்ள முடியாது. ஆராய்ச்சி ஓரளவுக்கே உதவும். பரமாத்மாவை தீ என்றும் ஜீவாத்மாவை பொறியென்றும் சொல்லுவதில் முழு விளக்கம் வருகிறதில்லை. பொறி ஆனது தீயை விட்டுப் பிரிந்து போய்விடுகிறது; பிறகு அணைந்தும் போய்விடுகிறது. ஆனால் ஜீவனோ பரம்பொருளை விட்டு எக்காலத்திலும் பிரிந்துபோனதில்லை; இனி பிரியப்போவதுமில்லை. அவன் அக்ஞான நிலையி லிருக்கின்றபொழுது தனக்குத் தனி வியக்தியிருக் கிறது என்று எண்ணிக்கொள்கிறான். ஜீவன் துன்பப்படுவதற்குக் காரணமும் இந்த அக்ஞானமே யாம். ஆகவே அவனிடத்து ஜீவபோதம் இருக்கும் பரியந்தம் இறைவன், பாசம், உயிர் என்ற வேற்று மையும் இருக்கிறது. பாசம் வெறும் கற்பிதம் என் பதை ஞானோதயம் உண்டாகும்பொழுது ஜீவன் தெரிந்துகொள்கின்றான். அப்பொழுது அவன் மனத்தைவிட்டுப் பாசம் அல்லது மலம் அகன்று விடுகிறது. 'சித்த மலம் அறுவித்து சிவமாக்கி' என் பது ஆன்றோர் அனுபவம். இரண்டு சிவங்கள் இருக் கின்றன வென்பது அல்ல. சிவம் ஒன்றுதான் யாண் டும் உளது. ஜீவனிடத்து அக்ஞானம் இருக்கும் பரி யந்தம் அவனுக்கு இன்பதுன்பம் முதலிய இருமை கள் மாறி மாறி வந்துகொண்டிருக்கின்றன. அக் ஞானம் அகன்றான பிறகு ஜீவபோதம் போய் பரத் தில் ஒன்றாய்விடுகிறான். கடலை அடைந்த நதி தன் பெயரையும் வடிவத்தையும் இழந்து கடல் ஆய்விடு

வதுபோன்றது அது. நதியாவது கடலுக்கு அப்பாலிருந்து பிறகு கடலைவந்து சேருகிறது. ஜீவனோ அக்ஞானத்தில் இருக்கும்பொழுதும் பரம்பொருளிடத்திலேயே இருக்கிறான். பரம்பொருளுக்கு அன்னியமாகக் கணப் பொழுதாவது இவன் இருந்தது கிடையாது. ஞானம் என்பது தனக்குத்தான் அவன் கற்பித்துக்கொண்ட சிறுமையை அகற்றுதலாம். அலையானது கடலிலேயிருந்து, கடலிலே உருண்டு, கடலிலே ஒடுங்குவது போன்று ஜீவன் பரம்பொருளிலேயே இருந்து வித விதமான அனுபவம் பெற்று தன் யதார்த்த சொரூபத்தை ஞானத்தில் அறிந்து ஜீவபோதம் என்னும் வியக்தியைக் கலைத்துவிடுகிறான். அப்படிக் கலைக்கின்ற ஜீவன் கடைசியாகப் பகரும் சொல் 'நான் கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.' முக்தியில் முப்பொருளும் இருக்கிறதென்று மாணிக்கவாசகர் போன்ற மேலோர் மொழிவதில்லை. உயிர், மலம், இறைவன் என்னும் மூன்று பொருள்களை ஜீவன் ஜகத் பரம் என்று வேதாந்தம் பகர்கிறது. காண்போன் காணப்படுபொருள் காணுதல் ஆகிய மூன்றுக்கும் ஞாதா ஞேயம் ஞானம் என்பன பரிபாஷைகளாம். இவை திரிபுடி எனப்படுகின்றன. காணப்படுபொருள் யாவும் காண்பவனது காட்சியில் அடங்கிவிடுகின்றன. கடைசியில் காண்போன் என்னும் மெய்ப்பொருளே எஞ்சியிருக்கிறது. பிரம்மம் என்பது அதுவே. ஜீவனும் ஜகத்தும் அதில் லயமாகிவிடுகின்றன.

**கேள்வி : (33)** அவனன்றி ஓரணுவும் அசையாது என்பது அழகான கவிதைக் கற்பனையா அல்லது பிரகிருதியின் நடைமுறையில் மாறுதலொரு உண்மையா? உண்மையானால் நாமனைவரும் சூத்ரதாரியின் கரங்களில் சிக்கிய சூத்திரம் போன்று ஆய்விடுகிறோம். இறைவன் ஒருவனே உலகின் நிலைக்குப் பொறுப்பாளியாயிருக்கிறார். ஆனால் கோணலும் பிணக்குமே எங்ஙனும் நிறைந்துள்ள உலகநிலை சிருஷ்டி கர்த்தாவுக்குப் பெருமை தரத் தக்கதாயில்லையே?

*அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்னும் கோட்பாடு கவிதைக் கற்பனையன்று. இயற்கையின் நடைமுறையைப்பற்றிய முடிவான உண்மை அதுவே. அதில் சொல்லழகு மட்டுமல்ல, பொருள் அழகும் உண்டு. அதை நாம் முடிவான உண்மையென்று சொல்லுகிறோமே ஒழிய எல்லாப் படித்தரங்களிலும் ஜீவனுக்கு அது உண்மையென்று சொல்லுகிறதில்லை.*

*கட்டிடம் கட்டுதற்கு வேலைக்காரன் கற்களைக் கையாளுகிறான். அவனுடைய காட்சியில் கல் நீளம், அகலம், கனம் அடங்கிய பொருள் ஆகிறது. அதே கல்லை ரசாயன சாஸ்திரி ஒருவர் இன்னொரு பாங்கில் பொருள்படுத்துவார். அக் கல்லின் ஒப்பு அடர்த்தி எத்தகையது, சுய எடை எவ்வளவு கொண்டுள்ளது, அதில் என்னென்ன தாதுக்கள் அடங்கியிருக்கின்றன என்றெல்லாம் அவர் ஆராய்வார். பூகோள உறுப்பு இலக்கணம் ஆராயும் விக்ஞானிக்கு இன்*

றொருவிதத்தில் அதன் அமைப்பு விளங்கும். அணுத் தத்துவத்தை ஆராயும் பௌதிக விஞ்ஞானிக்கு மற்றும் ஒருவிதத்தில் அது விளங்கும். இத்தனை விதக் காட்சிகளுள் எது மெய்யானது, எது பொய்யானது என்று விசாரித்தால் ஒவ்வொரு துறையிலும் உண்மை ஒருபோக்கில் வெளியாகிறது என்கின்ற முடிவுக்கு வந்தாகவேண்டும். ஒரே உண்மை பல சூழ்நிலைகளிலே பல படித்தரங்களிலே மாறுபடும் வெவ்வேறு கோட்பாடுகளாகவும் புலப்படக்கூடும். உண்மையில் அப்படி மாறுபாடு இல்லை. படித்தரத்துக்கு ஏற்ப தத்துவத்தின் விளக்கம் வெவ்வேறு வகைப்படுகிறது என்பதே உறுதியாகிறது.

ஜீவன் ஒருவன் தன்னிடத்து ஜீவபோதம் கொண்டிருக்கும் பரியந்தம் அவனுடைய வினைப் பயன்களெல்லாம் தனக்குத் தானே உண்டுபண்ணிக் கொண்டவைகளாம். அவனுக்கு வந்தமையும் சுக துக்கங்களுக்கெல்லாம் அவனே பொறுப்பாளி. தன் வினைக்குச் சற்றேனும் ஏறவோ, தாழவோ அவனுக்குப் பயன் வந்து அமைவதில்லை. அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் கோட்பாட்டை அவனுடைய ஜீவபோதத்தினுள் செருகிக் குழப்பம் உண்டுபண்ணலாகாது. அவரவர் கர்மத்துக்கேற்ற கர்மபலனே வந்தமைகிறது என்னும் கோட்பாட்டைத்தான் ஜீவபோதம் கொண்டுள்ளவர்கள் காணுதல் கூடும். செயலிலோ, வடிவத்திலோ அழகு படைத்திருப்பதும் அழகற்றிருப்பதும் காரணகாரிய மயமாயுள்ள வினையின் தோற்றங்களாம்.

ஈசன் சமஷ்டிப் பொருள்; ஜீவன் வியஷ்டிப் பொருள். இது நமக்கு விளங்குதற்கு உபமானம் ஒன்றை எடுத்துக்கொள்ளவேண்டும். கடல் என்பது சமஷ்டி; அலை என்பது வியஷ்டி. ஓர் அலைக்குக் காரணகாரிய மயமான தன் செயல் உண்டு. கடல் முழுதையும் தொகுத்துக் காணுங்கால் அலைகளும் அலைகளின் செயல்களும் கடலின் பேரமைப்பில் அடங்கிவிடுகின்றன. கடலின் காட்சி காண்போர்க்கு அலையில்லை. அலையையும் அலையின் செயலையும் காண்போர்க்குக் கடலின் காட்சி குன்றுகிறது. அதே விதத்தில் ஈசனைக் காண்பவர்க்கு பிரபஞ்சமும், பிரபஞ்சச் செயலும் இல்லை; ஜீவர்களும் ஜீவர்களின் வினைகளும் இல்லை. பெரிய பொருளின் காட்சியில் இச்சிறிய சொரூபங்கள் மறைந்துவிடுகின்றன. ஈசனுடைய காட்சி காண்பார்க்கே எல்லாம் ஈசன் செயல் என்கின்ற காட்சியும் தெளிவு ஆகிறது.

மக்கள் செய்யும் தவறுதல் ஜீவகாட்சியையும் ஈசுவரக் காட்சியையும் ஒன்றோடு ஒன்றைக் குழப்பி விடுவதாகிறது. ஜீவ சொரூபத்தை முற்றிலும் ஆராய்ந்தால் அந்த ஜீவனுக்கு வரும் நலம் கேடுகள் அனைத்தும் வினைப்பயனுக்குப் பொருந்தியவைகளாகவே யிருப்பதைக் காணக்கூடும். ஜீவபோதத்தைக் கடந்து ஈசனது சொரூபத்தைத் தரிசிக்கின்றவர்களுக்கு தான், தனது ஆகியவை இல்லை என்பதும், தனக்கென ஒரு செயல் இல்லை என்ப

தும், ஈசனது பெருந்திட்டமே கணக்கற்ற கருவிகள் வாயிலாக நிகழ்ந்து வருகிறது என்பதும் விளங்கும். ஈசனது திருக்காட்சி காண்போர்க்கு ஜீவனைப்பற்றி எண்ணவோ, அவனுக்கு ஒரு ஸ்தானம் தருதற்கோ அவகாசம் இல்லாது போய்விடுகிறது. ஆகவே அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் கோட்பாடு ஜீவபோதத்தில் இருப்பார்க்கு உரியதன்று. பரபோதம் அடையப் பெற்றவர்கள் கண்டறியும் ஞானக் காட்சியாம் அது. அப்பரந்த நிலையில் எல்லாம் பொருத்தமானவைகளே. கோணலையும் பிணக்கையும் அக் காட்சியில் காணமுடியாது. பூமியின் மீது நடந்து செல்லும்போது மேடு பள்ளங்களைக் காண்கிறோம். ஆனால் சந்திரமண்டலத்திலிருந்து பூமியைப் பார்த்தாலோ அது ஒழுங்காக அமைந்த கோளமாகத் தென்படும். பூமியிலிருந்து நாம் சூரியனைப் பார்க்கிறோம். அது முற்றிலும் வட்டமானதாகத் தெரிகிறது. ஆனால் அருகில் போய்ப்பார்த்தால் பல பூமிகளை விழுங்கும் அக்கினி ஜுவாலைகள் அதில் கிளம்பி வருவதைக் காணலாம். அண்டத்தின் நடைமுறை முழுவதையும் தொகுத்துப் பார்த்தால் ஈசனது விளையாட்டு விளங்கும். பேராற்றலும், பேரமைப்பும் பேரழகுமே எங்கும் பொலிவது அப்பொழுது பிரத்யக்ஷம்.

பிரபஞ்சக் காட்சி காண்போர்க்குக் கோணலும் பிணக்கும் தென்படுவது வெளிப்படை. ஏனென்றால் பிரபஞ்சம் என்பதன் பொருளே நலம் கேடு

*ஆகிய இரண்டும் கலந்தது என்பதாம். பிரபஞ்சக் காட்சி பரத்தினுடைய காட்சிக்கு அளவையாகாது. பரத்தின் காட்சி அடையப் பெற்றவர்க்கு, பிரகிருதி காட்சி பொருளற்றதாய்விடுகிறது. அவர்களுடைய குறைபாடுகளை யெல்லாம் கடந்து செல்லுதற்குப் பரத்தின் காட்சியே உற்ற உபாயமாகிறது. வியஷ்டி ஆகிய ஜீவகாட்சியைக் கடந்து சமஷ்டியாகிய பரத்தின் காட்சியைக் காண்பது வாழ்க்கையின் லக்ஷிய மாகும். பரகாட்சி காண்போர்க்கு பிறகு எதைக் குறித்தும் ஐயம் ஏற்படுவதில்லை. முரண்பாடும் குழப்பமும் ஞானியின் காட்சியில் இல்லை. எல்லாம் பரம்பொருளின் பெரிய விளையாட்டு என்று அதைக் கண்டு ரசித்து அதில் ஜீவபோதத்தை நீக்கிக் கலந்து கொள்கிறான்.*

**கேள்வி:** (34) சும்மாயிருத்தல் (Keeping a vacant mind) என்ற நிலையை அடைய நான் எவ்வளவோ முயன்றும் ஒரு விநாடியேனும் அந்நிலையை என்னால் அடையக் கூடவில்லை. அந்நிலையை அடைய ஏதேனும் மார்க்கமுண்டா? சாதாரண மக்களுக்கு அது சாத்தியமா?

*உலகிலே என்னென்னவோ காரியங்களை யெல்லாம் எளிதாகச் சாதித்துவிடலாம். ஆனால் 'சிந்தையை யடக்கியே சும்மாயிருக்கின்ற திறமரிது காண், சத் ஆகி என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே, தேஜோமயானந்தமே' என்று தாயுமான சுவாமிகள் பகர்ந்திருக்கிறார். அரிதில்*

அரிது சிந்தையை அடக்கி சும்மா இருப்பது என்பது அவர் ஒருவருடைய அனுபவம் மட்டுமல்ல; சான்ரேர் எல்லோரும் அதேவிதத்தில் அபிப்பிராயப் படுகின்றனர். Nature abhors vacuum—இயற்கை சூன்யத்தை வெறுக்கிறது என்பது பௌதிக விஞ்ஞானிகளது துணிபு. ஓர் இடத்திலிருந்து காற்றைக் காலி பண்ணிஞல் அவ்விடத்துக்கு மற்ருேர் இடத்திலிருந்து காற்று பாய்ந்தோடி வருவதைக் காண்கிருேம். எந்த இடத்தையும் காலியாக விட்டு வைக்க இயற்கை ஒருப்படுவதில்லை. மனதைக் காலிபண்ண முயலுதலே சும்மா இருப்பது என்பதன் பொருளாகும். ஓர் எண்ணத்தை உள்ளத்தினின்று அகற்ற முயன்ருல் மற்ருேர் எண்ணம் ஆங்குப் பாய்ந்து ஓடிவருகிறது. மனத்தினின்று எண்ணத்தைத் துடைக்க முயலுவது கடலினின்று அலையைத் துடைக்க முயலுதலுக்கு ஒப்பாகும். எண்ணம் என்னும் அலை உள்ளத்தினின்று ஓயாது கிளம்பிக்கொண்டே இருக்கும். ஆகவே சும்மாயிருப்பது சாத்தியமன்று.

ஆயினும் சும்மாயிருப்பதை லக்ஷியமாக சான்ருேர்கள் ஏன் எடுத்துக்கொண்டார்கள், எதற்காக எடுத்துக்கொண்டார்கள் என்பது கேள்வி. அலை வீசும் கடல் ஓய்ந்திருக்கும் வேளையும் உண்டு. வரைந்த படம் போன்று சிற்சில வேளைகளில் அது அமைதியுற்றிருப்பதைக் காணலாம். காற்று சிறிதேனும் வீசாத வேளையிலேதான் கடல்

அமைதி பெற்றிருக்கும். அக்கடல் போன்ற நமது உள்ளத்தில் அமைதி உண்டாகக்கூடும். அதற்கும் ஒரு நிபந்தனை உண்டு. ஆசை என்னும் காற்று உள்ளத்தில் ஓயாது வீசிக்கொண்டிருக்கிறது. மனிதனால் சும்மாயிருக்க முடியவில்லை யென்றால், அவன் ஆசைக்கு அடிமைப்பட்டிருக்கிறான் என்று பொருள் படுகிறது. ஆசையை அடக்குமளவு எண்ணம் என்னும் அலைகள் தாமே அடங்குகின்றன. ஆசையை அறவே வென்றுவிட்டால் பிறகு மனதில் எண்ணம் என்னும் வேகமும் குறைந்துபோய்விடும்.

ஆசைகளை யெல்லாம் வென்றான பிறகு பழைய வாசனைகள் என்னும் எண்ணங்கள் நமது முயற்சியின்றித் தாமே தோன்றிவரும். அவைகளுக்கு விகல்பம் என்பது பெயர். முறையாக சாதனம் செய்துகொண்டு வருபவனுக்கு சிறிதுகாலத்துக்குப் பிறகு அந்த விகல்பமும் அடங்கிவிடுகிறது. அது முற்றிலும் அடங்கிய நிலைக்கு நிர்விகல்ப சமாதி என்று பெயர். நீர் நிலையில் தேக்கமும் தெளிவும் ஏற்பட்டால் நீருக்குக் கீழேயிருக்கும் நிலம் தென் படும். அதேவிதத்தில் மனதில் அமைதியும் தெளிவும் ஏற்பட்டால் மனதுக்கு அடிப்படையாக இருக்கும் ஆத்மசொரூபம் தென்படும். தெய்வத்தின் காட்சி என்பதும் அதுவே. அதைப் பெறுதற்காகத் தான் சான்றோர்கள் எல்லோரும் மனதையடக்கிச் சும்மாயிருக்க முயன்று வந்திருக்கின்றனர்.

மனதை அடக்குதல் என்னும் எதிர்மறைச் செயலுக்கு மாருக மனதைக் கடவுள்பால் செலுத்துதல் என்னும் உடன்பாட்டு முறையில் மனதைப் பயிலுவிக்கவேண்டும். உலக ஆசைகளை நீக்கவேண்டும் என்று சொல்லுதற்குப் பதிலாகக் கடவுள் ஆசையைப் பெருக்கவேண்டும். கடவுள் மீதே நாட்டம், அவர்க்கே பணிவிடை செய்தல், அவரையே புகழ்ந்து பேசுதல், அவரையே யெண்ணி யெண்ணி மகிழ்ந்திருத்தல் ஆகிய சாதனங்களைத் தீவிரமாகச் செய்து வந்தால் மனது ஒடுங்கி அமைதிபெறும். சும்மாயிருத்தல் என்கின்ற நிலை கைகூடும். தெய்வத்தின் காட்சியும் கிட்டும். அதுபரியந்தம் சன்மார்க்கத்தில் உழைத்தலே உற்ற உபாயமாகும்.

**கேள்வி: (35)** அவதார புருஷர் தோன்றுவது வட இந்தியாவில், ஆசாரிய புருஷர் தோன்றுவது தென்னிந்தியாவில் என்ற முதுமொழி யொன்றை ராஷ்டிரபதி ராஜேந்திர பிரசாத் டில்லியில் நடந்த பட்டமளிப்பு விழா ஒன்றில் கூறியிருக்கின்ருர். மகான்கள் தோன்றுவதற்கும்கூட பூகோள வரம்புகள், விதிகள், எல்லைகள் உண்டோ?

உலக சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தால் மத ஸ்தாபகர்களைப்பற்றிய உண்மை ஒன்று நமக்கு விளங்கும். மத ஸ்தாபகர்கள் எல்லாரும் ஆசியாக் கண்டத்திலேயே தோன்றியவர்கள் ஆவார்கள். இதுபரியந்தம் உலகத்தில் ஆசியாக் கண்டத்தைத் தவிர வேறு எந்தக் கண்டத்திலும் சமய ஆசாரியர்கள் தோன்றியது கிடையாது. ஒருவேளை எதிர்

காலத்திலும் அப்படியேதான் வந்து அமைந்துவிட லாம். இதற்குக் காரணம் யாது என்று நாம் முழு உண்மையைத் தெரிந்துகொள்ள முடியாது. ஒன்று மட்டும் நமக்கு வெளிப்படையாகின்றது. பூவுலகில் ஒவ்வொரு பகுதியும் ஏதேனும் ஒரு சிறந்த காரியத் துக்கென்றே அமைந்தது ஆகின்றது. அதற்கு வேறு ஒரு உபமானம் எடுத்துக்கொள்வோம். மானுட உடல் இருக்கின்றது. உடலிலே ஒவ்வோர் அவய வத்துக்கும் தனிச்செயல் உண்டு. ஓர் உறுப்பு செய் கின்ற செயலை மற்றோர் உறுப்பு செய்ய முடியாது. நடப்பதற்கென்றே கால்கள் அமைந்திருக்கின்றன. பிடித்து வினைகள் பல ஆற்றுவதற்கென்றே கைகள் அமைந்திருக்கின்றன. கைகள் செய்கின்ற செயல் களைக் கால்கள் செய்யமாட்டா. கால்களின் அலு வலைக் கைகள் செய்யமாட்டா. அதனதன் வினைக்கே ஒவ்வோர் அங்கமும் தகுதியுடையதாகின்றது. அங் ஙனம் உலகிலுள்ள பல கண்டங்களில் ஒவ்வொன் றுக்கும் ஏற்ற செயல்கள் இருக்கின்றன. அவை களுள் ஆசியாக்கண்டம் சமயப்பெருமக்களை உண்டு பண்ணுதற்கென்றே சிறப்பாகத்தோன்றியுள்ளதாக இருக்கலாம். உலக சரித்திரம் இக்கோட்பாட்டை நிரூபிக்கிறது. இதற்குக் காரணம் என்னவென்று நாம் சொல்லமுடியாது. அப்படி இது பரியந்தம் நிகழ்ந்து வந்துள்ளதுதான் நமக்கு விளங்குகிறது.

ஆசியாக் கண்டத்திலும் நமது இந்தியாவுக்குத் தனிச் சிறப்பு ஒன்றுண்டு. பாரமார்த்திக வாழ்வை

உலக மக்களுக்கிடையில் வழங்க வந்த பெருமக்கள் இந்தியாவில்தான் எண்ணிக்கையில் அடங்காதவர்கள் தோன்றியிருக்கின்றனர். ஆகவே ஆசியாக் கண்டத்தினுள்ளும் இந்தியாவுக்குத் தனிச் சிறப்பு ஒன்று இருக்கின்றது. இனி, இத்தேசத்துக்குள்ளே மாகாணவாரியாக ஆராய்ந்து பார்த்தால் சிறிது வேற்றுமை புலப்படும். அத்தகைய வேற்றுமைகளுள் ஒன்று ஆசாரியர்களைப் பற்றியதும், அவதார புருஷர்களைப் பற்றியதுமாம். மக்களுடைய மனப்பான்மையும் ஒருவிதத்தில் இதற்குத் துணைபுரிகிறது. அவதார புருஷர்களிடம் பெரும் பற்று வைக்கின்றார்கள் ஒருசிலர். ஆசாரியர்களிடத்து அபிமானம் வைக்கின்றனர் மற்றொரு சாரார். தென்னிந்திய மக்களாகிய நமக்கு ஆசாரிய புருஷர்களிடத்திலேயே அதிகம் பற்றுதல் உண்டாகிறது. நமது மனப்பான்மைக்கு ஏற்ப இங்கு சமயாச்சாரியர்கள் ஏராளமாகத் தோன்றியிருக்கின்றனர். வட இந்தியாவிலிருப்பவர்களுடைய இயல்புக்கு ஒப்ப ஆங்கு அவதார புருஷர்கள் தோன்றியிருக்கின்றனர். தேசத்தின் இயல்பு இத்தகையது என்று சொல்லுவதற்கு மேல் வேறு எக்காரணத்தையும் எடுத்து இயம்ப நமக்கு இயலாது. ஆக, இது நம் மாகாணத்தைப் பற்றிய ஒரு பேருண்மை என்றுதான் நாம் முடிவு கட்டவேண்டும். இதை அடிப்படையாகக்கொண்டு ஒருவிதத்தில் நம்மைப்பற்றி நாம் பெருமை கூறிக் கொள்ளலாம். அதாவது தர்மம் குறைந்துபோய்

அதர்மம் தலையெடுக்கின்ற இடத்திலேதான் அவதார புருஷர்கள் வருகிறார்கள். வாழ்க்கையில் நாம் செய்யக்கிடப்பது எது என்கின்ற ஐயம் உண்டாகின்ற இடத்தில் ஆசாரிய புருஷர்கள் வருகிறார்கள். தர்மம் கெட்டுப்போய்விடுகின்ற அத்தகைய பெரிய கேடு எதையும் தென்னிந்தியா செய்துவிடவில்லை. ஆகவே இங்கு அவதார புருஷர்கள் வரவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆனால் எத்தகைய முறையில் ஒழுகவேண்டும் என்ற ஐயம் இடையிடையே நம்மவர்களுக்கிடையில் தோன்றுவதாகிறது. அதை அகற்றுவதற்கான உபாயங்களையும் நாம் தேடிக் கொள்கிறோம். தென் நாட்டவர்களாகிய நாம் ஆசாரிய புருஷர்களையும் நன்கு பின்பற்றுகிறோம்; அவதார புருஷர்களுடைய ஜீவிதத்தையும் போற்றிப் பின்பற்ற முற்படுகிறோம். ஆதலால் நம் இயல்பு பரந்தது என்றும், சாலச் சிறந்தது என்றும் நாம் சொல்லத் துணியலாம். வாழ்க்கைக்குரிய நலம் எவரிடத்திருந்து எப்பாங்கில் நமக்கு வருவதாயிருந்தாலும் நாம் அதைப் பூரண ஆதரவுடன் ஏற்றுக்கொள்கிறோம். ஆகவே நமக்கு ஆசாரிய புருஷர்கள் இருந்தால் போதுமானது. கட்டாயப்படுத்தி, வற்புறுத்தி மனிதனைத் திருத்தியமைப்பதற்குத் தெய்வ சக்தியோடு கூடிய அவதார புருஷர்கள் வருவது அவசியமாகிறது. இதுவும் ஒருவிதத்தில் இயற்கையின் அமைப்பையே வெளிப்படுத்துகிறது என்றுதான் நாம் இயம்பவேண்டும். தென்னிந்தி

*யாவின் இயல்பு ஆசாரிய புருஷர்களுக்கு ஏற்ற தாகும்.*

**கேள்வி : (36)** தற்சமயம் கோவாவில் கிறிஸ்துவப் பெரியாரின் உடல் தரிசன வைபவம் நடைபெறுகிறது. உயிர் பிரிந்து சுமார் நானூறு ஆண்டுகளாகியும் அதைப் பரிசுத்த தெய்வீக ஒளியென நம்பியும், பிறரை நம்பும்படிச் செய்தும், அவ்வாறு நம்புவோர் என்றென்றும் அழியாப் பேரின்பம் அடைவர். நம்பாதோர் தாழ்ந்த நித்ய நரகமடைவர் எனவும் மதஸ்தாபன குருமார்கள் மக்களுக்குப் போதித்து, தாமும் அவ்வாறே ஒழுகிவரும் அவர்கள் உண்மை உணர்ந்த ஞானிகள்தானு? அதன் உட்கருத்து என்ன? தெய்வீக ஒளி ஜடமாகிய உடலுக்கு உண்டா ?

*மனிதன் உயிரோடு இருக்கும்பொழுது சரீரத்தை நெடுநாள் காத்து வைத்திருக்கும் கலை இந்தியர்களுக்குத் தெரியும். அது காயகற்பம் என்னும் பெயர் பெறுகிறது. காயகற்பம் செய்துகொண்டு சில நூற்றுண்டுகளாக மனிதன் உயிர் வாழ்ந்திருக்கலாம். இந்தியாவில் அப்படி வாழ்ந்தவர்கள் கூட்டத்தில் கடைசியானவர் திரைலிங்க சுவாமிகள் என்பவர். அவர் காசியில் வசித்திருந்தார். சுமார் ஐந்நூறு வருஷகாலம் அவர் ஜீவித்திருந்ததாகப் பலர் கூறுகின்றனர். சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்புதான் அவர் தேகவியோகம் ஆனர்.*

*இந்தியர்களுக்கு மற்றொரு கலையும் தெரியும். அது ஜடசமாதி என்னும் பெயர் பெறுகிறது. ஹட*

யோகத்தின் ஒரு பகுதியாகும் அது. மனிதன் தன்னை நெடுநாள் பூமிக்குள் புதைத்து வைத்துக்கொள்ளலாம், தண்ணீருக்குள்ளும் இருக்கலாம். அதன்பிறகு அவன் புறவுலக ஞாபகம் பெற்று மக்களோடு பேசவும் முடியும். அத்தகைய செயல் புரிகின்றவர்களை இக்காலத்திலும் சிற்சில இடங்களில் காண்கின்றோம்.

செத்த சரீரத்தை நெடுங்காலம் பாதுகாத்து வைக்கும் கலையை எகிப்து நாடு பண்டைக்காலத்தில் கற்றிருந்தது. அக்கலை இப்பொழுது மறைந்து போயிற்று என்றே சொல்லலாம். மம்மி என்று அழைக்கப்படும் செத்த பிணங்கள், நாலாயிரம் ஐயாயிரம் வருஷங்கள் பாதுகாத்து வைக்கப்படுகின்றன. சுமார் மூவாயிரம் வருஷம் அப்படி வைக்கப்பட்டுள்ள எகிப்து நாட்டு மம்மி ஒன்று கல்கத்தாவில் பொருட்காட்சிச் சாலையில் இருக்கிறது. இன்றைக்கும் நாம் அதைக் கல்கத்தாவில் காணலாம். சரீரத்தினுள்ளே ரத்தக் குழாய்களிலும் நரம்புகளிலும் ஒருவகை திராவகத்தைச் செலுத்துவதால் உடல் அழிந்துபோகாத் தன்மையைப் பெற்றுவிடுகிறது. கோவாவில் உள்ள கிறிஸ்தவப் பெரியாரின் உடல் அத்தகைய முறையில் பாதுகாத்து வைக்கப்பட்டதாக இருக்கவேண்டும். அதன்கண் தெய்வீக எழில் பொலிகிறது என்றோ, அதனிடத்திருந்து அருள் சுரந்து வருகிறது என்றோ சொல்லுவது ஆதரவு அற்ற கூற்றாகும். செத்த பிணத்துக்கு அத்

தகைய சக்தி ஒன்றும் கிடையாது. ஒரு மஹா னுடைய உடலாயிருந்தாலும் பிணம் பிணமே. அத னிடத்து சக்தி யிருக்கிறதென்று எண்ணுவதெல் லாம் நம்முடைய நம்பிக்கைதான். அத்தகைய நம் பிக்கை நலம் விளைவிக்கவல்ல நம்பிக்கை என்று மட்டும் நாம் இயம்பலாம். அதன் தெய்வத் தன் மையை நம்பினவர்களுக்குச் சொர்க்கப் பிராப்தி என்றும், நம்பாதவர்களுக்கு நரகப் பிராப்தி என்றும் போதிப்பது ஆதரவற்ற போதனையாகும். சமயத்தின் உட்கருத்தை அறிந்தவர்கள் அங்ஙனம் பகரமாட் டார்கள். அந்த உடலுக்கு தெய்வ சக்தி இருக்கிற தென்றால் இப்பொழுது உலகிலுள்ள பல கேடுகளை அது நேர்முகமாக அகற்றிவரலாம். அப்படி அது எதையும் செய்து வருவதாக நாம் காண்கிறோமில்லை. சமயத்தின் பெயரால் உயர்ந்த கோட்பாடுகளைப் புகட்டுவாரும் உளர், மூட நம்பிக்கையை வளர்ப்ப வரும் இருக்கின்றனர். இதுபோன்று ஒரு செத்த பிணத்தின் மீது பெரு நம்பிக்கை வைப்பதைவிடத் தன்னை ஒழுக்கம் வாய்ந்தவனாகத் திருத்தியமைக்க வேண்டுமென்று ஒவ்வொருவனும் முயன்று வருவா னாகில் அது நல்ல சமய அனுஷ்டானம் ஆகும். ஆகவே இக் கிறிஸ்துவப் பெரியாரின் பிரேதத்தின் வாயி லாகவோ, அல்லது வேறு எந்த மஹானின் பிரேதத் தின் வாயிலாகவோ உலகுக்கு உயர்ந்த நன்மை வந்துவிடுமென்று நாம் நம்புவதற்கு ஆதாரம் ஒன்று மில்லை.

**கேள்வி : (37)** திருவள்ளுவரின் தாய், தந்தை, சமயம், ஜாதி, பெயர் இவைகளைப் பற்றிப் பலவிதமான அபிப்பிராயங்கள் இருக்கின்றனவே, இதன் உண்மை யாது?

*ரிஷிமூலம் நதிமூலம் ஆகிய இரண்டையும் கண்டு பிடிப்பது அரிது என்பது கோட்பாடு. அப்படிக் கண்டுபிடித்துவிட்டால் பல தடவைகளில் வியப்பும் உண்டாகக்கூடும். ஏன் என்றால் மலையுச்சியிலே ஏதோ ஒரு சேற்றுக்குழி ஒரு நதிக்கு மூலமாக இருக்கலாம். இச் சேற்றுக் குழியிலிருந்தா அத்தகைய புனிதம் நிறைந்த பேராறு பெருகி வந்திருக்கிறது என்கின்ற வியப்பு உண்டாகும். அதே விதத்தில் ரிஷி ஒருவர் யாரோ சாமான்யமானவருக்கு மகவாகப் பிறப்பதும் உண்டு. அவர் யாருக்குப் பிள்ளையாக இருந்தால்தான் என்ன? எக்குடியில், எக்குலத்தில் தோன்றியவராக இருந்தால்தான் என்ன? நதியின் பெருமையை நதியே விளக்குவது போன்று ரிஷியின் பெருமையை ரிஷியே விளக்குகிறார்.*

*அத்தகைய ரிஷிகள் கூட்டத்தைச் சேர்ந்தவர் திருவள்ளுவர். அவர் பெருமையை அவரே விளக்கிக் கொண்டிருக்கிறார். மானுடர்களனைவர்க்கும் அருள் விருந்தை ஓயாது வழங்கும் பெருமகன் ஆகின்றார் அவர். அவருடைய நூலை ஓர்ந்து ஆராயுமளவு நாம் அவரையே அறிகின்றோம். இன்றைக்கு நூல்மயமாக அவர் நம்மிடம் உள்ளார். நமக்கு அதுவே போதுமானது. மற்ற கேள்விகள் எல்லாம் பயனற்ற கேள்*

விகள் ஆகின்றன. அவர் நூலைப் பயன்படுத்தத் தெரிந்துகொள்வோமாக.

**கேள்வி : (38)** பிரம்ம சூத்திரத்தில் முதல் அத்தியாயம் மூன்றும் பாதம் 34 முதல் 38வது வரையில் உள்ள சூத்திரங்களில், சூத்திரர்கள் வேதாத்யயனம் செய்வதும் பிரம்ம வித்தையைக் கற்றலோ, வாசித்தலோ கூடாது என்றும் இருக்கிறது. உங்கள் பகவத்கீதை வியாக்கியானத்தின் முகவுரையில் பிரம்ம சூத்திரம் பிரஸ்தானத் திரயத்தில் ஒன்று என்று கூறியிருக்கிறது. ஆகையால் சூத்திரர்கள் பிரம்ம சூத்திரம், வேதம் முதலியவைகளைக் கற்கலாமா, கூடாதா? சூத்திரர்கள் என்பவர் யாவர்?

*இங்கு எழுந்துள்ள கேள்விகளுக்கு மட்டும் விடைகொடுத்துவிட்டு நாம் நின்றுவிடுவோமானால் அது அரை குறையான விடையாய்விடும். பல முக்கியமான கருத்துக்கள் ஒருவாறு ஆராய்ந்ததும் ஆராய்ச்சி செய்ததுமாகிய நிலையில் விட்டுவைக்கப் படுவனவாகும். ஹிந்துமதத்தைப்பற்றியே, அதைப் பின்பற்றுபவர்களுள் சிலர்க்கிடையிலும், புற மதஸ்தர்களுக்கிடையிலும் விபரீதமான அபிப்பிராயங்கள் சில இருந்துவருகின்றன. அவைகளையெல்லாம் நம்மால் இயன்ற வரையில் அகற்றி வைப்பது நம் கடமையாகும்.*

*ஹிந்து மதம் உலகிலுள்ள மதங்களுக்கெல்லாம் தாய் மதம் என்று அமெரிக்கா சர்வமத மஹாசபையில் விவேகானந்த சுவாமிகள் பகர்ந்துள்ளார். அப்*

படி அவர் இயம்பியது தமது சொந்த ஹோதாவில் அல்ல. வாழையடி வாழையாக வந்துள்ள நம் நாட்டு மஹரிஷிகளின் பிரதிநிதியாயிருந்து அவர் அங்ஙனம் பகர்ந்தருளினர். ஹிந்துமதத்தில் யாரையாவது விலக்கிவைத்தல் (exclusion) என்பது மட்டும் இடம் பெறக்கிடையாது என்று அவர் வைதிக மதத்தைப் பெருமை பாராட்டினர். அத்தகைய வேதாந்தத்தினுள் சிறுமையையும், அற்பத்தனத்தையும் எவராவது நுழைத்துவிடக் கிடையாதா? இதை ஆராய்தற்கு ஆதாரங்கள் வேண்டியவளவில் இருக்கின்றன. இங்கு எழுந்துள்ள கேள்வியே அதைச் சுட்டிக் காட்டுகிறது.

மலையுச்சியினின்று பார்த்தால் மேடும் மடுவும் தென்படமாட்டா. பரந்த வெட்டவெளியே தென்படும். காலம் என்னும் மலையுச்சியினின்று பார்த்தால் ஹிந்துமதத்தின் மகிமையும் அதே பாங்கில் பரந்த ஞான வெளியாகப் புலப்படும். கணக்கற்ற மேலாம் கொள்கைகளையெல்லாம் அது தன்னகத்து அடக்கியது என்பது புலப்படும். சுருங்கச் சொல்லின் சர்வமத மஹா சபை என்பதும் வேதாந்த தர்சனம் என்பதும் ஒரே பொருளைக் குறிப்பவைகளாம். அத்தகைய பரந்த பாரமார்த்திகப் பொக்கிஷத்தினுள் ஏதோ சிற்சில இடங்களில் மாசும் படிந்து விடுமானல் அதில் வியப்பு ஒன்றுமில்லை. அத்தகைய மாசு எவ்விதத்திலும் அதன் உயர்வைக் கெடுத்துவிடாது. கடலினுள் அழுக்குப் படிந்த

நீர்ப்பரப்பு கடலின் மகிமையைக் குறைத்துவிடுவ தில்லை. அதே விதத்தில் ஹிந்து மதத்தின் மகிமை மாசற்றதாக என்றென்றும் மிளிர்ந்து கொண்டிருக் கிறது. பிரபஞ்சத்திலுள்ள உயிர்களெல்லாம் அறிந்தோ அறியாமலோ பரம்பொருளை நோக்கிப் பயணம் போய்க்கொண்டிருக்கின்றன. அவ்வுயிர் களின் பயணத்தில் ஒவ்வொன்றுக்கும் ஏற்ற ஊக்கத் தையும், உதவியையும் ஆங்காங்கு எடுத்து வழங்கு வதே வேதாந்தத்தின் கோட்பாடு ஆகும். எவ் வுயிரையாவது, எப்பொருளையாவது சிறுமைப் படுத்துவதும், தடைப்படுத்துவதும் வேதாந்தக் கோட்பாடு ஆகாது. பல்லாயிரம் ஆண்டுகளாக வேதாந்த தர்சனம் எல்லாப் படித்தரங்களிலும் இருக்கின்ற உயிர்களுக்குப் பாரமார்த்திகப் பெரு வாழ்வைத் தக்க முறைகளில் எடுத்து வழங்கி வந் திருக்கிறதென்பது அறிவுடையோர்க்கு நன்கு விளங்கும்.

அதிகாரி பேதம் என்பதை ஹிந்து மதம் அல் லது வேதாந்தம் முற்றிலும் அங்கீகரிக்கிறது. அவ ரவர் ஜீர்ண சக்திக்கேற்ற பிரகாரம் உணவை வழங்குவது போன்று மக்களின் பரிபாகத்துக்கேற்ற வாறே பிரம்ம வித்தையை எடுத்துப் பரிமாற வேண்டும் என்பது கோட்பாடு. இத்தனை ஆயிரம் ஆண்டுகளாக இக்கோட்பாடு வெற்றிகரமாகவே அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது. அவரவர் தகு திக்கேற்ற மார்க்கத்தை சான்றோர் உயிர்களுக்குக் காட்டியிருக்கின்றனர்.

வேதத்தில் கர்மகாண்டம் என்றும் ஞானகாண்டம் என்றும் இரண்டு பகுதிகள் உண்டு. கர்மகாண்டத்தில் பிரவேசிக்கின்றவன் அதற்கேற்ற தகைமையுடையவனாகவேண்டும்; சம்ஸ்காரம் பெற்றவனாக இருக்கவேண்டுமென்று பகரப்படுகிறது. உபநயனம் அல்லது லக்ஷியத்தின்பால் நடாத்தப்பெறுதல் என்பது அதன் பொருள். அப்படி நடாத்தப்பெறுகின்ற மாணாக்கர்களுள் தலை மாணாக்கன் பிராம்மணன், இடை மாணாக்கன் க்ஷத்திரியன், கடை மாணாக்கன் வைசியன். வைதிக கர்மத்துக்கு ஏற்ற தகுதி சிறிதேனும் இல்லாதவன் சூத்திரன். இப்படி மக்களை நான்கு வகைப் படுத்தினர் பண்டைப் பெரியோர். எக்காலத்திலும் எல்லாச் சமுதாயங்களிலும் இத்தகைய பாகுபாட்டைக் காணலாம். இது இயற்கையின் அமைப்பு. இதை அறிந்துகொண்டு அதற்கேற்ற முறைகளைக் கையாளுதல் அறிவுடையோர் செயல். நான்கு வர்ணத்தின் அமைப்பு என்பது இதுவே. நல்வினை எதையும் தானே ஆற்ற இயலாதவன், அறிவு மழுங்கியிருப்பவன், சர்வகாலமும் துன்பப்படும் தன்மையிலிருப்பவன் சூத்திரன் என்பதாகும். அறிவு வளர்ச்சியை அவன்பால் காண்பது அரிது. நுண்ணிய கரும விதிகளை முறையாக அனுஷ்டிப்பது அதிலும் கடினமானது. ஆகவே சூத்திரன் வைதிக கர்மத்துக்கு அதிகாரியல்ல. இது பிறப்பை முன்னிட்டதுமன்று, இனவேற்றுமையை வளர்ப்பதற்காக அமைந்ததுமன்று. பரிபாகத்திலுள்ள ஏற்றத்

தாழ்வை அங்கீகரிப்பதாக அமைந்துள்ள ஏற்பாடாகும்.

எக்குடியில் பிறந்தவன் ஆயினும் அவன் ஈசுவர விபூதிகளையெல்லாம் அடையப் பெற்றிருக்கலாம். அவன் அவதார புருஷனாக ஆன்றோர் எல்லாராலும் ஆராதிக்கப்பட்டு வருவதற்கும் சான்றுகள் வேண்டியவாறு காணலாம். இடையர் குலத்தில் பிறந்து வளர்ந்த கண்ணனைக் கடவுள் என்றே ரிஷிகள் போற்றி வந்துள்ளது இதற்கு நல்ல எடுத்துக்காட்டு ஆகும். ஆக, இந்தியன் ஒருவனுக்கு பிறப்பு முட்டுக்கட்டை என்பது பரந்த ஹிந்துமதத்தின் ஐதிகத்தில் இல்லை.

வேதத்தையும் வேதாந்தத்தையும் வாழ்க்கையில் அனுஷ்டிக்க வல்லவர்கள் யாரோ அவர்கள் அதிகாரிகள் ஆகின்றனர். அனுஷ்டிக்க இயலாதவர்கள் அதிகாரிகள் ஆகமாட்டார்கள். அதற்கேற்ற பரிபாகம் இன்னும் அவர்களுக்கு வரவில்லை என்பதுதான் அதன் கருத்து. தக்க அதிகாரிகள் வாயிலாகப் பல்லாயிரம் ஆண்டுகளாக வேதாந்தம் நன்கு காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கிறது. இதற்குப் பண்டைப் பெருமக்களுக்கு நாம் என்றென்றைக்கும் நன்றியுடையவர்களாக இருந்தாக வேண்டும். ஞான வாழ்க்கைக்குத் தகுந்த அதிகாரி இல்லாது போய் விட்டால் அது க்ஷீணித்துப் போய்விடும். ஆதலால் தகுந்த சத்பாத்திரங்களைக்கொண்டு அதைக் காப்பாற்றி வைப்பதே ரிஷியக்ஞம் என்பதாகும். இது

முறையாக நடைபெற்று வந்திருப்பது பாராட்டத் தக்கதேயாம்.

உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரங்கள், பகவத் கீதை ஆகிய இம்மூன்றும் பிரஸ்தானத் திரயங்களே என்பதற்கு ஐயமில்லை. பிரம்ம வித்தையைப் புகட்டுவதுதான் இவைகளின் லக்ஷியம். பிரம்ம வித்தைக்கு ஏற்ற சத்புருஷர்கள் யார் என்பதைப்பற்றியும் ஐயம் திரிபு அற அவைகள் விளக்கியிருக்கின்றன. உயிர்களெல்லாம் தங்கள் சொரூப ஞானத்தை அடைய அல்லது பிரம்மஞானத்தை அடைய முயன்றுகொண்டிருக்கின்றன என்பதுதான் வேதாந்தத்தின் சாரம். அதற்குத் தகுதியுடையவர் விரைவில் ஞானத்தைப் பெற்றுவிடுகின்றனர். தகுதியில்லார் தகுதியடையும் வரை பல பிறவிகள் எடுத்து முயன்றாக வேண்டும். இங்ஙனம் வேதாந்தம் பகர்கின்றது. இயற்கையில் நாம் காணும் காட்சியும் இதற்குச் சான்று ஆகும்.

பிரம்ம சூத்திரங்களில் முதல் அத்தியாயம் பாதம் 3ல் 34 முதல் 38வது வரையில் உள்ள சூத்திரங்கள் வேதத்துக்கும் வேதாந்தத்துக்கும் அதிகாரியில்லாதவர் யார் என்னும் கேள்வியை எடுத்துக்கொள்கிறது. சூத்திரர் அவைகளுக்கு அதிகாரியல்ல என்று சொல்லுவதில் அர்த்தம் உண்டு. குணத்திலும் கர்மத்திலும் பண்படாதவன் ஒருநாளும் அதிகாரி ஆகமாட்டான். ஒருவனுடைய குணத்தையும் கர்மத்தையும் நிர்ணயிப்பதற்குப் பிறப்பு முக்கிய காரணமாகாது. பண்பும் செய்தொழிலுமே அவன் பரிபாகத்தை

விளக்கிவிடும். பிறப்பை முகாமையாக வைத்துக் கொண்டு நான்கு வர்ணங்களையும் நிர்ணயிப்பது தத்துவத்துக்கு ஒவ்வாத பிரிவினையாகும். உலக மக்களது வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்தாலே இவ்வுண்மை நன்கு விளங்கும். பிறப்பை அடிப் படையாகக்கொண்டு ஒரு மனிதன் பிரம்ம ஞானத் துக்குத் தகுதியற்றவன் ஆய்விடுகிறான் என்னும் கோட்பாடு உபநிஷதங்களில் இல்லை.

இனி ஸ்மிருதி என்று எடுத்துக்கொண்டால், பகவத்கீதையைத்தான் ஸ்மிருதி என்று சொல்லு வது வழக்கத்தில் இருந்து வருகிறது. பகவத் கீதையில்,

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥

யார் என்னை எப்படி வழிபடுகிறாரோ அவருக்கு நான் அப்படியே அருள் புரிகிறேன். பார்த்தா, மக்கள் யாண் டும் என் வழியையே பின்பற்றுகின்றனர். [கீதை 4–11]

अपि चेत्सुदुराचारः भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥

கேடு மிக உடையோனும் வேறு ஒன்றையும் எண்ணாது என்னைப் பஜிப்பானானால், அவன் சாது என்றே கருதப் படவேண்டும். ஏனென்றால் அவன் நன்கு தீர்மானித் தவன் ஆகிறான். [கீதை 9–30]

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपिस्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥

பார்த்தா, கீழான பிறவியர்களாகிய பெண்பாலர், வைசியர், சூத்திரர் ஆகியவரும் என்னைச் சார்ந்திருந்து நிச்சயமாகப் பரகதி யடைகின்றனர். [கீதை 9–32]

*இவ்வாறு பகரப்பட்டிருக்கிறது. ஆக, ஸ்மிருதியினின்றும் நமக்குக் கிடைக்கும் பிரமாணம் மக்கள் எல்லாரும் பிரம்மஞானத்துக்குத் தகுதியடைந்து வருகிறார்கள் என்பதேயாம். உலகிலுள்ள வெவ்வேறு மதங்களைப் பின்பற்றிச் சிறந்த ஞானிகள் ஆகியுள்ள சான்றோர்களது வரலாறுகளை ஆராய்ந்து பார்த்தாலும் இப்பேருண்மை விளங்கும்.*

*பிரம்ம சூத்திரங்களில் இந்த ஐந்து சூத்திரங்களுக்குப் பாஷ்யக்காரர் எடுத்துக்கொள்ளும் வியாக்கியானம் விந்தைக்குரியதாயிருக்கிறது. வியாக்கியானம் போகும் போக்கின் கருத்தை வேறொரு உபமானத்தைக்கொண்டு விளக்கினால் மற்றவர்களுக்கு அது எளிதில் விளங்கிவிடும். அதாவது ஒருவன் ஏழையின் வயிற்றில் பிறந்திருக்கிறான். அவனிடத்து செல்வமில்லை. ஆகையால்அவன் ஏழை. ஏழையாயிருப்பதால் பணம் தேடுவதற்கு அவனுக்கு அதிகாரமில்லை. பணம் தேட முயற்சி செய்தால் எல்லாவிதமான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டு அப்படிப் பணம் சம்பாதிக்காது அவனைத் தடுத்துவிடவேண்டும். சூத்திரன் ஒருவன் வைதிக ஸம்ஸ்காரத்துக்கு ஆசைப்படுவதும், பிரம்ம வித்தைக்கு நாட்டம் கொள்வதும் இப்பாங்கில் விலக்*

கப்படுகின்றன. இனி ஒவ்வொரு சூத்திரத்தின் போக்கைச் சுருக்கமாக ஆராய்வோம்.

34, 35வது சூத்திரங்களில் ஜானசுருதி என்னும் அரசனை ரைக்வர் என்னும் ரிஷி சூத்திரன் என்று திரஸ்கரித்தார். அதனால் வேந்தனுக்கு வியாகூலம் வந்துவிட்டது. ஜானசுருதி உண்மையில் சூத்திரன் அல்ல. துக்கப்படுகின்றவன் சூத்திரன். அந்தத் துக்கத்தை முன்னிட்டுத்தான் அவன் அங்ஙனம் அழைக்கப்படுகிறான் என்னும் கோட்பாட்டில் பாஷ்யம் போகிறது. பிறப்பை முதன்மையாக வைத்துக் கொண்டு பாஷ்யம் இங்கு விரிவடைந்துகொண்டு போகிறது என்றாலும் மனபரிபாகம் பிறப்பினும் முக்கியமானது என்னும் கோட்பாடு அதில்புதைந்து கிடக்கிறது. உண்மையை எவ்வளவு மறைக்க முயன்றாலும் அதுஏதேனும் ஒருவிதத்தில் முன்னணியில் வந்து நிற்கிறது.

36வது சூத்திரத்தில் வைதிக ஸம்ஸ்காரமின்மையினால் சூத்திரனுக்கு வேதாத்யயனத்துக்கும், பிரம்ம வித்தைக்கும் அதிகாரம் இல்லையென்று வாதிக்கப் படுகிறது. துவிஜனாவது சிலருடைய பிறப்புரிமை என்பதே இங்கு பாஷ்யத்தின் கருத்து ஆகும்.

37வது சூத்திரத்தில் ஜாபாலசத்யகாமனுக்கு பிரம்ம ஞானம் புகட்டியதற்குக் காரணம் யாது என்ற ஆக்ஷேபம் வருகிறது. அதாவது அவன் பொது மாது ஒருத்தியினுடைய மகனாக இருந்தமையினால் பிரம்ம ஞானத்துக்குத் தகுதியற்றவன் என்ற

தடை வந்தது. இந்தத் தடைக்குச் சமாதானம் வியப்புக்குரிய முறையில் பாஷ்யத்தில் வருகிறது. அவன் சத்தியத்தையே பேசியதினால் அவன் பிராம்மணனாகத்தான் இருக்கவேண்டும் என்று குரு யூகித்தாராம். சத்தியம் பேசுபவர்களெல்லாம் மேல் வருணத்தார் என்பது யுக்திக்கு ஒத்தது. பிறப்பினும் பண்பாடே மேலானது என்பதை ஞாபக மறதியாக பாஷ்யக்காரர் ஒத்துக்கொள்கிறார். பிறப்பு வேற்றுமையை நிலைநாட்ட முயன்ற முயற்சி தமக்கே பிரதிகூலமாகப் போய்விடுகிறது.

38வது சூத்திரத்தில் ஸ்மிருதியும் ஆக்ஷேபணை செய்கின்றதினால் சூத்திரர்களுக்கு வேதாத்யயனமும், வைதிக கர்மமும், பிரம்ம ஞானமும் வழங்கலாகாது என்று பாஷ்யக்காரர் முடிவுகட்டுகிறார். இங்கு ஸ்மிருதி என்று பகரப் படுவது ஐதிகமாக வந்துள்ள பகவத்கீதையை யல்ல; மனுஸ்மிருதியே பெரிதும் ஆதாரமாக எடுத்துக்கொள்ளப்படுகிறது. 'வேதத்தைக் காதால் கேட்கின்ற சூத்திரனுடைய காதிலே ஈயத்தைக் காச்சி ஊற்றவேண்டும், அரக்கைப் போட்டு அடைத்துவிடவேண்டும்' என்பது ஸ்மிருதி வாக்கியம். சூத்திரன் ஒருவன் ஸ்மசானத்துக்கு ஒப்பானவன். ஆகவே அவன் அருகில் வேதபாராயணம் செய்யலாகாது. வேதத்தை அவன் உச்சரிப்பானாகில் அவனுடைய நாவைப் பிளந்துவிடவேண்டும். வேதத்தைக் காப்பாற்ற முயலுவானாகில் சரீரத்தை வெட்டிவிடவேண்டும்.

[धारणे शरीरभेद इति ।] விதுரர், தர்ம வியாதர்போன்ற சூத்திரர்களுக்கு ஞானம் எப்படி வந்தது என்ற ஆக்ஷேபணைக்குப் பாஷ்யக்காரர் சமாதானம் கூறுகிறார். அது முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயனும். இப்படியெல்லாம் சூத்திரன் ஒருவன் வேதத்துக்கும் வேதாந்தத்துக்கும் அருகதை உடையவன் அல்ல என்று ஸ்மிருதியை மேற்கோளாகக்கொண்டு பாஷ்யம் எழுதப்பட்டுள்ளது. பிறப்பில் எல்லோரும் சூத்திரர். பிறகு ஸம்ஸ்காரத்தால் மேன்மக்கள் துவிஜர் ஆகின்றனர் என்பதும் ஒரு ஸ்மிருதி வாக்கியம். பாஷ்யக்காரர் இதை மறந்துவிட்டார் போலும்.

சூத்திரன் ஸ்மசானத்துக்கு ஒப்பானவன் என்று ஸ்மிருதி பகர்கிறது. அக்காரணத்தை முன்னிட்டு அவனுக்கு அருகில் வேதாத்யயனம் நடைபெறலாகாதாம். ஸ்மிருதி பகர்வதுபோன்று ஸ்மசானம் அத்தகைய விலக்குதற்குரிய இடமன்று. உலகப் பற்றுடையார் வாழும் கிருகத்தைவிட அது புனிதமானது ஆகும். ருத்திரபூமி என்று அது பகரப்பெறுகிறது. ஸ்மசானவாசி என்பது சிவனுக்கு அமைந்த நாமங்களில் ஒன்று. ஸ்மசானத்துக்கருகில் வேத பாராயணம் செய்யலாகாதென்றால் சிவ சன்னிதியில் அது செய்யலாகாது என்று பொருள்படுகிறது. இத்தகைய அனர்த்தமான கொள்கையைச் சான்றோர் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். காசிக்கே மஹா ஸ்மசானம் என்பது ஒரு பெயர். காலமெல்லாம்

ஆங்கு பிரேதங்கள் தகிக்கப்படுகின்றன. பிணம் வெந்துகொண்டிருப்பதற்கருகில் அமர்ந்து தியானம் பண்ணுவது சிறந்த சாதனம் என்று ஆங்கு யதிகள் அதைச் சர்வகாலமும் அனுஷ்டித்து வருகின்றனர். ஸ்மிருதியிலுள்ள இக்கோட்பாட்டின்படி காசி க்ஷேத்திரமே வேத அத்யயனத்துக்குத் தகுதியற்ற தாகிறது. ஆனால் ஆங்குத்தான் கணக்கற்ற யாகங்கள் நடைபெற்று வந்திருக்கின்றன. வேத வேதாந்த சிரவணத்துக்குத் தாயகமாகக் காசியம்பதி அமைந்திருக்கிறது. உண்மையை ஆராயுங்கால் சூத்திரன் ஸ்மசானம் போன்றவன் அல்லன், யதி ஒருவனே நடமாடும் ஸ்மசானத்துக்கு ஒப்பாவான். அவன் விரஜா ஹோமம் பண்ணுதற்கு முன்பு தன்னை மாண்டுபோனவனாக வைத்து ஆத்ம பிண்டம் போட்டுக்கொள்கிறான். அதற்கு அவன் ஏற்ற அதிகாரியாயிருப்பானாகில் அக்கணம் முதற்கொண்டு அவனுடைய உடலம் பிரேதத்துக்கு ஒப்பானதாக அவன் கருதிக்கொள்கின்றான். ஆகையினால்தான் விவாகம் முதலியன நடைபெறும் இடங்களில் யதியின்மேனி தென்படலாகாது என்னும் ஐதீகம் வந்துள்ளது. இனி, ஸ்மிருதியைப் பின்பற்றுதலென்றால் யதியின் அருகில் வேதாத்யயனம் செய்யலாகாது என்பதாகும். இது பொருளற்ற கொள்கை என்பது சொல்லாமலே விளங்குகிறது.

பிரம்மத்துக்கு அன்னியமாக ஒன்றும் இல்லவே இல்லை என்று அத்வைதத்தை ஸ்தாபிக்க வந்த

பகவத்பாத ஆதிசங்கரர் இங்ஙனம் கூறியிருக்க முடியுமா என்னும் ஐயம் இயல்பாகவே எழுகிறது. இக்கொள்கை சங்கரருடையதோ அல்லது சங்கரர் பெயரால் பாஷ்யத்தினுள் இதை நுழைத்த வேறு யாருடையதோ நாம் உறுதிகூற முடியாது. இதைப் பகர்ந்துள்ள மனிதர் பரிபாகம் எத்தகையது என்பது தெற்றெனெ விளங்குகிறது. காசியில் கள் குடம் எடுத்துவந்த சண்டாளனை வணங்கி அபேத புத்தியைப் பெற்ற ஆதிசங்கரருக்கு இத்தகைய பேத புத்தியும், கல் நெஞ்சமும் வந்திருக்க முடியுமா என்பது கேள்வி. இனி இதில் அடங்கியுள்ள கோட்பாடுகளை ஒவ்வொன்றாக ஆராய்வோம். மனு ஸ்மிருதி போன்றது காலத்துக்கேற்றவாறு மாறுபாடடையும் தன்மையுடையது. பெரும்பாலும் அது அரசர்களுக்குரியது. இக்காலத்தவர்களாகிய நமக்கு அவருணத் தான் என்று சொல்லப்படும் ஸ்ரீமான் அம்பேத்கார் தான் அவைத் தலைவராகயிருந்து ஸ்மிருதியை (Constitution of the Republic India) அமைத்திருக்கிறார். இது முற்றிலும் லௌகிகமானது. சங்கரர் போன்ற வேதாந்தி ஒருவருக்கு மனு ஸ்மிருதி பிரமாணமாகாது.. இன்றைக்கு மனுஸ்மிருதியைக் கொளுத்த ஒரு கூட்டம் முன் வந்திருக்கிறது. ஆனால் அதைக்குறித்து அவர்கள் அவ்வளவு ஆத்திரப்பட வேண்டியதில்லை. பயனற்ற பகுதிகளையுடைய அது தானே பின்னணிக்குப் போய்விட்டது. பொருட்காட்சிச் சாலையில் (Museum) பல பண்டைப்

பொருள்களைப் பாதுகாத்து வைப்பதுபோன்று இத்தகைய ஸ்மிருதிகளையும் பாதுகாத்து வைக்கலாம். என்னென்ன இயல்புடைய மாந்தர் முன்னாளில் இருந்திருக்கிறார்கள் என்பதற்கு இத்தகைய ஸ்மிருதிகள் பிரமாணங்கள் ஆகும்.

நாம் வசிக்கும் இந்த நூற்றாண்டில் வேதத்தை முறையாகத் தொகுத்தவர், மொழிபெயர்த்தவர், பாதுகாத்தவர் (Max Muller) மாக்ஸ் முல்லர் என்னும் மேல்நாட்டு மேன்மகன் ஆவார். கடை வருணமாகிய சூத்திர இனத்தையும்கூட சேர்ந்தவர் அவர் அல்லர். சண்டாளர் அல்லது யவனர் கூட்டத்தைச் சேர்ந்தவர் அவர். ஸ்மிருதியின் கூற்று ஆதரவற்றது என்பதை அவருடைய செயலே இன்று நமக்குக் காட்டி வருகிறது. அத்தகைய மாக்ஸ் முல்லரை விவேகானந்த சுவாமிகள் நேரில் சந்தித்து அவரோடு உறவாடியிருக்கிறார். அவரை ஒரு ரிஷி என்றே சுவாமிகள் அங்கீகரித்தார். பாஷ்யக்காரர்களுடைய சில கொள்கைகளைக் குறித்து சுவாமிகள் (The Commentators have often been conscious or unconscious liars) பாஷ்யக்காரர்கள் பல தடவைகளில் வேண்டுமென்றே பொய் சொல்லியிருக்கிறார்கள், அல்லது அறியாமையினால் பொய்சொல்லி இருக்கிறார்கள் என்று தாக்கியுள்ளார். இது போன்ற பாஷ்யத்தை அங்ஙனம் வகைப்படுத்துதற்கு இது இடம் கொடுக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது சன்னியாசி சிஷ்யர்களுள் வெவ்வேறு குடிகளில் பிறந்தவர்களை

எடுத்துக்கொண்டார். அவர்களில் ஒருவர் லாட்டு என்னும் சூத்திர இளைஞன். சூத்திரன் என்னும் சொல்லுக்குப் பிறப்பை முன்னிட்டு நாம் என்னென்ன விளக்கம் தரமுடியுமோ அதெல்லாம் லாட்டு என்னும் இளைஞனுக்கு ஒத்ததாயிருந்தது. கல்வியறிவும் அவனுக்குச் சிறிதும் கிடையாது. அத்தகைய இளைஞனை பரமஹம்ஸர் ஆட்கொண்டார், சன்னியாசி ஆக்கினர். அற்புதானந்த சுவாமிகள் என்பது அவரது தீக்ஷாநாமமாகும். பரமஹம்ஸருடைய அற்புதச்செயல் என்றே அந்த சிஷ்யருடைய ஜீவிதத்தைச் சொல்லவேண்டும். பிரம்ம ஞானத்தைப் பற்றி உபநிஷதங்கள் கூறும் கோட்பாடுகளெல்லாம் அவருக்கு சுவானுபாவமாய் அமைந்திருந்தன.

இவையெல்லாம் ஆராயுங்கால் உண்மையான வேதாந்தம் எது, வேதாந்தத்தின் பெயரால் அதனுள் புகுத்தப்பட்டுள்ள கசடு எது என்பதை நாம் எளிதில் அறிந்துகொள்ளலாம். தத்துவ ஆராய்ச்சிக்கு ஒப்ப சூத்திரர் என்பார் மனபரிபாகம் அடையாதவர்; கற்றல், கேட்டல் விஷயத்தில் இன்னும் கீழ்த்தரமான நிலையில் இருப்பவர். ஒரே குடும்பத்திலுள்ள சில சகோதரர்களுள் ஒருவன் பிராம்மண இயல்பு உடையவனுக இருக்கலாம், இன்னொருவன் க்ஷத்திரிய இயல்புடையவனுக இருக்கலாம், வேறொருவன் வைசிய இயல்புடையவனுகலாம், மற்றொருவன் சூத்திர இயல்புடையவனுக இருக்கலாம். இதுதான் இயற்கையின் நடைமுறைக்கு முற்றிலும்

ஒத்ததாகிறது. பிறப்பை முன்னிட்டுப் பாகுபடுத்துவது ஏமாற்றத்தை உண்டுபண்ணும். பிரஸ்தானத் திரயத்தை இன்று உலகெங்குமுள்ள உத்தமர்களுக்கு எடுத்து வழங்குதற்கென்றே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் விவேகானந்த சுவாமிகளும் தோன்றியுள்ளார்கள்.

**கேள்வி:** (39) துர்வாச மஹாமுனிவர் போன்ற மஹா தபஸ்விகள் ஐம்புலன்களையும் அடக்கி அடிமைப்படுத்தியவர்கள். ஆயினும் மஹாபாரதம் முதலிய நூல்களில் வரும் கதைகளில் கோபத்திற்குத் தகுந்த காரணங்கள் இல்லாமலேயே மஹா கோபமாகி அவர்கள் மற்றவர்களைச் சபிக்கிறார்கள். அப்படிப்பட்ட தபோதனர்களுக்கும் அவ்வளவு ஆத்திரம் வரவேண்டியதற்குரிய கருத்து என்ன?

துர்வாச மஹரிஷியைப்பற்றி நாம் ஆராய்ச்சி செய்யும்பொழுது அவருடன் சேர்த்து நாரத மஹரிஷியையும் எடுத்துக்கொள்ளலாம். இவ்விருவரும் சரித்திரபூர்வமான புருஷர்களா அல்லது ஒரு தத்துவம் உருவகப்பட்டு எழுந்த மூர்த்திகளா என்பது சந்தேகம். சரித்திரபூர்வமான புருஷர்களென்றால் பலகாலங்களில் அவர்கள் இருந்திருக்க முடியாது. ஏதேனும் ஒரு காலத்திலிருந்த மூர்த்திகள் என்றால் மற்ற காலங்களிலும் அவர்கள் குறிப்பிடப்படுவது உருவகப்படுத்திய முறையில் இருக்கலாம். ஆக, அவர்கள் ஏதேனும் ஒரு காலத்தில் இருந்தவர்கள் அல்லது உருவகப்படுத்திய மூர்த்திகள் ஆகவேண்

டும். அவர்கள் சரித்திரபூர்வமான மூர்த்திகளாக இருந்தாலும் சரி, வெறும் கற்பனு மூர்த்திகளாக அமைந்திருந்தாலும் சரி அவர்களுடைய ஜீவிதத்தி லிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் பல உள.

கோபமே வடிவெடுத்தவர் துர்வாசர். பக்தியும் ஞானமும் நிறைந்தவராய் மூவுலகங்களிலும் சஞ் சரிக்கும் பாங்குடையவர் நாரதர். சில வேளைகளில் நாரதர் கலகமூட்டிவிடக் கூடியவர். இங்ஙனம் இவ் இரு மூர்த்திகளும் இரண்டு தத்துவங்களுக்கு இலக்கு ஆகின்றனர்.

மானுட முன்னேற்றத்துக்கு சாந்தம் அவசிய மாக இருப்பது போன்று கோபமும் வேண்டப்படு வதே. தக்க இடத்தில் தக்க காரணத்தை முன்னிட்டு ஒருவர் சினந்துகொள்ளுவது நலத்தை விளைவிக் கும். சரீர வாழ்க்கையில் ஒரு சந்தர்ப்பத்தில் கட்டி களும் கொப்புளங்களும் வெளிக்கிளம்புகின்றன. அந்த சரீரத்தின் ஆரோக்கியத்தை முன்னிட்டு அவைகள் வெளிக்கிளம்புவது முற்றிலும் அவசிய மானது. உடல் அமைப்பில் அவைகள் இடம்பெற் றிருப்பது போன்று உள்ளத்தின் அமைப்பில் குரோ தம் இடம் பெற்றிருக்கிறது. துர்வாசருக்கு எப் பொழுதாவது யாரிடத்திலாவது கோபம் மூண்டு விட்டதை நாம் காண்போமானல் அது இறுதியில் அம்மனிதருடைய முன்னேற்றத்துக்கே ஹேதுவான தாக அமையப்பெற்றது என்பதை நாம் ஓர்ந்து

அறிந்துகொள்ளலாம். சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். இராமனிடத்து தனித்திருந்து ஏதோ ஒரு விஷயத்தைப் பேசவேண்டும் என்று அவர் அயோத்திக்கு வந்தார். அப்படி அவர்கள் பேசிக் கொண்டிருந்தபொழுது ஒரு நிர்ப்பந்தத்தால் அவர்கள் முன்னிலேயில் லக்ஷ்மணன் வரவேண்டியதாயிற்று. அதை முன்னிட்டு துர்வாசருக்கு பெரும் கோபம் கிளம்பிவிட்டது. ஸ்ரீ ராமன் பூவுலக வாழ்க்கையை விரைவில் முடிவுக்குக் கொண்டு வருவதற்கு அவரது சினமே காரணமாயிற்று எனலாம். வாழ்வின் பேரமைப்பை ஆராயுங்கால் சரீரத்தில் காலமெல்லாம் கட்டுண்டு கிடப்பது ஓர் ஆத்மாவின் நோக்கமல்ல. சரீரம் ஒன்றை எடுத்து அதன் மூலம் செய்து முடிக்கவேண்டிய காரியத்தை நிறைவேற்றி விடவேண்டும். அதன்பிறகு காயத்தைக் களேந்து விட்டு அதிலும் உயர்ந்த நிலேக்குப் போவதே குறிக்கோள். ஸ்ரீ ராமன் உடலே உகுப்பதற்கு துர்வாசரின் கோபம் பயன்பட்டது. எப்பொழுதெல்லாம் அவருக்குக் கோபம் கிளம்பிற்றோ அப்பொழுதெல்லாம் மறைமுகமாக அந்தக் கோபத்துக்கு இலக்கானவர்களுக்கு நலம் விளேவதைக் காணலாம்.

நாரதரைக் காண்பதே பக்தியின் உருவத்தைக் காண்பதற்கு ஒப்பாகும். சர்வகாலமும் இறைவனுடைய திருநாமத்தை உச்சரித்துக்கொண்டே இருப்பது அவரது இயல்பு. சென்றவிடமெல்லாம் பக்தியைப் பெருக்குவதும் அவருடைய போக்கு

*அவர் கிளப்பிய கலகங்கள் நன்மையை விளைவிப்பன ஆயின. சரீர நலத்தை நாடுபவர் சில வேளைகளில் அதற்குப் பேதிக்குக் கொடுக்கின்றனர். அது உள்ளே ஒரு கலகத்தை உண்டுபண்ணுகிறது. அழுக்கு யாவும் அகற்றப்படுகிறது. கேடுபோன்று தென்படும் அச்செயல் உண்மையில் உடல் நலத்துக் கேயாம். இங்ஙனம் துர்வாசர் போன்ற தபோதன ரிடம் திகழ்ந்த குரோதம் பொதுநன்மையின் பொருட்டே அமைந்ததாயிற்று. ஆக அதைக் குறித்து அச்சமோ, வியப்போ, ஏமாற்றமோ கொள்ளவேண்டியது அவசியமல்ல.*

**கேள்வி : (40)** நம்மிடத்திலேயே இருக்கிற இன்ப துன்பம் புறத்தேயுள்ள பொருள்களிடத்தேயிருந்து வருவதாக எண்ணி மனிதன் மயக்குறுகிறுன். இதை உண்மை யல்ல என்கிருர்கள். எடுத்துக்காட்டாகச் சர்க்கரை யைத் தின்ருல்தானே இனிப்பு உண்டாகி இன்பம் உண்டாகிறது. மேலும் மேலும் உண்டால்தான் தெவிட்டுகிறது. அந்த இனிப்பை அந்தச் சமயத்தில் அவன் ஏற்க அசக்தனுக இருக்கிருனே ஒழிய சர்க் கரையில் இனிப்பு இருந்துகொண்டேதானிருக்கிறது. இதைப்போல உலகில் பொருள்களிடத்து இன்பம் இருந்துகொண்டே வருகிறது. பொருள்களிடத்து இன்பம் இன்றேல் உலகிலே பேரின்பப் பொருளும் ஒன்று இருக்க முடியாதென்கிருர்கள். இவற்றில் எது, எதுவரையில், எவ்வகையில் உண்மை ? இவைகளின் மெய்ப்பொருள்கள் என்ன ?

உலகப் பொருள்கள் இன்பம் தருவனவாகவோ அல்லது துன்பம் தருவனவாகவோ அமைந்துள்ளன என்பது உலக நடைமுறையை ஒட்டிப் பார்க்குமிடத்து முற்றிலும் உண்மையே. சர்க்கரை போன்ற பொருள் பொதுவாக எல்லார்க்கும் இன்பம் தருகிறது. எட்டிக்காய் போன்றது யாவர்க்கும் கசக்கும் தன்மையது. சர்க்கரை இனிக்கும் தன்மையது எனினும் அதனிடத்திருந்து அதன் இனிப்பை வாங்கிக் கொள்ள ஒருவன் ஆயத்தமாக இருக்கின்ற அளவே அது இன்பம் தருகிறது. தித்திக்கும் பண்டங்களைக் கண்டு வெறுப்படைகின்ற மக்களும் இருக்கின்றனர். அத்தகையவர்களுக்கு சர்க்கரை இன்பம் தருவதன்று. காய சித்தியின் பொருட்டு எட்டிக்காயைச் சிறிது சிறிதாகச் சுவைத்துப் பழகுகின்றவர்களும் உண்டு. அத்தகையவர்களுக்கு எட்டிக்காய் துன்பம் தரும் பொருள் அன்று. என்ன மனப்பான்மையுடன் ஒரு பொருளை நுகர்கின்றோமோ அந்த மனப்பான்மைக்கு ஏற்ப அதனிடத்திருந்து வரும் அனுபவம் இன்பமாகவோ, துன்பமாகவோ மாறக்கூடும்.

பொதுப்பட எல்லா உயிர்களுக்கும் இன்பம் தரும் பண்டங்களைப் புசித்து உயிர் வாழ்வது வாழ்வின் இயல்பு. அப்பொருள்களிலுள்ள சுவையை ரசித்து உண்பதும் உலக இயல்பு. பின்பு யோகி ஆக முயலுகின்ற ஒருவன் பொறிவாயில் ஐந்தையும் அவித்தும் அடக்கியும் பழகுதல் வேண்டும். உதாரணமாக சர்க்கரையைப் புசிக்கின்றபொழுது அதன்

தித்திப்புக்கு அவன் வசப்படலாகாது. அதற்கு வசப் பட்டவன் அப்பொருள் கிடையாவிட்டால் துன்புறு கிறான். நாவடக்கம் பழகாதவன் பாகற்காய் போன் றதைப் புசிக்கும்பொழுது அது கசக்கிறதென்று வெறுக்கின்றான். வெறுப்பின்றி அதை உண்டு பழகு வானாகில் உடலுக்கு அது நலம் தருகிறது. தித்திப்புப் பண்டத்தில் விருப்பும் கசப்புப் பண்டத்தில் வெறுப் பும் கொள்ளாது உணவை உண்டு பழகுபவனே சுவை என்னும் பொறிவாயிலை அவித்தவன் அல்லது அடக்கியவன் ஆகின்றான். இங்ஙனம் ஐம்பொறிகளை யும் அடக்கியாளக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். அப்படிக் கற்றுக்கொள்ளுதலினின்று நலமொன்று பிறக்கிறது. மனதுக்குள்ள பேராற்றல் அப்பொழுது ஆத்ம சாதகனுக்கு விளங்குகிறது. சர்க்கரை, பாகற் காய் போன்ற புறப்பொருள்களில் இன்ப துன் பத்துக்கேதுவான சுவைகள் பொருந்தியிருக்கின் றன என்பது உண்மையெனினும் நாம் அவைகளைப் பொருள்படுத்துகின்ற அளவுக்கே அவைகள் நமக்கு இன்பத்தையோ துன்பத்தையோ வழங்குகின்றன. அவைகளைப் பொருள்படுத்தாது புறக்கணித்துப் பழகியிருப்பவனுக்கு இன்பமும் துன்பமும் புறப் பொருள்களிடத்து இல்லை. நாம் அவைகளிடத்து அங்கீகரிக்குமளவுக்கே இன்பமும் துன்பமும் இருக் கின்றன என்னும் பேருண்மை அனுபவ பூர்வமாக விளங்கும். ஆத்மசாதனத்தில் முன்னேறியவன் புற வுலகிலுள்ள எதனிடத்திருந்தும் இன்பத்தையோ,

துன்பத்தையோ ஏற்றுக்கொள்ளுதலில்லை. 'ஏற்பது இகழ்ச்சி' என்பதன் கோட்பாடு இதுவேயாம். தன் மனதை வென்றவன் புற உலகையும் வென்றவன் ஆகின்றான். தன் மனதுக்கும் புற உலகுக்கும் சம்பந்தப்படாது, தானே இன்ப சொரூபம் என்பதைப் பிறகு அவன் அறிந்துகொள்கின்றான். தான் இன்ப சொரூபம் என்பதை அறிந்தான பிறகு தானும் தன் தலைவனும் ஒன்று என்பதை அறிகின்றான். அத்தகைய அனுபவம் வந்தபிறகு உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அமைந்த குணங்களெல்லாம் பரம்பொருளினிடத்திருந்து வந்தவை என்பது விளங்குகிறது. அத்தகைய ஞானக்காட்சி வந்தபிறகு உலகம் வேறு, பரம்பொருள் வேறு என்ற பேத உணர்வு போய்விடுகிறது. எல்லாம் அவன் மயம். அனைத்தும் ஆனது அவனே. அந்த அனுபவத்தினின்றுதான் தெவிட்டாத பேரின்பம் பிறக்கிறது. அந்நிலையை விட்டுக் கீழிறங்கி உலகக் காட்சியைக் காணும் பாங்குக்கு வந்துள்ள ஜீவர்களுக்கு நிலையற்ற இன்பங்கள் தருபவைகளாக உலகப் பொருள்கள் தென்படுகின்றன. ஆக, உலகப் பொருள்களிடத்திருந்து வருகின்ற இன்பங்களும் உண்மையில் பரம்பொருளிடத்திருந்து வருகிற இன்பமேயாம். அவ்வின்பம் தடைப்படுவதாக உணருங்காலத்தில் அது துன்பம் என்னும் பெயர் பெறுகிறது.

காண்போன் காணப்படுபொருள் மயமாக உள்ள உலகக் காட்சியில் இன்பமும் துன்பமும் கலந்

திருக்கின்றன. காண்போன் காணப்படுபொருளிடத்திருந்து தன்னை விடுவித்துக்கொள்ளுதல் சாதனம். காணப்படுபொருளுக்கு இன்பத்தையோ துன்பத்தையோ தருபவன் தானே என்பது சாதனத்தில் முதிர்ந்தவனுக்கு விளங்குகிறது. தலைவனில் தான் இரண்டறக்கலத்தல் சாதனம் பூர்த்தியான இடம். ஆங்குக் காண்போன் காணப்படுபொருள் இல்லை. எல்லாம் பேரானந்தப் பரம்பொருள் சொரூபம். ஒரு படித்தரத்திலுள்ள அனுபவத்தை மற்றொரு படித்தரத்திலுள்ள அனுபவத்தோடு கலக்கிக் குழப்பமடையலாகாது. மொத்தம் மூன்று படித்தரங்கள் இருக்கின்றன. கீழான படித்தரத்தில் உலகம் வேறு, தான் வேறு என்ற உணர்வு உண்டு. அந்நிலையில் சர்க்கரை போன்ற பொருள் இன்பத்தைத் தருகிறது. எட்டிக்காய் போன்றது துன்பத்தைத் தருகிறது. இரண்டாவது படியில் மனது பொருள்படுத்துதற்கு ஏற்ப இன்பமும் துன்பமும் அமைகிறது. உயர்ந்த ஞானப்படியில் எல்லாம் ஒரு பொருளின் தோற்றமேயாம்.

**கேள்வி : (41)** கல்யாணமாகாமல் வாழ்க்கை முழுதும் பிரம்மசாரிகளாகக் காலம் கழிப்பவர்கள் இறந்தபின் 'புத்' என்ற நரகத்தில் விழுவதாக அறிஞர்கள் அறைகின்றார்கள். பிரம்மசரியம் உயர்ந்த தத்துவம். அப்படியிருக்க உன்னத லட்சியத்தைக்கொண்ட பிரம்மசாரிகளுக்கு 'புத்' என்ற நரகம் இருப்பது நம்பத்தக்கதா?

ஜீவன் ஒருவன் பரமாத்மாவினிடத்திருந்து தோன்றி வந்தவன். இப்பொழுது பிரபஞ்ச வாழ்வு என்னும் பெரிய யாத்திரை செய்து கொண்டிருக்கிருன். இந்த யாத்திரை முற்றுப்பெறுமிடத்துத் தான் பழையபடி பரமாத்மாவினிடம் போய்ச் சேருகிருன். ஜீவன் உலக வாழ்க்கையில் மேலும் மேலும் கட்டுண்டவனுகிக்கொண்டு வருகின்றபொழுது அவன் கையாளும் உபாயத்துக்குப் பிரவிருத்தி மார்க்கம் என்று பெயர். உலகிலுள்ள சம்பத்துக்களையெல்லாம் மேலும் மேலும் பெறுபவனுக அவன் உணர்கின்ருன். உண்மையில் உலகப் பொருள்களில் அவன் மூழ்கியவன் ஆகின்ருன். அவைகளில் கட்டுண்டவன் ஆகின்ருன். உலகப் பொருள்களை வைத்து அனுபவித்து இன்புற்றிருப்பதாகத் தன்னைப்பற்றி அவன் எண்ணிக்கொள்கின்ருன். வாஸ்தவத்தில் இவனுடைய பாரமார்த்திகப் பெருநிலை உலக வியவகாரத்தால் மறைக்கப்படுகிறது.

ஜீவன் பெற்றுள்ள உலகவாழ்வு தனக்கு அனுகூலமாக அமையுமிடத்து அது சுவர்க்கம் எனப்படுகிறது. பிரதிகூலமாக அதை அவன் உணர்வானுகில் அதே பிரபஞ்ச வாழ்வு அவனுக்கு நரகமாய் விடுகின்றது. உலகில் நரகம் என்றும் சுவர்க்கம் என்றும் வெவ்வேறு இடங்கள் இல்லை. ஒரே உலகம் அவரவர் மனப்பான்மைக்கு ஏற்ப சுவர்க்கமாகவோ, நரகமாகவோ அல்லது இன்ப துன்பம் கலந்த இவ்

வையக வாழ்வாகவோ காட்சி கொடுக்கிறது. புத்திரப்பேறு இவ்வுலக சம்பந்தமானது. புத்திரர்களைப் பெற்று இன்புற்றிருப்பாரை இவ்வுலகில் காணலாம். புத்திரரைப் பெற்றுத் துன்புற்றிருப்பாரையும் இவ்வுலகிலேயே காணலாம். சிலருக்கு புத்திரரே நரகத்துவாரம் போன்று அமைந்துவிடுகின்றனர். ஆக, புத்திரப்பேறு நரக கதிக்குத் தடை என்பது முற்றிலும் உண்மையல்ல. இவ்வுலகம் தருகின்ற காட்சிகளே இக்கோட்பாட்டுக்குப் பிரமாணங்களாகும்.

இவ்வுலகப்பற்றை நீக்குமளவு ஒருவன் பரம்பொருளிடத்து விரைந்து போகின்றான். அது நிவிருத்தி மார்க்கமெனப்படுகிறது. 'கர்மத்தாலல்ல, மக்களைப் பெறுவதாலல்ல, செல்வத்தைச் சேகரிப்பதாலல்ல, இவையாவையும் தியஜிப்பதாலேயே அமிர்தத்துவம் அடையப்படுகிறது,' என்பது ஆப்த வாக்கியம். சாதகன் ஒருவன் பிரம்மசரிய விரதத்தில் நிலைபெற்றாலொழிய அவன் நிவிருத்தி மார்க்கத்துக்குத் தகுதியுடையவன் ஆகான். பிரம்மஞானத்தைக் குறித்து यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति என்பது மறைமொழியாகும். ஆக, புத் என்ற நரகத்தைப்பற்றிய கோட்பாடு லௌகிகர்களுடையது. பாரமார்த்திகத்தில் செல்வார்க்கு இது நகைப்புக்குரியதாகும். நரகவேதனைக்கும் அவர்களுக்கும் வெகுதூரம்.

**கேள்வி: (42)** மிக உயர்ந்த மாசுபடாத இலட்சியங்களிலேயே இருந்தபோதும் கூட திடீரென்று சிற்சில சமயங்

களில் மனம் சலனமடைவது ஏன்? அது மாசற்ற தாகாதா? அதை நீக்க இயலாதா?

இயற்கையின் நிகழ்ச்சியிலிருந்து மனதைப்பற்றிய ஒரு தத்துவத்துக்குச் சான்று எடுத்துக்கொள்வோம். வானத்திலே வெட்டவெளியைப் பார்க்கின்றோம். அது மாசு அற்றதாக நாலாபக்கமும் விரிந்திருக்கிறது. அத்தகைய தூய வெட்ட வெளியிலே திடீரென்று மேகம் தோன்றுகிறது. அது இங்கும் அங்கும் சஞ்சரிக்க ஆரம்பிக்கிறது. மாசற்ற வெட்டவெளியைப் போன்று நமது மனதை வைத்திருப்பது நமக்கு லக்ஷியம். லக்ஷியத்திலே நாம் ஆழ்ந்து கண்ணும் கருத்துமாய் இருப்போமானால் மனது அப்பொழுது முற்றும் நம் கைவசமாய்விடுகிறது. மாறுபடுகின்ற இரண்டு கருத்துக்களை ஏக காலத்தில் அது ஏற்றுக்கொள்ளாது. அல்லும் பகலும் உயர்ந்த லக்ஷியத்திலேயே மனது மூழ்கியிருக்குமானால் அவ்வேளையில் அதைத் தூய வெளியோடு ஒப்பிடலாம். உயர்ந்த லக்ஷியத்தினின்று மனதைத் தளர்த்தி சிறிது நேரத்திற்கு அதன் போக்கில் நாம் விட்டுவிடுவோமானால் மேகம் சூழ்ந்த வெளிபோன்று அதில் விதவிதமான எண்ணங்கள் தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. அவ்வெண்ணங்களில் பெரும் பகுதி கீழ்த்தரமானவைகளாகவே இருக்கும். முன்பொரு காலத்தில் எண்ணிய எண்ணங்களே அந்தக்கரணத்தினுள் புதைந்து கிடக்கின்றன. சந்தர்ப்பம் வாய்க்கும்பொழுது அவைகள் வெளியே தோன்றி வருகின்றன.

நாம் இரண்டுவிதமான உபாயங்களைக் கையாண்டு அத்தகைய கீழ்மைகளை அகற்றிவிடலாம்.கீழான எண்ணங்கள் தோன்றி வரும்பொழுது அவ்வெண்ணங்களை நமக்குச் சொந்தமாக்காது பராமுகமாயிருந்து பழகலாம். வழிப்போக்கன் யாரோ ஒருவன் நம் அருகில் நடந்து செல்கின்றான். அவனுடைய கீழ்மைகளைக் குறித்து நாம் சஞ்சலப்படுவது கிடையாது. ஆனால் நமக்குச் சொந்தம் என்று நாம் அபிமானிக்கும் மனிதன் ஒருவன் நமதருகிலேயே முறை தவறி நடந்து கொள்வானானால் நமது மனம் அதனால் பாதிக்கப்படுகிறது. ஓரளவு அக் குற்றத்தை நாமே செய்து விட்டது போன்று நாம் வியாகூலப்படுகிறோம். அபிமானம்தான் இதற்குக் காரணமாயிற்று. உள்ளத்திலே உதிக்கின்ற எண்ணங்களையும் வேற்றார்போன்று விட்டுவிடுகின்ற மனநிலையைப் பழக்கத்தால் கொண்டு வரலாம். அத்தகைய எண்ணங்களுக்கும் நமக்கும் ஒரு தொடர்வும் இல்லையென்று நாம் உணர்ந்து வருகின்றபொழுது அக்கீழான எண்ணங்களின் வேகம் தானே தணிந்துபோய்விடுகிறது.

மற்றோர் உபாயம் மனதுக்கு எப்பொழுதும் வேலை கொடுத்துக்கொண்டே இருப்பதாம். அதற்கு வேலையில்லாதபொழுதே மனது பொருந்தாத எண்ணங்களுக்கு இடம் கொடுத்துவிடுகிறது. உயர்ந்த லக்ஷியத்திலேயே சர்வகாலமும் அதை வைத்திருப்பது சாத்தியப்படாது போய்விடலாம். ஆனால் ஒன்

றன்பின் ஒன்ருக உயர்ந்த நோக்கங்களிலேயே அம் மனதை செலுத்திக் கொண்டிருப்போமாஞல் அதற்குக் கீழ்மையில் கலந்துகொள்ள அவகாசமில்லை. நன்மையை ஆழ்ந்து ஆர்வத்தோடு நாடிக்கொண்டிருக்கவேண்டும். அப்படி ஆர்வம்கொள்வது மிக முக்கியமானது. நெருங்கிய உற்ருர் ஒருவர் திடீரென்று காலமாய்விட்டார் என்று வைத்துக்கொள்வோம். அதைக் கேள்வியுற்றதும் மனது பெருந் துயரத்தில் மூழ்கிவிடுகிறது. வேறு எண்ணங்கள் அப்பொழுது உள்ளத்தில் தோன்றமுடியாது. அதே விதத்தில் பெரிய லக்ஷியம் ஒன்றில் மனது ஆழ்ந்து மூழ்கியிருக்கும்பொழுது மற்ற எண்ணங்கள் அம் மனத்தகத்துத் தோன்ற மாட்டா. தோன்றிஞலும் வலிவுபெற்றவைகளாக அவைகள் நிலைத்திருக்க மாட்டா.

ஆக, கீழான எண்ணத்தில் கலந்துகொள்ளாதிருப்பதும் மேலான லக்ஷியத்தில் நாட்டம்கொண்டிருப்பதுமாகிய இவ் இரு உபாயங்களே மனதை வெல்லுதற்கும் அதை உயர்ந்த லக்ஷியத்தில் வைத்திருப்பதற்கும் உற்ற உபாயங்கள் ஆகும்.

**கேள்வி: (43)** ஏசு கிறிஸ்துவைப்பற்றி வெளிவந்துள்ள நூல்களில் சில அவர் வாழ்ந்ததற்குச் சரித்திரச்சான்றே இல்லையென்று சாதிக்கின்றன. வேறு சில அவர் ஒரு சர்வசாதாரண அறப் பிரசாரகர் என்று பகர்கின்றன. இது உண்மையாயின் ஏசுகிறிஸ்துவின் பெயரால் இப் பல நூற்ருண்டுகளாக நடைபெற்று வந்துள்ள ஸ்தா

பனங்களுக்கும் சாதனை முயற்சிகளுக்கும் அருள் சக்தி எங்கிருந்து வந்தது? அருட் சக்தி யில்லாமல் கிறிஸ்தவ மெய்யடியார் பலர் இவ்வளவு சித்திகளையும், அரும்பணிகளையும் சாதித்திருக்க முடியாதே?

*இதுபோன்ற கேள்விகளைப் பல தடவைகளில் அவதார புருஷர்களாகிய பெருமக்களைப் பற்றியே பலர் கிளப்புவதுண்டு. ஏசுநாதர் சரித்திர பூர்வ மான புருஷர்தானு என்பதுதான் ஈண்டு எழுந் துள்ள கேள்வியின் முக்கியமான பகுதியாகும். அவர் சரித்திரபூர்வமான புருஷர் அல்லர் என்று ஒருசாரார் கருதி வருகின்றனர். கற்பனைப் புருஷர் ஒருவரை நடுநாயகமாக வைத்துக்கொண்டு ஓர் இயக்கத்தைத் துவக்கிவிட முடியுமா என்னும் கேள்வியும் இதை ஒட்டியதாகும். ஆசாரிய புருஷர் ஒருவர் கற்பனை யாக உண்டுபண்ணப் பெற்றவராயிருந்தாலும் அவர் எந்த லக்ஷியத்துக்காக உயிர் வாழ்ந்திருந்தார்என்று கற்பிக்கப்படுகிறதோ அந்த லக்ஷியம் என்றென்றும் உள்ளது. லக்ஷியம் ஒன்று மனிதனுல் கற்பிக்கப்பட் டது என்பது பொருந்தாது. லக்ஷியம்என்றென்றுமே மாந்தர் உள்ளத்தில் இருந்து வருகிறது. கற்பனைப் புருஷர் ஒருவரைப் பின்பற்றுவதில் தோஷம் ஒன்று மில்லை. ஏனென்ருல் அப்புருஷர் கற்பிக்கப்பட்டவ ரென்ருலும் அந்த லக்ஷியம் கற்பிக்கப்பட்டதன்று. அது என்றைக்கும் நித்தியமாயுள்ளது.*

*ஆனல் உலக நன்மையின் பொருட்டு அவதார புருஷர்கள் ஆங்காங்குக் குறிப்பிட்ட காலங்களிலே*

தோன்றுவதுண்டு. அப்படித் தோன்றிய மஹான்களில் ஒருவர் ஆகின்றார் ஏசுநாதர். அவரைக் கற்பனைப் புருஷர் என்று வாதாடுபவர்களோடு அவர்களை மறுத்து நாம் சம்வாதம் செய்யவேண்டிய அவசியமில்லை. ஏசுநாதர் சிறந்ததொரு தியாக மூர்த்தி; உயிர்களிடத்து அன்பே வடிவெடுத்தவர். அப்படி அவரைப்பற்றி நாம் சிந்திக்கும் பொழுதெல்லாம் நமது மனது இயல்பாக உயர்நிலைக்குப் போய் விடுகிறது. விவாதம் செய்வது வெறும் ஆராய்ச்சியாளரது போக்கு. பெரியோரைப் போற்றி உயர்நிலைக்குப் போவது பக்தர்களின் இயல்பு. ஐதிகமாக இப்பொழுது உலகில் வந்துள்ள ஏசுநாதரின் வரலாறு கணக்கற்ற ஆத்ம சாதகர்களுக்கு உற்சாக மூட்டவல்லது. அப்படி உற்சாகம் தோன்றிக்கொண்டிருக்கும் பரியந்தம் ஏசுநாதரின் சொரூபம் மக்களது மனத்தைவிட்டு அகன்றுவிடாது. பரம லக்ஷிய புருஷராகவே மாந்தர் உள்ளத்தில் அவர் திகழ்ந்து வருவார். நாம் பக்தரின் கண்கொண்டு அவரைக் காண்போம். சரித்திர ஆராய்ச்சியாளரின் பாங்கு நமக்குத் தேவையில்லை.

அவதார புருஷர் ஒருவர் உலகில் வரும் பொழுது அருள் சக்தி ஒன்றை அவர் உண்டுபண்ணுகிறார். அவருடைய ஸ்தூல உடல் மறைந்த பின்பும் அந்த அருள் சக்தி மாந்தர்க்கிடையில் இயங்குகிறது. நெடுங்காலத்திற்கு அந்த இயக்கம் நிகழ்ந்து கொண்டேயிருக்கும். தோன்றியவர் அவதார புருஷர்

*என்பதற்கு அதுவும் ஓர் அறிகுறியாகும். ஏசுநாதர் ஜீவியத்தில் அந்த அறிகுறியையும் காண்கிரோம்.*

**கேள்வி: (44)** "தேவர்களையும் தேவதைகளையும் வழிபடுவோர் தேவலோகத்தை அடைவர். முன்னோர்களை வழிபடுவோர் பிதிர்லோகத்தைச் சேருவர். பூதங்களையும் பிரேதங்களையும் பூஜிப்பவர் அவைகளின் உலகங்களை அடைவார்கள். என்னை வழிபடுவோர் என்னையே சேருவார்கள்'' என்று கீதா வாக்கியம் உள்ளது. திருமாலான கண்ணன் இவ்வாறு கூறியதால் அவனையே, விஷ்ணுவையே வழிபடல் வேண்டும் என்றும், இதர சிவன், மாரியம்மன், விநாயகர் போன்றவர்களை வழிபடலாகாது என்றும் வைணவர்கள் கூறுகிறார்கள். இக்கூற்று சரியா, தவரு? மேலும் 'பிரம்மலோகம் சொர்க்கலோகத்தில் இருப்பவர்கள் அனைவரும் திரும்பத்திரும்பப் பிறப்பவர்கள். ஆனால் என்னை அடைந்தபின் மனிதன் புனர்ஜன்மம் எடுக்கான்' என்று பகவான் பகர்கிருர். மேற்படி இரண்டு லோகங்களின் தத்துவத்தையும் 'என்னை அடைந்தபின்' என்று பகவான் கூறுவதின் கருத்தென்ன என்பதையும் விளக்கவேண்டும்.

*மெய்ப்பொருள் ஒன்றுதான் உள்ளது. யாண்டும் அழிந்து பட்டுப்போகாது இருக்கும் அவ்வொரு பொருள் பல வடிவங்கள் எடுக்கவல்லது. ஆறு ஆகவும் ஏரி ஆகவும் குளமாகவும் குட்டையாகவும் கடலாகவும் வடிவெடுக்கவல்லது நீர். இன்னும் அதை எத்தனை பாத்திரங்களில் போடுகிரேமோ அத்தனை*

வித வடிவெடுக்கவும் அது வல்லது. வடிவங்கள் அப்போதைக்கப்போது அப்பொருளின்மீது சுமத்தப்பட்டப் புறத்தோற்றங்களாகும். தோற்றங்கள் மாறுவதால் பொருள் மாறிப்போய் விடுவதில்லை. இக்கோட்பாடு தெய்வத்துக்கும் பொருந்தும். இத்தனை வித நீர்களுள் ஒவ்வொன்றையும் ஒவ்வொருவித காரியத்துக்குப் பயன்படுத்தலாம். கப்பலைச் செலுத்துதற்குக் கடல்நீர் உதவுகிறது. பூமிக்குப் பாய்ச்சுதற்குக் குளம் குட்டைகளில் உள்ள நீர் உதவுகிறது. அருந்துதற்குத் தூய நீர் ஒன்றைத்தான் நாம் தேட வேண்டும்.

பூதங்கள் எனப்படுபவைகளும் சிறு தெய்வங்கள் எனப்படுபவைகளும் பரமாத்மாவின் வெவ்வேறு சிறு தோற்றங்களாம். உலகனைத்தும் ஆனவன் அவன் ஒருவனே. உலகப் பொருளில் நாம் பற்று வைத்து அவைகளை நாடித்திரிகின்றபொழுதும் நாம் மறைமுகமாகப் பரமாத்மனையே நாடுகின்றோம். பரமாத்மனே இவ்வடிவில் இருக்கின்றான் என்று உண்மையைத் தெரிந்துகொள்ளாது இவ்வடிவத்தை நாடுகின்றோம். அவ்வடிவம் நமக்கு ஏகதேசம் லௌகிக காரியங்களுக்கு உதவுகிறது. வெவ்வேறு பூதங்களாய், சிறு தெய்வங்களாய் அம்மெய்ப்பொருளைக் கருதி நாம் வணங்குங்கால் அதற்கேற்ற நலனை அடைகின்றோம். இத்தனையும் ஆனவன் அவனே, இதற்கப்பாலும் இருப்பவன் அவனே என்று அறிகின்றவர்கள் அவனை இன்னும் உயர்ந்த

முறையில் மதிப்பிடுகின்றனர். அவனுடைய உயர்ந்த பாங்கை அறிகின்றவர் உயர்நிலை அடைகின்றனர். அவனுடைய இடைத்தரமான பாங்கை அறிகின்றவர் இடைத்தரமான நலனை அடைகின்றனர். கீதா வாக்கியத்திலே 'நான்' என்னும் சொல் முழுமுதற் பொருளுக்கு இலக்காக இருக்கிறது. முழுமுதற் பொருள் என்று கருதுங்கால் சிவன், விஷ்ணு, கணபதி ஆகிய எல்லாத் தெய்வங்களும் ஒன்றுபட்டு விடுகின்றன. அவனுடைய ஒரு சிறு விபூதியை மட்டும் கருத்தில் வாங்கிக் கொள்கின்றபொழுது அது ஒரு சிறு தெய்வமாகவே இருந்து சிறிய காரியங்களுக்குப் பயன்படுகிறது.

சாதகர்களாகிய நாம் பாவிப்பதற்கேற்ற நிஜ சொரூபத்தை அந்த ஒரு பொருள் நமக்குக் காட்டியருள்கிறது. சராசரம் அனைத்தும் அந்த ஒரு பொருளின் பல்வேறு தோற்றங்கள் என்று உணர்பவர் மேலும் பிறப்பெடுக்காத பெருநிலையடைகின்றனர். அப்படியல்லாது அதை உலகம் என்றும் பூதங்கள் என்றும் சிறு தெய்வங்கள் என்றும் கருதி அதை நாடுபவர் தம் கருத்துக்கேற்ற நலனைப் பெறுகின்றனர். அதை முழுமுதற் பொருளாக உணர்வது தான் முறையான வழிபாடு ஆகும். ஏனையவை கருதுபவர் கருத்துக்கேற்ப இரண்டாம் தரம், மூன்றாந்தரம் ஆகிய வழிபாடுகளாக வடிவெடுத்து விடுகின்றன. யாவுமாகிய நிறைபொருளாகவே அவனைப் போற்றிப் பழகுதல்தான் தலைத்தரமான வழிபாடு.

*அவனை நிறைபொருளாக உணராது அவனுடைய ஏதேனும் ஒரு சொரூபத்தை மட்டும் உணர்பவர் அதற்கேற்ற மனநிலையில் நின்றுவிடுகின்றனர். அந்த மனநிலைதான் சொர்க்கமென்றும், நரகம் என்றும், பிரம்ம லோகம் என்றும் விதவிதமான பெயரெடுத்து வருகிறது. இத்தகைய மனநிலைகளெல்லாம் மேலும் மேலும் பிறப்பெடுப்பதற்கு ஏதுவானவைகள். அகண்டாகாரப் பெருநிலையில் மனது லயம் அடையும்படி செய்துவிடுபவர் பிறப்பில்லாத பரிபூரணநிலையைப் பெறுகின்றனர். 'என்னை அடைகிறார்கள்' என்று பகவான் சொல்லுவதின் கோட்பாடு இதுவே.*

**கேள்வி : (45)** கீதை படிப்பதைவிட கால் பந்து விளையாட்டு மூலமாக மதம் அதிகக் கிட்டத்தில் நெருங்கும் என்று சுவாமி விவேகானந்தர் கூறியுள்ளார். இதன் உட்கருத்தென்ன ?

*விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தவறுதலாக அர்த்தம் பண்ணுதற்கு இக்கேள்வி இடந்தருகிறது. எந்தச் சந்தர்ப்பத்தில் யாருக்கு இக்கருத்தை விவேகானந்த சுவாமிகள் தெரிவித்தார் என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். வைத்தியர் ஒருவர் நோய்க்கேற்ற மருந்தைத் தருகிறார். ஒரு நோயாளிக்கு விஷத்தையே ஔஷதமாக்கிக் கொடுக்கிறார். அதிலிருந்து ஒவ்வொரு நோயாளியும் நோயை நீக்குதற்கு விஷத்தை உண்பது நலம் என்று நாம் தீர்மானம் செய்தால், தீர்*

மானப்படி விஷத்தை உண்டால் விபரீதமான விளைவு அதிலிருந்து வந்துவிடும்.

ஞானுசாரியர் ஒருவர் சாதகனுடைய பான்மைக்கேற்ற வாழ்க்கை முறையைப் புகட்டுகிறுர். சாதகனுடைய பான்மையைப் பின்னணியில் தள்ளி விட்டு, புகட்டிய போதனையை மட்டும் பொதுவிதி என்று எடுத்துக்கொள்வோமானுல் அது பெரும் பிசகு ஆகும். அந்நிலையில்தான் இக்கேள்வியும் நிற்கிறது.

மாணுக்கன் ஒருவன் விவேகானந்த சுவாமி களிடம் அடிக்கடி வருவதுண்டு. அப்பொழுது பகவத்கீதை புஸ்தகத்தையும் அவன் கையில் கொண்டு வருவான். சந்தர்ப்பம் வாய்க்கும்பொழு தெல்லாம் அவரிடம் கேள்வி கேட்க முயன்று வந் தான். ஏதோ சில சுலோகங்களை எடுத்துச் சொல்லி அவைகளின் உட்கருத்து யாது என்று அவன் அடிக் கடி கேட்டுவந்தான். ஆனுல் அவன் கேட்ட கேள்வி களுக்கு விவேகானந்த சுவாமிகள் மறுமொழி ஒன் றும் பகரவில்லை. ஏதோ சில சமயங்களில் 'நீ அவை களின் உட்கருத்தைப்பற்றிக் கவலைப்பட வேண் டாம்' என்று மட்டும் பகர்ந்து வந்தார். மாணுக் கன் அவரிடம் வந்தபொழுதெல்லாம் ஏமாற்றம் அடைந்து வந்தான். ஏனென்ருல் தன் கேள்விக்கு ஏற்றவிடை அவரிடமிருந்து வரவில்லை. ஆயினும் அவரிடம் வருவதை அம் மாணுக்கன் நிறுத்திவிட வில்லை. சுவாமிகளை உபத்திரவப்படுத்துகிற முறை

யில் அவன் அடிக்கடி வந்துகொண்டே யிருந்தான். அவன் வருவதையும் போவதையும் சுவாமிகளோ மனதில் வாங்கிக்கொள்வதில்லை. தம் கருமத்திலேயே அவர் கண்ணுயிருந்தார். மாணுக்கனுக்கோ நாளடைவில் ஏமாற்றம் உச்சநிலைக்குப் போய்க் கொண்டிருந்தது.

மிகவும் இளகிய மனதுடன் மற்றுமொருநாள் மாணுக்கன் விண்ணப்பித்தான். தனக்கு விளங்காத ஒரு சுலோகத்துக்கு விளக்கம் பகர்ந்தருளவேண்டுமென்று அவன் தாழ்ந்து விண்ணப்பித்துக்கொண்டான். அப்பொழுது சுவாமிகள் பரிந்து அவனுக்குப் பதில் விடுத்தார்: 'பிள்ளாய், இப்பொழுது நீ பகவத்கீதையைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். அதை மூடி வைத்துவிடு; சத்துள்ள ஆகாரம் சாப்பிடு; அதை ஜீரணம் பண்ணக்கூடிய சக்தியைப் பெறு; நன்ருக ஓடியாடிக் கால்பந்து விளையாடு. அப்படி விளையாடி உடலை உறுதிப்படுத்திக்கொள். உறுதி படைத்தவனே உறுதிபடைத்த மற்ருருவனை அறிந்துகொள்ள முடியும். யானையின் பலத்தை சிங்கம் அறிகிறது. சிங்கத்தின் பலத்தை யானை அறிகிறது. யானையின் மீதோ சிங்கத்தின் மீதோ உட்கார்ந்திருக்கும் கொசு ஒன்றுக்கு அப்பெரு விலங்குகளின் பலம் எப்படித் தெரியும்?'

கிருஷ்ணபரமாத்மா பேராற்றலே வடிவெடுத்தவர். அண்டங்கள் அனைத்தும் தவிடுபொடியாக அழிந்துபட்டுப்போகின்ற சூழ்நிலையிலும் அச்செயல்

களையெல்லாம் நிம்மதியாக இருந்துகொண்டு வேடிக்கை பார்க்கும் பாங்குடையவர். போர்க்களத்தில் பல்லாயிரம் வீரர்கள் வீழ்வதும் மாய்வதும் அவருடைய மனதில் ஒரு மாறுதலையும் உண்டுபண்ணிவிடமாட்டா. ஜகந்நாதனாகிய அவர் ஜகத்தினுடைய தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவைகளை வெறும் விளையாட்டு என்று பொருள்படுத்துபவர். அர்ஜுனன் போன்ற வீரனுக்கு அவர் கீதையைப் புகட்டினார். கோழை ஒருவனுக்கு அவர் புகட்டிய செய்தி சிறிதும் ஒவ்வாது. அவர் புகட்டிய செய்தியை ஒரு சொல்லில் அடக்கிவிடலாம்.

क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥

'எதிரியை வாட்டுபவனே! இழிவான உள்ளத் தளர்வைத் துறந்துவிட்டு எழுந்திராய்.' கீதையின் அடிப்படைத் தத்துவம் இதுவே. மனிதன் பேராற்றல் படைத்தவன் ஆகவேண்டும். பேரறிவையும் அவன் பெறுதல் அவசியம். அப்பொழுதுதான் அண்டத்தின் நடைமுறை அவனுக்கு விளங்கும். வீரன் போன்று அதில் பங்கெடுத்துக்கொள்ளவும் அப்பொழுதே அவனுக்குச் சாத்தியமாகிறது.

விவேகானந்த சுவாமிகளிடம் கீதா சாஸ்திரத்தை எடுத்துக்கொண்டு வந்த மாணாக்கன் மெல்லிய உடல் படைத்தவன். காற்றடித்தால் கீழே விழுந்துவிடும் பலவீனன்; வற்றிப்போன உடல், தளர்ந்துபோன நரம்புகள், உலர்ந்துபோன மூளை—இத்தகைய இளைஞனுக்குக் கீதா சாஸ்திரத்தைவிட

நல்லுணவும், உற்சாகமூட்டும் விளையாட்டுமே பொருத்தமானவைகள் என்பது சுவாமிகளின் கருத்து. அவர் காட்டிய வழியை அவன் கடைப் பிடித்திருந்தால் சிறிதளவாவது மேன்மையுறுவான். அதற்கு மாறாக வெறுமனே அவன் கீதா சாஸ்திரம் ஆராய்ச்சி செய்தால் அவனுடைய மூளை மேலும் உலர்ந்து போய்விடும். அப்படி மனிதனை ஒன்றுக்கும் உதவாதவன் ஆக்குவது விவேகானந்த சுவாமி களின் செய்தியன்று. கிருஷ்ணபரமாத்மாவின் செய் தியும் அத்தகையதன்று. வேதாந்தத்தின் செய்தியே மனிதனை நல்ல தீரனாகவும் வீரனாகவும் அமைப்பதாம். சிலர்க்கு வெறுமனே சாஸ்திரங்களைப் படிப்பதைவிட ஆற்றல் நிறைந்த செயல்கள் அதிகப் பயன்தரும் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆக, அந்த மாணாக்கனுக்கு விவேகானந்த சுவாமிகள் காட்டிய நல்லுணவும் பந்தாட்டமும் என்ற நெறிதான் சாலச்சிறந்தது. மனிதனது தரத் துக்கேற்ற சாதனை முறை என்பதை நாம் எப்பொழு தும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**கேள்வி: (46)** கணவனுக்கும் மனைவிக்கும் தொடர்பின்றியே தெய்வ சங்கல்பத்தால் கருத்தரித்தல் நிகழ்ந்திருப்ப தாக (Immaculate conception) கிறிஸ்தவத்திலும் வேறு சில மஹான்களுடைய ஜீவிய வரலாற்றிலும் காணப்படுகின்றது. இதை அழகியதொரு கற்பனை யாகக் கொள்ளுவதா அல்லது பௌதிக உண்மையாக ஏற்பதா?

உயிர்களின் பிறப்பைப்பற்றிய பொதுவிதி சந்தேகத்துக்கு இடமில்லாதிருக்கிறது. ஆணும் பெண்ணும் சேர்வதாலேயே அது நிகழ்கிறது. ஜங்கமங்கள் அனைத்துக்கும் இது பொதுவானது. ஸ்தாவரத்திலும் இவ்வமைப்பின் அறிகுறி உருவெடுக்க ஆரம்பித்திருக்கிறது. ஸ்தாவரத்தில் மிகக் கீழான நிலையில் ஆண் என்றும் பெண் என்றும் பால் வேற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. சரீரம் எடுப்பதில் மானுட நிலையைத் தாண்டி அதைவிட உயர்ந்த நிலைக்குப் போகும்பொழுது ஆண் பெண் என்ற பால் வேற்றுமையைக் கடந்து போகக்கூடும் என்பதற்குச் சான்றுகள் சில கிடைக்கின்றன.

பிரபஞ்சத்தை சிருஷ்டித்த பிரம்மா தமது மானச புத்திரர்களாகச் சிலரைச் சிருஷ்டித்தார் என்னும் வரலாற்றை நூல்களில் காண்கிறோம். யோகத்தில் முதிர்ச்சியடைந்த சித்தர்கள் தங்களுடைய மனோசங்கல்பத்தால் தங்களைப் பல ஜீவர்களாக ஏககாலத்தில் பிரித்து வைத்துக்கொள்ளக் கூடும். அப்படித் தங்களைப் பல ஜீவர்களாக்கி அத்தனை சரீரங்கள் வாயிலாகத் தங்கள் வினையைச் செய்து முடித்துக்கொள்ளக்கூடும் என்று யோக சாஸ்திரம் பகர்கின்றது. கிருஷ்ண பகவான், ஏசுநாதர் போன்றவர்கள் தெய்வ சங்கல்பத்தால் மாதாவின் கர்ப்பத்தில் தோன்றினார்கள் என்று அவர்களைப்பற்றிய வரலாறுகள் பகர்கின்றன. அத்தகைய நிகழ்ச்சிகள் சாதாரணமாக அடிக்கடி நிகழ்

பவைகள் அல்ல. ஆகையால் ஆராய்ச்சிக்கு அவைகள் எட்டுவதில்லை. ஆயினும் ஒரு தத்துவத்துக்கு விளக்கமாகவே அவையாவும் வந்தமைகின்றன. எண்ணத்தின் ஸ்தூல தோற்றமே பௌதிகப் பொருள்கள் என்பது அத்தத்துவம். பிரம்மா எண்ணினார், அந்த எண்ணத்தின் ஸ்தூல வடிவம் இப்பிரபஞ்சமாகும். உயிர்கள் எண்ணுகின்றன. அவ்வெண்ணங்களுக்கு ஏற்ப விதவிதமான வடிவங்களைத் தங்களுக்குத் தாங்களே உண்டுபண்ணிக் கொள்கின்றன. அப்படி உண்டுபண்ணிக் கொள்ளுதலில் சாதாரண ஜீவர்கள் தாய் தந்தையரிடமிருந்து தங்களின் சரீரங்களுக்கு ஏற்ற பிண்டங்களை வாங்கிக்கொள்கின்றனர். சாதாரண ஜீவர்களின் எண்ணம் வலிவு மிக வாய்க்கப்பெற்றதல்ல. தெய்வ சங்கல்பம் என்பதும், பிரம்மதேவனுடைய மானசிக சிருஷ்டி என்பதும், யோகியர்களுடைய யோக பலத்தால் தங்களைத் தாங்களே பல ஜீவர்களாகப் பிரித்தெடுப்பதும் எண்ணத்தின் வலிவைக் காட்டுகின்றன. ஆகவே, மனசங்கல்பத்தால் ஆண் பெண்களுடைய சேர்க்கையின்றியே உயிர்கள் தோன்றுவது சாத்தியம். அப்படித் தோன்றுகிற உயிர்கள் தாயின் கர்ப்பத்திலிருந்து சிசுக்களாகப் பிறந்து, வளர்ந்து வருவதும் இயற்கையின் இயல்பு. யோகியர்கள் தம்மை வயது முதிர்ந்த பல ஜீவர்களாக நொடிப்பொழுதில் அமைத்துக்கொள்ள முடியும். பிருந்தாவன லீலையில் கணக்கற்ற கோபாலர்களுக்

கும் கோபிகளுக்கும் பரமானந்தத்தை ஊட்டுதற் பொருட்டு கண்ணன் நொடிப் பொழுதில் கணக்கற்ற வடிவங்களை எடுத்துக்கொண்டான். யோகேசுவர னுக்கு அத்தகைய செயல் சாத்தியமாகிறது. இவை களையெல்லாம் தொகுத்தெடுத்து நாம் ஒரு முடிவுக்கு வரக்கூடும். மிகக் கீழ்நிலையில் இருக்கின்ற உயிர்கள் ஆண் பெண் என்ற பேதம் அறியாமலேயே உரு வெடுக்க முடியும். சாதாரண மனநிலையைக் கடந்து மேல்நிலைக்குப் போன ஜீவர்கள் சங்கல்பத்தால் தங்களுக்குப் பல வடிவங்களைத் தரமுடியும். தெய் வம் தனது சங்கல்பத்தால் தூய்மையே வடிவெடுத்த மானுடனாக மண்ணுலகில் பிறக்க முடியும். அப்படிப் பிறப்பதற்கு ஆண் பெண்களுடைய சேர்க்கை முற்றி லும் அவசியமானதல்ல. ஆண் பெண்களுடைய சேர்க்கை வாயிலாகவும் அவன் அவதரிக்கின்றான். அத்தகைய சேர்க்கை இல்லாமலும் அவன் அவதரிக் கின்றான். அவனுடைய சங்கல்பத்துக்கு ஆற்றல் மிக உண்டு. அந்த ஆற்றலுக்கு ஏற்ப உருவங்கள் தாமாகத் தோன்றுவதும் உண்டு.

பௌதிக உண்மை என்பது ஒரு நிலையிலுள்ள ஏகதேச உண்மையாகும். எல்லா நிலைகளுக்கும் அது பொருந்தாது. எண்ணத்துக்கு அன்னியமாக பூதமே இல்லையென்றால் எண்ணத்தைக் கடந்த நிலையிலும் பூதம் இல்லை என்பது வெளிப்படை. பெரியோர் சங் கல்பமும் தெய்வ சங்கல்பமும் பூதத்தையே உண்டு பண்ணக்கூடும்; உயிர்களையும் உண்டுபண்ணக்

*கூடும். ஆகவே இந்நிகழ்ச்சி சாதாரண கற்பனையை யும், சாதாரண பௌதிக நிகழ்ச்சியையும் கடந்த தாகும்.*

**கேள்வி :** (47) 'ஒரு புண் ஆறிவிட்டால் பொருக்கு தானே விழுந்துவிடுகிறது. அதற்குமுன் அந்தப் பொருக்கை எடுத்தால் புண்ணிலே ரத்தம் வருகிறது. அது போன்றே திவ்விய ஞானம் உண்மையில் உண்டாகும் பொழுது ஜாதி வித்தியாசங்களெல்லாம் ஒழிந்து விடு கின்றன. ஆனால் அக்ஞானிகள் அந்த ஜாதி வித்தி யாசத்தை மீறி நடப்பது தப்பு' என்று ஸ்ரீ ராமகிருஷ் ணர் கூறியுள்ளார். இதன்படி திவ்ய ஞானம் உண் டாவதற்கு ஜாதி வித்தியாசம் அவசியம் என்றுதான் அர்த்தப்படுகிறது. அப்படியானால் உலகில் காந்திஜி போன்ற பெரியோர்கள் ஒருமுகமாக ஜாதி வித்தியா சங்கள் ஒழிந்து எல்லோரும் ஓர்குலம் எல்லோரும் ஓரினம் என்று பறைசாற்றுவதெல்லாம் முரண்பா டுடையது ஆகிறதல்லவா? இது சரியா, தவறு?

*பரமஹம்ஸர் உபதேசத்துக்கும் மஹாத்மா நடந்துகொண்டதற்கும் முரண்பாடு இல்லை. ஜாதி வித்தியாசத்தைப் பலவந்தமாக விட்டுவிடலாகாது என்று பரமஹம்ஸர் பகர்கின்றார். அதற்கு உபமான மாக அவர் எடுத்துக்கொண்டது ஆறிவரும் காயத் தின் மீதுள்ள பொருக்கு ஆகும். காயமே பந்தோ பஸ்தாகப் பாதுகாக்கப்படுகிறது. அப்படிப் பாது காப்பதால் அது என்றென்றைக்கும் சரீரத்தில் இருக்கவேண்டும் என்கிற எண்ணம் வருவதில்லை.*

அதே விதத்தில் ஜாதி வித்தியாசத்தை அனுஷ்டிக்கின்றபொழுது உயர்வு தாழ்வு என்கின்ற பேதத்தை வளர்ப்பதன் பொருட்டு அல்ல; அவரவருக்கு ஏற்ற கர்மத்தை அனுஷ்டித்தல் என்றுதான் பரமஹம்ஸர் புகட்டுகின்ற ஜாதி வித்தியாசம் பொருள்படுகின்றது. பணிவிடை செய்வதைக் கடவுள் வழிபாடு என்று அப்பர் சுவாமிகள் வைத்துக்கொண்டார். கடவுளிடத்தில் வேலை வாங்குவதைக் கடவுள் வழிபாடு என்று சுந்தரர் வைத்துக்கொண்டார். ஒருவர் எடுத்துக்கொண்ட உபாசனை முறை மற்றொருவருக்கு ஒவ்வாது. உபாசனை முறையில் வேற்றுமை இருக்கிறது. ஆனால் இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாதல் என்னும் குறியிலே வேற்றுமை இல்லை. நெறியில் வேற்றுமை உண்டு. அவரவருக்கு உவந்த தொழிலையே தேவாராதனையாகச் செய்தால் தெய்வத்தை அடையலாம். ஆனால் ஒருவர்க்குரிய தொழில் இன்னொருவருக்கு ஒவ்வாததாகப் போய் விடக்கூடும். அறிவுடையோர் ஒரு தொழிலை உயர்ந்ததென்றும் மற்றொரு தொழிலைத் தாழ்ந்ததென்றும் கருதுவதில்லை. மற்றுமொரு சான்று எடுத்துக் கொள்வோம். கக்கூஸ் சுத்தம் செய்வதை தேவாராதனையாகக் கருதிச் செய்யலாம். கோயிலில் அர்ச்சனை செய்வதையும் தேவாராதனையாகக் கருதிச் செய்யலாம். இங்குத் தொழில் வேற்றுமை உண்டு, ஆனால் உயர்வு தாழ்வு என்ற பேதம் இருக்கலாகாது. யார் எத்தொழிலுக்குத் தகுதியுடையவர்களோ அத்

தொழிலை உயர்ந்த மனப்பான்மையுடன் செய்யலாம். பிறர் தொழிலை அல்பத் தொழிலாகக் கருதும் மனிதன் ஒருவன் அக்கருமத்தின் மூலமாகத் தானே அற்ப மனிதன் ஆய்விடுகிறான். கக்கூஸ் சுத்தம் செய்யும் வேலையைப் பரமஹம்ஸரும் செய்தார், மஹாத்மாவும் செய்தார். ஆலயத்தில் தெய்வத்துக்கு அர்ச்சனை பண்ணும் தொழிலையும் பரமஹம்ஸர் செய்தார். அவர் கருத்தில் அவ்விரண்டும் தேவாராதனையே. மஹாத்மா காந்தி கூட்டு வழிபாடு செய்தார், ஊரில் உள்ள குப்பைகளையெல்லாம் கூட்டுகிற தொழிலையும் செய்தார். இரண்டையும் தெய்வ வழிபாடாகவே அவர் கருதினார்.

அடிப்படைக் கருத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தொழிலில் வேற்றுமை உண்டு. அதை முன்னிட்டு உயர்வு தாழ்வு என்கின்ற பேதபுத்தி வரலாகாது. சமூகத்துக்குப் பயன்படுகின்ற எல்லாத் தொழில்களையும் தேவாராதனையாகச் செய்து பழக வேண்டும். ஒரு மனிதன் எக்கருமத்துக்குத் தகுதியுடையவனாகப் பிறந்திருக்கின்றானோ, அல்லது பயிற்சி பெற்றிருக்கின்றானோ அது அவனுடைய சுதர்மம் ஆகும். அவனுடைய ஜாதிக்கேற்றது என்றும் பகரலாம். அத்தொழிலை நிறுத்திவிடலாகாது. முறையாகக் கையாண்டால் தெய்வத்தை அடைவதற்கு உற்ற சாதனமாக அத்தொழில் அமைகிறது. இப் பேருண்மையைப் பரமஹம்ஸரும் மஹாத்மா காந்தியும் தங்களுடைய வாழ்க்கையில் புகட்டியிருக்கின்றார்கள்.

அதே விதத்தில் ஜாதி வித்தியாசத்தை அனுஷ்டிக்கின்றபொழுது உயர்வு தாழ்வு என்கின்ற பேதத்தை வளர்ப்பதன் பொருட்டு அல்ல; அவரவருக்கு ஏற்ற கர்மத்தை அனுஷ்டித்தல் என்றுதான் பரமஹம்ஸர் புகட்டுகின்ற ஜாதி வித்தியாசம் பொருள்படுகின்றது. பணிவிடை செய்வதைக் கடவுள் வழிபாடு என்று அப்பர் சுவாமிகள் வைத்துக்கொண்டார். கடவுளிடத்தில் வேலை வாங்குவதைக் கடவுள் வழிபாடு என்று சுந்தரர் வைத்துக்கொண்டார். ஒருவர் எடுத்துக்கொண்ட உபாசனை முறை மற்றொருவருக்கு ஒவ்வாது. உபாசனை முறையில் வேற்றுமை இருக்கிறது. ஆனால் இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாதல் என்னும் குறியிலே வேற்றுமை இல்லை. நெறியில் வேற்றுமை உண்டு. அவரவருக்கு உவந்த தொழிலையே தேவாராதனையாகச் செய்தால் தெய்வத்தை அடையலாம். ஆனால் ஒருவர்க்குரிய தொழில் இன்னொருவருக்கு ஒவ்வாததாகப் போய் விடக்கூடும். அறிவுடையோர் ஒரு தொழிலை உயர்ந்ததென்றும் மற்றொரு தொழிலைத் தாழ்ந்ததென்றும் கருதுவதில்லை. மற்றுமொரு சான்று எடுத்துக் கொள்வோம். கக்கூஸ் சுத்தம் செய்வதை தேவாராதனையாகக் கருதிச் செய்யலாம். கோயிலில் அர்ச்சனை செய்வதையும் தேவாராதனையாகக் கருதிச் செய்யலாம். இங்குத் தொழில் வேற்றுமை உண்டு, ஆனால் உயர்வு தாழ்வு என்ற பேதம் இருக்கலாகாது. யார் எத்தொழிலுக்குத் தகுதியுடையவர்களோ அத்

தொழிலை உயர்ந்த மனப்பான்மையுடன் செய்யலாம். பிறர் தொழிலை அல்பத் தொழிலாகக் கருதும் மனிதன் ஒருவன் அக்கருமத்தின் மூலமாகத் தானே அற்ப மனிதன் ஆய்விடுகிருன். கக்கூஸ் சுத்தம் செய்யும் வேலையைப் பரமஹம்ஸரும் செய்தார், மஹாத்மாவும் செய்தார். ஆலயத்தில் தெய்வத்துக்கு அர்ச்சனை பண்ணும் தொழிலையும் பரமஹம்ஸர் செய்தார். அவர் கருத்தில் அவ்விரண்டும் தேவாராதனையே. மஹாத்மா காந்தி கூட்டு வழிபாடு செய்தார், ஊரில் உள்ள குப்பைகளையெல்லாம் கூட்டுகிற தொழிலையும் செய்தார். இரண்டையும் தெய்வ வழிபாடாகவே அவர் கருதினுர்.

அடிப்படைக் கருத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தொழிலில் வேற்றுமை உண்டு. அதை முன்னிட்டு உயர்வு தாழ்வு என்கின்ற பேதபுத்தி வரலாகாது. சமூகத்துக்குப் பயன்படுகின்ற எல்லாத் தொழில்களையும் தேவாராதனையாகச் செய்து பழக வேண்டும். ஒரு மனிதன் எக்கருமத்துக்குத் தகுதியுடையவனுகப் பிறந்திருக்கின்ருனே, அல்லது பயிற்சி பெற்றிருக்கின்ருனே அது அவனுடைய சுதர்மம் ஆகும். அவனுடைய ஜாதிக்கேற்றது என்றும் பகரலாம். அத்தொழிலை நிறுத்திவிடலாகாது. முறையாகக் கையாண்டால் தெய்வத்தை அடைவதற்கு உற்ற சாதனமாக அத்தொழில் அமைகிறது. இப் பேருண்மையைப் பரமஹம்ஸரும் மஹாத்மா காந்தியும் தங்களுடைய வாழ்க்கையில் புகட்டியிருக்கின்ருர்கள்.

**கேள்வி: (48)** அனுஷ்டான வேதாந்தத்தில் 'கற்பனைத் தேவதைகளை நோக்கி நீ விண்ணப்பிப்பதும் அழுவதும் குருட்டு நம்பிக்கையென நீ மனமார அறிவாய்' எனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சிஷ்யர்களுக்கு அவரவர் வழிபடும் தெய்வத்திடம் அழுது புலம்பி வரம் கேட்கும்படியாகப் பகர்ந்துள்ளார். இவ்விரண்டும் முரண்பாடுடையனவாகத் திகழ்கின்றனவே!

*அனுஷ்டான வேதாந்தம் விவேகானந்தர் புகட்டியது. அதில் வரும் கோட்பாடுகள் முழுதும், ஞான சாதனங்களாகும். பரமஹம்ஸருடைய உபதேச மொழி பக்தி சாதனமாகும். தூய ஞானமும் தூய பக்தியும் ஒன்று என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும் விவேகானந்தருக்கும் ஒப்பமுடிந்தது. சாதனத்தின் ஆரம்பதசையில் இரண்டும் முரண்படுவனபோன்று தென்படலாம். உண்மையில் முரண்பாடு இல்லை. இங்கே கற்பனைத் தெய்வம் என்று சொல்லப்படுவது சொர்க்கம்போன்ற தொலைவில் உள்ள லோகங்களில் வீற்றிருக்கும் தெய்வங்களைக் குறிப்பதாகும். பக்தன் ஒருவன் தன் உள்ளத்தையே கோயிலாகக் கருத வேண்டும். தெய்வம் அதனுள் வீற்றிருப்பதாக உணரவேண்டும். ஞானி ஒருவன் தான் தனது என்பதை அறவே மறந்துவிட வேண்டும். இதுதான் பக்திக்கும் ஞானத்துக்கும் உள்ள தொடர்வு. நமக்கு அன்னியமாகப் புற உலகில் எங்கேயோ இருந்து நமக்குத் துணைபுரிவதற்கு தெய்வம் வரவேண்டும்*

என்று எண்ணுவதெல்லாம் வெறும் கற்பனையாகும். அத்தகைய கற்பனை வேண்டாம் என்பதே கோட்பாடு. எங்கும் நிறை தெய்வம் நம் மனத்தகத்து இருக்கிறது என்று உணரவேண்டும்.

**கேள்வி: (49)** உயிர்போன உடலை அப்புறப்படுத்துவதில் பொதுவாக இரு முறைகள் கையாளப்படுகின்றன. தகனம் செய்வது ஒன்று, புதைப்பது மற்றொன்று. எப்படிச் செய்தாலும் அப்புறப்படுத்துவது என்பது தான் நோக்கமா, அல்லது செய்யும் முறைகள் ஒவ்வொன்றிலும் ஏதேனும் கருத்து உண்டா? சன்னியாசிகளையும் ஞானிகளையும் அடக்கம் செய்வதுதான் முறை என்று ஒரு கோட்பாடு உளதே, அதன் கருத்து என்ன? சுவாமி விவேகானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இவர்களுடைய சடலத்தை எரித்ததாக வரலாறுகள் கூறுகின்றனவே, இதற்கு ஏதாவது சமாதானம் இருந்தால் தெரிவிக்க வேண்டுகிறேன்.

பிரேதங்களை அப்புறப்படுத்துதலில் சில முறைகள் இருக்கின்றன. அம்முறைகளுக்கு அடிப்படையாக அந்தந்த நாட்டின் மதக்கொள்கை ஒரு முக்கியமான காரணமாகிறது. பிணத்தைத் தகனம் பண்ணுவது பொதுவாக இந்தியாவில் நிகழும் நிகழ்ச்சியாகும். அதற்கு இந்திய மக்கள் இரண்டு காரணங்கள் கூறுகின்றனர். தேகம் மனிதனுடைய முக்கியமான அம்சம் அல்ல. அவன் அணிந்திருக்கும் சட்டைக்குச் சமானமானது அது. கிழிந்துபோன சட்டைக்கும் அதை அணிந்திருந்த மனிதனுக்கும் பிறகு

எந்தவிதமான தொடர்வும் கிடையாது. உடலும் அத் தகையதே. உடலைவிட்டு ஆத்மா பிரிந்துகொண்டது என்று நாம் பகர்கிறோம். சரீரத்தை விட்டு ஜீவன் விலகிக்கொண்டான் என்பதே அதன் பொருள். இந்தியர் கொள்கைப்படி ஆத்மா முக்கியமானது. ஆத்மா எடுக்கும் சரீரம் ஆத்மாவுக்குப் பயன்படுகிற அளவே மதிப்பைப் பெறுகிறது. பிணமான பிறகு அதை ஏதேனும் ஒருவிதத்தில் அப்புறப்படுத்தியாக வேண்டும்.

தகனம் பண்ணுவதே சிறந்த முறை. பூமியில் புதைப்பது சில வேளைகளில் ஆரோக்கியத்துக்கு ஒவ் வாதது. பூமியில் ஊறிச்செல்லும் நீர் சில வேளை களில் அழுகிப்போகும் பிணத்தில் பட்டு கிணறு, கேணிகளுக்குப் போகக்கூடும். அது மாசுபடிந்த நீர் ஆகும். பெரிதும் அத்தகைய சம்பவத்தைத் தடுப் பதற்கே சவத்தைச் சுட்டுவிடுகின்றனர். இம்முறை சிறந்தது என்று இன்றைக்கு மேல்நாட்டு அறிஞர் ஒத்துக்கொள்கின்றனர். இந்நாளில் அமெரிக்கா போன்ற இடங்களில் மின்சக்தி யடுப்பில் சவத்தை இட்டு விரைவில் சாம்பலாக்கிவிடுகின்றனர்.

சில மதஸ்தர்கள் உடலும் உடலுக்குள்ளே இருக்கும் உயிரும் இணைபிரியாத இரண்டு பகுதிகள் என்று கருதுகின்றனர். உடலுக்கு ஏதேனும் கேடு வந்துவிட்டால் அது உயிரையும் தாக்குகிறது என் பது அவர்களது கொள்கை. உடலை நன்றாகப் பாது காத்து வைத்திருக்குமளவு உயிரும் இன்புற்றிருக்

கும் என்று அவர்கள் எண்ணுகின்றனர். அக்கொள்கைக்கு ஒப்பவே பிரேதத்தைப் பெட்டியில் அடக்கம் பண்ணுவதும், கல்லறையில் வைப்பதும் அவர்களுக்கிடையில் வழக்கத்தில் இருந்துவருகிறது. யூத மதத்தையும், கிறிஸ்தவ மதத்தையும், இஸ்லாமிய மதத்தையும் பின்பற்றுகிறவர்களுக்கு இது ஒப்ப முடிந்த கொள்கையாகும். அவர்கள் பிரதேசத்தில் விறகு ஏராளமாய் இல்லை. நீர்ப்பெருக்கும் அதிகம் கிடையாது. ஆகவே, அவர்கள் பிணங்களைப் பெட்டியிலும் கல்லறையிலும் வைப்பதில் சுகாதாரக் கேடு அதிகம் கிடையாது. பின்பொரு காலத்தில் இதே சரீரத்தில் உயிர்கள் திரும்பவும் எழுந்திருக்கும். அப்பொழுது அவர்களுடைய வினைப்பயன் இறைவனால் தீர்ப்பு செய்யப்படும் என்று அவர்கள் கருதும் மதக் கொள்கை ஆதரவற்றது.

இந்தியாவில் ஞானிகளையும் யோகிகளையும் பொதுவாக தகனம் செய்வதில்லை. சரீரத்தை ஒதுக்கிவிட்ட யோகி ஒருவேளை ஜட சமாதியில் இருக்கலாம். ஆதலால் அதை அழித்துவிடலாகாது என்னும் நம்பிக்கை இந்திய மக்களுக்கு உண்டாயிற்று. ஞானி ஒருவன் பரிபூரண நிலையடைந்து பரத்தில் கலக்குங்கால் அவனுடைய பிரேதமும் ஒருவிதமான புனிதத்தைப் பெறுகிறது. அதைப் பூமியினுள் பாதுகாத்து வைத்து அதன் மூலம் மறைந்தவர்க்கு வந்தனை வழிபாடு செய்வது தகும் என்னும் நம்பிக்கையுடன் சன்னியாசியினுடைய சரீரத்தைத் தகனம்

செய்யாது புதைத்தார்கள். அது நம் நாட்டில் தோன்றிய ஒரு ஐதிகமாகும். ஆனால் அவ் ஐதிகத்தைப் புறக்கணித்து விடுதலில் குற்றம் ஒன்றுமில்லை. எக்காலத்திலும் காசியில் துறவியின் உடலத்தைக் கல்லைக்கட்டி கங்கைக்குள் போட்டுவிடுகின்றனர். அது அவ்வூர்க்கேற்ற ஐதிகமாகும். இத்தகைய ஐதிகங்களில் மிகைப்பட்ட பற்றுதல் வைக்கவேண்டியது அவசியமில்லை என்பதை நமக்கு ஞாபகமூட்டுதற்கே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் போன்ற பெரியார்களது யாக்கைகள் எரிக்கப்பட்டன.

பாரசீகர்களுக்கிடையில் பிரேதத்தை அப்புறப்படுத்துவதற்கான முறை ஒன்று உண்டு. ஒரு ஸ்தம்பத்தின்மீது அவர்கள் பிரேதத்தை உயர எடுத்துச்சென்று வைத்துவிடுகின்றனர். சில மணி நேரத்துக்குள்ளாக கழுகுகள் அப்பிணத்தைத் தின்று முடித்துவிடுகின்றன. எலும்புகள் மட்டும் கீழே விழுந்துவிடும். அவைகளை மண்ணில் போட்டுப் புதைத்துவிடுவார்கள். செத்த பிணம் வீண் போவதற்குப் பதிலாக மற்ற உயிர்களுக்குப் பயன்படட்டும் என்பது அவர்களுடைய கொள்கையாகும். பிரேதத்தை அழிப்பதற்கு இத்தனைவித முறைகள் இருக்கின்றன. இடத்திற்கேற்றவாறு இவைகளுள் எம்முறையை வேண்டுமானாலும் கையாளலாம். இவைகளால் குணமோ, தோஷமோ, சுகாதார முறைக்கப்பால் வேறு எதுவும் இல்லை. பொதுப்படத் தகனம் பண்

ணுவதே சிறந்தது என்கிற முடிவுக்கு நாம் வரலாம். கொள்கைக்கு ஏற்ப ஞானியர்கள் உடலைத் தகனம் பண்ணலாம் அல்லது சமாதியில் வைக்கலாம்.

**கேள்வி : (50)** ஜாதகம் கணிப்பதில் ஏதேனும் பொருள் உண்டா? ஒரு ஜீவன் உலகில் ஜனித்ததும் ஜாதகம் கணிக்கப்படுகிறது. அந்த ஜாதகத்தை வைத்துக் கொண்டு அந்த ஜீவன் உலகில் எப்பாங்கில் உயிர் வாழ்வான் என்று கூறப்படுகிறது. பிராரப்த கர்மத்தை மாற்ற எவர்க்கும் இயலாது என்றும் சொல்லப்படு கிறது. இது உண்மையென்ருல் மனிதப் பிரயத்தனத் தில் பயன் ஒன்றும் இல்லை என்கிற முடிவுக்கு வந் தாகவேண்டும். முன்னேற்றத்துக்கோ பிற்போக் குக்கோ மனிதன் பொறுப்பாளியல்ல என்றும் வெளி யாகிறது. பிறகு மானுட முயற்சிக்கு இடமெங்கே?

*ஜாதகத்தைப்பற்றிய சாஸ்திரத்தில் பெரிதும் உண்மை உண்டு. ஒரு ஜீவன் பிறக்கின்ற நேரத்தைச் சரியாகக் கணித்தால் அந்த நேரத்தில் எந்தெந்த கிரகம் எந்த வீட்டில் இருக்கிறது என்பதை அத் தகைய கணித சாஸ்திரிகள் கண்டுபிடித்து விடுவார் கள். கிரகங்களுக்கிடையிலுள்ள தொடர்வையும் அதற்கு ஏற்றபடி கிரகபலனையும் கூறுவது ஜோதிட சாஸ்திரம் என்னும் பெயர் பெறுகிறது. ஜோதிடன் ஒருவன் கிரகங்களின் இருப்பிடத்தில்தான் முழுக் கருத்தைச் செலுத்துகிருன். இயற்கையில் உண்டா கிற இத்தகைய அமைப்பைத் தீர்க்கதரிசிகள் ஆழ்ந்து ஆராய்ந்தார்கள். இத்தகைய ஆராய்ச்சியின்*

விளைவாக அவர்கள் கண்டறிந்த உண்மை ஒன்று உண்டு. கிரகங்கள் மாறி அமைவதால் எந்த வேளையில் எத்தகைய கிரக பலனை உண்டுபண்ண வல்லவைகளாக அவைகள் அமைகின்றனவோ அவ்வேளையில் பிறக்கின்ற ஜீவனுக்கு அத்தகைய கிரக பலன் வினைப்பயனாக அமைகிறது.

ஜீவனுக்கு அமைந்த வினைப்பயன் கிரகங்களால் உண்டுபண்ணப்பட்டதன்று. தன்னுடைய பிராரப்த கர்மமாக அது அமைகிறது. எத்தகைய சுகத்தையும் துக்கத்தையும் அனுபவிப்பதற்கு ஏற்றவனாக அவன் பிறந்திருக்கின்றானோ அது அவனுடைய பிராரப்த கர்மம். முற்பிறப்பில் தன் முயற்சியால் அவன் தனக்குத்தானே தேடிக்கொண்டது அது. இப்பிறப்பில் முறை பிறழாது அது பலன் கொடுக்க ஆரம்பிக்கிறது. இவனுடைய வினைப்பயனுக்கும் கிரகங்களால் உண்டாகும் பயனுக்கும் தொடர்வு இயல்பாக ஏற்படுகிறது. இயற்கையிலுள்ள ஆகர்ஷண சக்தி போன்றது இது. இரண்டு கோளங்கள் ஒன்றை ஒன்று கவர்ந்து இழுப்பது ஆகர்ஷண சக்தி என்னும் பெயர் பெறுகிறது. அதே விதத்தில் கிரக பலன் என்பதும் ஒரு ஜீவனுடைய பிராரப்த கர்மமென்பதும் ஒன்றோடொன்று இணக்கம் காட்டுகின்றன. அதிலிருந்து மற்றோர் உண்மையும் புலப்படுகிறது. எந்த ஜீவன் எத்தகைய கர்மபலனை அனுபவிக்கத் தகுதியுடையவனாகின்றானோ அத்தகைய கிரகபலன் அமைகின்ற வேளையில் அவன் பிறப்

பெடுக்கின்ருன் என்று வெளியாகிறது. ஆகவே, கிரகங்களின் இயக்கத்துக்கும் மனிதனுடைய கர்ம பலனுக்கும் தொடர்வு இருக்கிறது என்பது புலப்படு கிறது.

கிரகங்கள் மனிதனை ஒருவிதச் சூழ்நிலையில் வைத்துவிட்டது என்பது உண்மையல்ல. அவனுடைய பிராரப்த கர்மமே அதற்கேற்ற சூழ்நிலையில் அவனை வைக்கிறது. பிராரப்த கர்மத்தை நாம் தெரிந்துகொள்ள முடியாது. ஞானிகள் தெரிந்து கொள்வார்கள். பிராரப்த கர்மத்துக்குப் பதிலாக கிரகபலன் என்கின்ற ஒரு கோட்பாட்டை ஜோதிட சாஸ்திர மூலமாகத் தெரிந்துகொள்ள நமக்கு இயலும். வாஸ்தவத்தில் ஜோதிடன் சொல்லுவது கிரகபலன். அது அந்த ஜாதகனுடைய பிராரப்த கர்மத்தையும் பெரிதும் விளக்கிவிடுகிறது.

பிராரப்த கர்மத்துக்கு மாற்றுத் தரவோ, வேகத்தை அதிகப்படுத்தவோ, தடுக்கவோ மனிதனுக்கு இயலும். அவ்வளவு தூரம் அவனுக்கு இச்சா சுதந்தரம் உண்டு. ஆகையினுலேதான் ஜோதிடம் பகர்வது முற்றிலும் மெய்யாவதில்லை. ஏகதேச உண்மையை அதில் காணலாம். ஒவ்வொரு மனிதனும் ஜோதிட சாஸ்திரத்தில் வைக்கின்ற கருத்தை விட அதிகப்படியான கருத்து தன் முயற்சியிலும், ஈசுவர அனுக்கிரகத்திலும் வைப்பது அவசியம்.

எறும்புகள் வளையிலிருந்து தீனியைத் தூக்கிக் கொண்டு வீட்டின் மேல்பகுதிக்கு ஏறிச் சென்ருல்

*மழை வரும் என்கின்றோம். மழை வருவதை இயற்கையாக உணர்ந்த எறும்பு பாதுகாப்புக்காக அப்படிப் போகிறது. அதை ஆராய்ந்து உணர்ந்தவர் எறும்பின் செயலுக்கும் இனி வரப்போகும் மழைக்கும் தொடர்வு கண்டனர். எறும்பு மேலேறுவதால் மழை வருவதல்ல, தன்னைக் காக்க அது மேலே ஏறுகிறது. இனிவரும் மழைக்கு அது அறிகுறியாகிறது. அங்ஙனம் தன் வினைப்பயனையே மனிதன் அனுபவிக்கிறான். இயற்கையில் கிரகங்களின் அமைப்பு அதற்கு விளக்கமாக அமைந்திருக்கிறது. அதற்கு மேல் மனிதனுடைய வாழ்க்கை முறையை மாற்றும் வல்லமை கிரகங்களுக்குக் கிடையாது. தன் முயற்சியால்தான் தன் வினையை அவன் மாற்றிக் கொள்கிறான். பழைய வினைப்பயனுக்கு ஏகதேசம் விளக்கமாகக் கிரகங்கள் அமைகின்றன.*

**கேள்வி : (51)** சுயப்பிரயத்தனம் எதுவும் இல்லாது இரு; உதிர்ந்த சருகு காற்றடித்த பக்கம் எடுத்துச் செல்லப்படுவது போன்று யதிருச்சையாக அமையும் சூழ்நிலையில் நீ இரு, என்னும் கோட்பாடு சாஸ்திரத்தில் இருக்கிறது. பெருமுயற்சி எடுத்துக்கொள்: ஓயாது உழைத்து வா, என்னும் கோட்பாடும் சாஸ்திரத்தில் இருக்கிறது. ஈசுவர பராதீனமாக இருத்தலும் சுய முயற்சியும் முரண்படுகின்றனவே ? அகங்காரம் தலையெடுக்காவிடில் முயற்சியே சாத்தியமில்லையே? முரண்படும் இவ்விரு கோட்பாடுகளுக்கிடையில் சாதகன் என் செய்வது ?

பிரபஞ்சத்தில் நிகழும் நிகழ்ச்சிகள் யாவும் உண்மையில் ஈசன் செயலே. கேடு நிறைந்தவை களாகத் தென்படும் செயல்களிலும் அவனுடைய திட்டம்தான் நிறைவேறுகிறது. ஓர் அணுவும் அவனுடைய ஆணையின்றி அசைவதில்லை. இதுவே இயற்கையைப்பற்றிய முடிவான உண்மை. ஆனால் அக்ஞானத்திலிருக்கும் நமக்கு இவ்வுண்மை விளங்காது. அக்ஞானமும் அகங்காரமும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. அக்ஞானம் உள்ள இடத்தில் அகங்காரம் இருக்கிறது. அகங்காரம் உருவெடுத்திருப்பது அக்ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு. அகங்காரம் பிடித்துள்ள ஜீவனுக்குத் தனது முயற்சியே முதல் காரணமாகத் தோன்றுகிறது. அப்படி அவனுக்குச் சுய முயற்சி முக்கியமானதாகத் தோன்றிக் கொண்டிருக்கும்பொழுது முயற்சியைக் குறைத்துவிடலாகாது. பெரு முயற்சி உடையவனாகவே இருந்து வரவேண்டும். தான் விரும்பும் அரும்பெரும் செயல்களையும் சாதித்தல் பொருட்டு ஊக்கம் எடுத்துக்கொள்ளுதல் அவசியம்.

செய்கின்ற எல்லாச் செயல்களும் தனக்குப் பயன்படுபவை போன்று பிறர்க்கும் பயன்பட வேண்டும் என்னும் உணர்ச்சி இருப்பது முற்றிலும் அவசியம். ஏனென்றால் பலர்க்குப் பயன்படும் செயலே நல்வினையாகிறது. நீடித்த நலனை அளிக்க வல்லதும் அதுவே. தன் அகங்காரத்தை முதன்மையாகக் கொண்டிருப்பதற்கிடையில் பலருடைய நல

னில் எண்ணம் வலுத்து வருகின்றவளவு அம் மனிதனுடைய உள்ளம் தூயதாகிறது. தூய கண்ணடியில் பிம்பம் நன்றாகத் தென்படுவது போன்று தூய உள்ளத்தில் உண்மை நன்கு புலப்படுகிறது. இயற்கையின் நடைமுறையைப்பற்றிய உண்மையை அறிய வல்ல மனதுக்கு அகங்காரத்தைப்பற்றிய உண்மையும் விளங்குகிறது. ஒவ்வோர் உயிரும் ஒவ்வோர் அகங்காரத்தின் ஸ்தூல தோற்றமாகும். பிறகு அகங்காரங்களின் தொகையைப் பேரகங்காரம் எனலாம். கடலில் உள்ள அலைகளின் தொகையைக் கடல் என்று சொல்லுதற்கு இது ஒப்பாகும். கடலுக்கு அன்னியமாக அலைகளிருக்க முடியாது. பேரகங்காரமாகிய படைப்புக் கடவுளுக்கு அன்னியமாக உயிர்கள் இருக்க முடியாது. இவ்வுயிர்கள் ஒன்றை ஒன்று தாக்குகிற கிருத்தியங்களைச் செய்தாலும் பேரமைப்பில் அவையாவும் தக்க இடம் பெற்றிருக்கின்றன. அரசாங்கத்தின் நடைமுறையில் குற்றவாளிகளைத் துன்புறுத்துகின்ற கூட்டத்தார் இருக்கின்றனர். நோயாளிகளுக்குத் துன்பம் தருவது போன்று நலம் தரும் கூட்டத்தார் இருக்கின்றனர். கல்வி பயிலுகிறவர்களுக்கு உபத்திரவம் தருவது போன்று நல்லுணர்வை ஊட்டுபவர் இருக்கின்றனர். இத்தனைவிதச் செயல்களும் அரசாங்கம் என்பதில் அடங்கியிருக்கின்றன. இறைவனுடைய ஆட்சியிலும் இங்ஙனம் எல்லா உயிர்களும் இடம் பெற்றிருக்கின்றன.

அரசாங்க அலுவல்களில் நன்கு தேர்ச்சி பெற்ற ஒருவன் தனக்காகவென்று தனி உத்தியோகம் எதையும் வைத்துக்கொள்ளுதல் இல்லை. அப்போதைக்கப்போது அவனுக்கு இடப்படும் வெவ்வேறு அலுவல்களை அவன் திறம்படச் செய்து சாதிக்கிறான். அனுபவத்தின் முதிர்ச்சியால் அத்தகைய ஆற்றல் வருகிறது. இறைவனுடைய பேரமைப்பை அறிகிற ஆத்மசாதகன் அத்தகையவன். உதிர்ந்து கிடக்கும் சருகு போன்று அவன் ஆணவ அகங்காரமற்று இருக்கின்றான். காற்று அடித்த பக்கம் சருகு தூக்கிச்செல்லப்படுகிறது. அகங்காரமற்ற அறிஞன் இறைவன் கையில் தகுந்த கருவியாய் விடுகின்றான். தனக்கென ஒரு செயலும் அவன் வைத்துக்கொள்ளுதல் இல்லை. ஆயினும் அவன் மூலம் நிகழ்கின்ற செயல்கள் யாவும் இறைவனுடைய செயல்களாம்.

இங்ஙனம் அகங்காரம் இருக்கும் பரியந்தம் தன் முயற்சி வேண்டும். தன் முயற்சியில் பொதுநலத்துக்குரிய செயல்களையே செய்யவேண்டும். அப்படிச் செய்பவர் மனது தெளிவடைகிறது. தெளிந்த மனமுடையவன் எல்லா உயிர்களையும் பேருயிர் ஒன்று ஆட்டி வருகிறதென்று உணருகிறான். இங்ஙனம் ஆத்ம வளர்ச்சியிலுள்ள படித்தரங்களை ஓர்ந்து உணர்ந்தவர்க்குச் சுயப்பிரயத்தனத்திலும் ஈசன் செயலிலும் முரண்பாடு இல்லை என்பது புலப்படும்.

**கேள்வி:** (52) அழியும் தன்மைத்தாய இவ்வுடம்பே அழியா உடம்பாக இருக்க முடியுமென்றும், நரை திரை மூப்பு

சாக்காடு ஆகிய இவை இவ்வுடம்பைச் சார்ந்தன அல்ல வென்றும் கூறப்படுகிறது. மேலும் காந்தியடிகள், பகவான் இராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், மகரிஷி ரமணர் முதலியவர்களின் தேகம் நோய் வாய்ப்பட்டு அழிந்துபட்டன; ஆனால் இராமலிங்க அடிகள் இக்கூட்டத்தைச் சார்ந்தவர் அல்லரென்றும், அவர் இத்தேகத்தையே நித்திய தேகமாக்கி வாழ்கிரு ரென்றும் கூறப்படுகிறது. இதற்குச்சான்று அருட் பாவிலுள்ள கீழ்க்கண்ட அடிகள் காட்டப்படுகின்றன.

"வையகத்தே யுறுமரண வாதனையைத் தவிர்த்த வாழ்க்கையதே வாழ்க்கையெனமதித்ததனைப்பெறவே மெய்யகத்தே விரும்பியிங்கே வந்திடுமின்," "சாவையும் பிறப்பையுந் தவிர்த்திட விரும்பீர்," "தப்பாலே சகத்தவர் சாவேதுணிந்தார் தாமுள நாண நான் சாதலைத் தவிர்ந்தே எப்பாலு மெக்காலு மிருத்தலே பெற்றேன்."

வள்ளலார் அழியா உடம்புடன் வாழ்கிருர் என்று கூறுதல் நம்பத்தக்கதா?

*மனிதனுடைய சொரூபத்தில் மூன்று பகுதிகள் இருக்கின்றன. அவைகளை உடல், உள்ளம், உயிர் எனப் பகரலாம். வேதாந்த பரிபாஷையில் இம் மூன்று பகுதிகளும் முறையே ஸ்தூல சரீரம், சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் எனப் பெயர்பெறுகின்றன. இம்மூன்றுக்கும் சரீரம் என்பது பொதுப் பெயர். சரீரம் என்னும் கருவியின் வாயிலாகவே சரீரி ஆகிய ஆத்மா இலங்குகிறது. சரீரத்தைப்பற்றியும் அத*

னுள் வீற்றிருக்கும் ஆத்மாவைப்பற்றியும் தெளிவுபட ஆன்றோர்கள் விளக்கியிருக்கிறார்கள். அவர்கள் விளக்கியிருப்பதை எல்லோரும் சுவானுபூதியிலும் தெரிந்து கொள்ளலாம். சுவானுபூதியில் தெரிந்து கொள்ளும்வரை இக்கோட்பாடு வெறுமனே நம் பிக்கைக்குரியதாகும். யுக்தியாலும் ஏகதேசம் அதைப் பற்றித் தெரிந்துகொள்ளலாம்.

எது ஓயாது ஜீரணமாகிக்கொண்டிருக்கிறதோ அது சரீரம். எது ஓயாது தகனமாய்க் கொண்டிருக்கிறதோ அது தேகம். தேகம் நித்தியவஸ்து அல்ல என்பது ஆன்றோர் வாக்கு. நித்தியமல்லாததை நித்தியமாக்க முடியுமென்று இதுவரையில் யாரும் பகர்ந்ததில்லை. அப்படிச்செய்து காட்டியதும் கிடையாது. அக்ஞானத்தில் இருக்கும் மனிதனுக்கு அநித்தியமாயுள்ள சரீரமே நித்தியமானதாகப் புலப்படுகிறது. அவன் சரீரத்துக்கே முதன்மை ஸ்தானம் கொடுக்கிறான், சரீரத்தின் மூலம் வருகிற இன்ப துன்பங்களே முக்கியமானவைகளாக அவனுக்குத் தோன்றுகின்றன. சரீரத்துக்குள்ளிருக்கும் ஆத்மாவைப்பற்றிக் கேள்விப்பட்டவர் மிகச் சிலர். கேட்டதைச் சிந்தித்துப் பார்த்தவர் அதை விடச் சிலர். சிந்தித்துப் பார்த்துத் தெளிவடைந்தவர் இன்னும் மிகமிகச் சிலரேயாவர்.

தேகத்தை முக்கியமான வஸ்துவாக மதிப்பிடுபவர் அது அழிந்து பட்டுப்போகாது இருக்க வேண்டும் என விரும்புகின்றனர். இந்த விருப்பத்தின்

விளைவாகவே காயகற்பம், காயசித்தி முதலிய சாஸ்திரங்களும் தோன்றியிருக்கின்றன. தேகத்தை நெடுநாள் பாதுகாத்து வைக்கமுடியும். அப்படி அதைப் பாதுகாத்து வைத்த பெரியார்கள் பலர் இப்பாரினுள் இருந்திருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது அவர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லுதற்குப் பிரமாணம் இல்லை. ஸ்தூலசரீரத்திலும் வலிவு படைத்தது சூக்ஷ்ம சரீரம். அதைவிட வலிவு படைத்தது காரண சரீரம். இக்காரண சரீரம் அக்ஞானத்தில் தோன்றியது. ஞானோதயம் வரும்பொழுது அக்ஞானம் இருக்குமிடம் தெரியாது மறைந்துபோய் விடுகிறது. சூரியோதயத்தில் இரவு இருக்குமிடம் தெரியாது மறைந்து போதற்கு அது ஒப்பாகிறது. மூன்று வகைகளாகப் பிரிந்துள்ள இச்சரீரமே நினைவின் தோற்றம் என்பது கோட்பாடு. நினைவு மாறுதற்கு ஏற்ப சரீரம் மாறுகிறது. அதைத்தான் பிறப்பு இறப்பு என்கின்றோம். நினைவு அற்றநிலை ஆத்மாவுக்கு உண்டு. அப்பொழுது அதற்கு சரீரம் இருக்கவேண்டியது அவசியமல்ல. ஒரு சான்றின் மூலம் இதை விளக்குவோம். நமது நிழல் பூமியில் படுகிறது. நிழலுக்கு முதல் காரணம் நாமும் நம்மை விளக்குகிற சூரியனும். அதிகாலையில் நிழல் நீண்டு இருக்கிறது. உச்சி வேளை வரும்பொழுது நிழல் குறுகி மறைந்து விடுகிறது. நிழல் இருப்பதால் ஆளின் சொரூபத்துக்கு அதிக மதிப்பு இருக்கிறதென்றும், நிழல் மறையும்பொழுது ஆளின்

சொரூபம் குறைந்துபட்டுப் போய்விட்டது என்றும் சொல்லுவது ஒவ்வாது. நிழல் போன்றதே இவ்வுடல். இதற்கப்பாலுள்ள நிலையை நாம் நாடி வருகிறோம்.

உடலில் இருக்கும்பொழுது ஞானிக்கு உடலில் அபிமானம் இல்லை. முதிர்ந்த ஞானிக்கு உடல் இருப்பதைப்பற்றிய ஞாபகமும் இல்லை. அத்தகைய உடலை யாரேனும் ஒருவர் பாதுகாத்து வைத்திருக்கிறார் என்றால் அவர் உடலபிமானம் உடையவர் என்று பொருள் படுகிறது. உடல் அபிமானம் உடையவர் அக்ஞானிகள். வள்ளலார் தம் உடலைப் பாதுகாத்து வைத்திருக்கிறார் என்று நம்புகிறவர்கள் மறைமுகமாக அவரை அக்ஞானி என்று பகர்கிறார்கள். ஹடயோகிகள் நெடுநாள் உடலை வைத்திருப்பது போன்று அவரும் வைத்திருக்கிறார் என்றால் அவ்வுடலுடன் தம்மை அவர் மற்றவர்களுக்கு ஏன் காட்டித்தரலாகாது? உயிர்களிடத்து அவர் பெருங்கருணை வைத்திருந்ததுதானே உடலில் வாழ்ந்திருந்த பொழுது மக்கள் அவரிடத்துக்கண்ட சிறப்பு ஆகும். சிறிது காலம் உடலின் மூலம் தம்மை விளக்கியவர் இப்பொழுதும் ஏன் அவர் தம்மை விளக்கிக்காட்டலாகாது? அவருடைய பாடல்களையெல்லாம் சிந்தித்துப்பார்த்தால் தேகாத்ம புத்தியைக் கடந்த நிலைக்கு அவர் பரிபக்குவம் அடைந்து வந்தார் என்பதே வெளியாகும். மற்றவர் கண்ணுக்குத் தென்படாது அவர் உடலை வைத்திருக்கிறார்

என்னும் கொள்கை யுக்திக்கும் அனுபவத்துக்கும் பொருந்தாது;அவருடைய சிறப்புக்கும் அது ஒவ்வாது.

**கேள்வி: (53)** போர்க்களத்தில் வீரமாகச் சண்டையிட்டு மரணமடைபவன் வீரசுவர்க்கமடைவான் என்பது பழங்காலக் கோட்பாடு. அதன்படி கொடிய பாபங்களைச் செய்த துரியோதனனும் மற்றும் அவனுடைய சகோதரர்களும் சுவர்க்கமடைந்தனரென்று மஹாபாரதம் கூறுகின்றது. இக்கோட்பாடு இக்கலிகாலத்திற்கும் பொருந்துமா? வாழ்வில் பல குற்றங்களைச் செய்து யுத்தத்தில் சேரும்படி நேர்ந்து மரணமடைந்தால் அவன் சுவர்க்கமடைகிருனு?

*சுவர்க்கம் அல்லது நரகப் பிராப்தி எல்லா மனிதர்க்கும் அவரவர் வினைப் பயனுய் வந்து அமைகிறது. வினைப்பயனுக்கும் மனநிலைக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. நல்வினை செய்கின்றவர்க்கு நல்ல மனப்பான்மை. இக்கோட்பாட்டை இன்னொரு விதத்தில் பகர்வதே முறை. அதாவது நல்ல மனமுடையவரிடம் உதிப்பதெல்லாம் நல்வினைகளாகும். மனநிலையை ஒட்டியே வினை நல்லது அல்லது கேடு உடையது ஆகிறது. மனநிலைக்கு ஏற்ப ஒருவன் சுவர்க்கத்தில் அல்லது நரகத்தில் இருக்கிருன். பாபபுண்ணியத்துக்கு மனதே மூலகாரணமாகிறது. அங்ஙனம் சொர்க்க நரகத்திற்கும் மனதே மூலகாரணமாகிறது. மனம் எப்படியோ புற உலகம் அப்படி ஒருவனுக்குக் காட்சி கொடுக்கிறது. இது எக்காலத்துக்கும் உரிய உண்மையாகும்.*

போர்க்களத்தில் வீரனுகப் போர் புரிகின்றவன் வீரசுவர்க்கமடைகிருன் என்பதும் எக்காலத்துக்கும் உண்மை. ஆனல் போர்க்களத்துக்குப் போகின்றவர்கள் எல்லாரும் வீரமாகப் போர் புரிகிருர்கள் என்று சொல்லுதற்கில்லை. அக்கிரமத்தை அடக்குதல், துஷ்டர்களைத் துடைத்தல், நலத்தை நிலைநாட்டுதல் போன்ற உயர்ந்த லக்ஷியத்தின் பொருட்டு போருக்குப் போகின்றவனே வீரன் ஆகின்ருன். பேராசையால் தூண்டப் பெற்று பிறர் நாட்டையும் பொருளையும் அபகரிப்பதற்காகப் போருக்குப் போகின்றவன் வீரன் அல்லன். ஜீவனத்துக்கு வேறு வழி ஒன்றும் இல்லாது வெறும் சம்பளத்துக்காக வென்று படையில் தன்னைப் பதிவு செய்துகொள்கின்றவன் வீரனுகான். அறப்போர் என்ன என்பதும் அவனுக்குத் தெரியாது. வாங்கிக்கொண்ட சம்பளத்துக்காக ஏவப்பட்டபடி சண்டை செய்ய அவன் ஆயத்தமாய் இருக்கிருன். அத்தகையவனுக்கு வீராவேசம் உண்டாவதில்லை. போர் நடைபெற்றுக் கொண்டிருப்பதற்கிடையிலேயே தான் எப்படியாவது தப்பித்துக்கொண்டால் நலமாய் இருக்குமென்று மனதில் அவாவுறுகிருன். அத்தகையவன் வீரன் அல்லன். வீர சொர்க்கமும் அவனுக்குக் கிடையாது. சாவைப் பொருள்படுத்தாதவனும், உயர்ந்த லக்ஷியத்தை நிலைநாட்டப் போர் புரிந்தே ஆகவேண்டுமென்றும் எண்ணித் துணிகின்றவன் மரணத்துக்கு அஞ்சுதலில்லை. உயிர் வாழ்த

லும், மாய்தலும் அவனுக்கு ஒன்று. அந்த உயர்ந்த மனநிலையில் இருந்துகொண்டு உடலை உகுக்கின்ற வன் உண்மையாகவே வீரசொர்க்கம் பெறுகின்ருன். இது எக்காலத்துக்கும் பொருந்திய உண்மை. துரியோதனன் அக்கிரமத்தில் ஈடுபட்டான். அக்கிரம மாகப் போர் புரியவும் ஆயத்தமாய் இருந்தான். அத்தகைய அக்கிரமத்துக்கு இடந்தரலாகாது என் பது பாண்டவர்களின் கொள்கை. ராஜ்யத்தை அவர்கள் அதிகமாக விரும்பவில்லை. காலமெல் லாம் வனவாசம் செய்யவும் ஆயத்தமாய் இருந் தார்கள். ஆனல் அக்கிரமம் தலையெடுக்க இடங் கொடுப்பது அரசாள்பவர்களுடைய அறம் ஆகாது. அக்கிரமத்தை அடக்குதற்கே அவர்கள் அறப் போரில் ஈடுபட்டார்கள். இருதரத்தாரும் துணிந்து போர் புரிந்தார்கள்; அஞ்சாதும் போர் புரிந்தார்கள். அஞ்சாத மனநிலைக்கேற்ற வினைப்பயன் யாண்டும் உண்டு. துரியோதனன் முதலாயினேர் செய்த நல் வினை மிகக் குறைவு; தீவினையோ மிகைப்பட்டது. போரில் மடிந்தான பிறகு சிறுபான்மையான வினைப் பயனை முதலில் அனுபவித்துவிட்டுப் பெரும்பான் மையான வினைக்கு ஆட்படுவது பிறகு வந்தமை கிறது. அதே கோட்பாடு பாண்டவர்களுக்கும் ஏற்பட்டது. அறிந்தோ அறியாமலோ பாண்டவர் கள் செய்த் பாபச்செயல்கள் மிகக்குறைவு. புண் ணியச் செயல்கள் அளப்பரியவை. துரியோதனன் கூட்டம் தாங்கள் செய்த சிறிய நல்வினையின் விளை

வாகச் சொர்க்கத்தை முதலில் அனுபவித்தார்கள். போரில் மடிந்ததும் சொர்க்கத்துக்குப் போனதால் அதை வீரசொர்க்கம் என்றே பகரவேண்டும். புண் ணியம் தேய்ந்ததும் அவர்கள் நரகத்தில் இடர்ப் பட்டார்கள். பாண்டவர்கள் செய்த சிறிய பாபத் துக்காக நரகத்தைக் கண்ணால் பார்க்கவோ அல் லது அங்குச் சிறிது காலம் தங்கியிருக்கவோ ஏற் பட்டது. ஆக, அவரவர் வினைப்பயனை விட்டு யாரும் தப்பித்துக்கொள்ளவில்லை. வினையும் வினையின் விளைவாக வருகின்ற சொர்க்க நரகமும் மனநிலை யைப் பொறுத்தவை என்பதை ஏற்கனவே ஆராய்ந் தோம். நல்ல மனமுடையார்க்கு இம்மை மறுமை ஆகிய இருமையிலும் மேலான வாழ்வே. கெட்ட மனமுடையார்க்கு இருமையிலும் கீழ்த்தரமான வாழ்வே வந்து அமையும்.

ஒரு மனிதன் வாழ்க்கையில் அறியாமையினால் பல குற்றங்களைச் செய்யலாம். எப்பொழுதாவது அவனுக்கு விவேகம் உதயமாய்விட்டால் பிறகு அவன் நல்வாழ்வில் தீவிரமாகப் பிரவேசிப்பான். நல்வாழ்வைப் பற்றிய தீவிரமான உணர்ச்சி தீய வினைப் பயனைப் பெரிதும் அடக்கிவிடுகிறது. பிரா ரப்த கர்மத்தின் கேட்டை அவன் அனுபவித்தே ஆகவேண்டுமென்றாலும் அவன் பெற்றுள்ள புதிய மனநிலை அக்கேட்டைப்பொருள்படுத்தாதது ஆய்விடு கிறது. போருக்குப் போவதும் உயர்ந்த லக்ஷியத் தால் தூண்டப்பெற்றதாய் இருக்குமானால் அது

நல்வினையேயாம். வினைக்கேற்ற வினைப்பயன் என்னும் கோட்பாடு யுத்தத்தில் சேர்ந்தவனுக்கு வருகிறது. நல்ல மனப்பான்மையுடன் அவன் யுத்தத்தில் உடலை உகுப்பானாகில் அவனுக்கும் வீர சுவர்க்கம் உண்டு. பாண்டவர்க்கேற்பட்ட தாற்காலிகமான நரகவேதனை ஒரு வேளை அவனுக்கும் ஏற்படலாம். வினைக்கேற்ற வினைப்பயன் என்னும் கோட்பாட்டிலிருந்து யாரும் சிறிதளவும் தப்பித்துக்கொள்ளுதல் இல்லை.

**கேள்வி: (54)** இவ்வுலகில் அவனன்றி ஓரணுவும் அசையாது என்பது கோட்பாடு. அப்படியானால் ஜப்பானில் பியூஜியாம எரிமலைகள் அனல் கக்குவதும், அஸ்ஸாமில் பூகம்பத்தில் மக்கள் பாதிக்கப்பட்டதும் அவன் விருப்பமா?

இறைவனுடைய ஆணையால் பிரபஞ்சத்திலுள்ள செயல்களெல்லாம் நிகழ்கின்றனவென்றால் அச்செயல்களில் குறைபாடு இருக்கலாகாது; குறைபாடோடுகூடிய நடைமுறைகளை இறைவன் அமைத்துவைப்பது பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது என்னும் கருத்து இக்கேள்வியில் அடங்கியிருக்கிறது.

அணு இயங்குவதும் அவன் ஆணையாலே; அண்டங்கள் யாவும் இயங்குவதும் அவன் ஆணையாலே. ஆக, நிகழ்ச்சிகள் யாவும் அவனுடையவைகளேயாம். துன்பத்தை விளைவிக்கும் நிகழ்ச்சிகளை அவன் ஏன் அமைத்துவைத்தான்? குற்றமற்ற நடைமுறை

களை ஏற்படுத்திவைக்க எல்லாம் வல்ல இறைவனுக்கு இயலாதா? இப்படியெல்லாம் எண்ணிப் பார்க்க இயற்கை சந்தர்ப்பமளிக்கிறது.

இயற்கையின் நடைமுறையில் மூன்று படித்தரங்கள் இருக்கின்றன. அவைகளுள் நடுவில் உள்ள ஒரு படித்தரம் நம் அறிவுக்கு எட்டுகிறது. அணுப் போன்று நுண்ணிய அமைப்பில் உள்ள நடைமுறை நமக்கு எட்டுவதில்லை. அண்டங்களில் நிகழும் பெரு நிகழ்ச்சிகளும் நமக்கு எட்டுவதில்லை. நமக்கு எட்டாதவைகளைப்பற்றி யுக்தியால் ஆராய்ந்துவிட்டு நமக்கு எட்டும் பகுதிக்கு பிறகு வருவோம். மிகச் சிறிய உயிர் வாழ்க்கைகளுள் கொசுவின் வாழ்க்கையை எடுத்துக்கொள்வோம். நீர்ப்பெருக்கெடுக்கும் பருவத்தில் ஒரு காணி நிலத்தில் கோடிக்கணக்கான கொசுக்கள் உயிர்தரிக்கின்றன. அவைகளால் நமக்கு ஏற்படும் இன்னல்களை நாம் ஓரளவு அறிகிறோம். ஒரு பெருங்காற்று அடித்தால் இத்தனை கோடி உயிர்களில் பெரும்பகுதி செத்துப்போய்விடுகின்றன. இத்தகைய பெருவாரியான உயிர் நஷ்டம் இயற்கையில் ஏன் இருக்கவேண்டுமென்று நாம் எண்ணிப்பார்ப்பதில்லை. இன்னும் நாம் சுவாசிக்கும்பொழுது எண்ணிறந்த அணு உயிர்களைச் சம்ஹாரம் செய்கிறோம். அதைப்பற்றியும் எண்ணுவதில்லை. அண்டத்தின் நடைமுறையில் ஒவ்வொரு சூரியமண்டலம் ஒரு நொடிப்பொழுதில் அடிபட்டுப் போவதுண்டு. அதைக் கொடுமை என்றும் நாம் எண்ணு

வதில்லை. ஆக, மிகச் சிறு நிகழ்ச்சிகளிலும் மிகப் பெரிய நிகழ்ச்சிகளிலும் உள்ள கொடூரத் தன்மைகள் நம் அறிவுக்கு எட்டாது போய்விடுகின்றன.

பூமியின் மேல்தோல் போன்றிருக்கும் சுமார் ஐம்பது மைல் பகுதி ஆறிப்போய் நம் உயிர் வாழ்க்கைக்குத் தகுதியுடைய இடமாய் அமைந்திருக்கிறது. பூமியின் நடுவே சுமார் நாலாயிரம் மைல் தூரத்தை விட்டமாகக்கொண்ட உருண்டைப் பகுதி இன்னும் அக்னிக் குழம்பாக இருக்கிறது. சிற்சில வேளைகளில் அவ் அக்னிக் குழம்பில் சிறுபகுதி வெளித் தோன்றி வருகிறது. இதை எரிமலை என்கின்றோம். பூமியில் இன்னும் சில பகுதியில் ஆறிவருதல் என்னும் மாறுபாட்டை முன்னிட்டு பூமியினுள் அசைவு ஏற்படுகிறது; அதைப் பூகம்பம் என்கின்றோம். இதனால் மானுடர் பலர் மடிந்துபோவதுண்டு. நொடிப் பொழுதுதோறும் கோடிக்கணக்கான சிற்றுயிர்கள் மடிந்து வருவதோடு சீர்தூக்கினால் மனிதனுக்கு நிகழும் நஷ்டம் அவ்வளவு பெரியதன்று. அப்போதைக்கப்போது அண்டங்கள் அடிப்பட்டுப் போவதோடு சீர்தூக்கிப்பார்த்தால் மனிதனுக்கு ஏற்படும் கஷ்டம் கணக்கில் வாராத அவ்வளவு சிறியதாய் விடுகிறது. இத்தனை விதமான அழிவுகளுக்கும் இயற்கையின் நடைமுறையில் இடமுண்டு. ஆக்குதல் என்னும் நிகழ்ச்சி பொதுவாக மிக நிதானமாக அமைகிறது. நிலைபெற்றிருத்தலும் ஒழுங்குப்பாட்டுக்கு விளக்கமாக வந்தமைகிறது.

*அழித்தல் என்னும் செயலில் இரண்டு விதமான பகுதிகள் உண்டு. சிறிது சிறிதாகத் தேய்ந்து அழிதல் ஒருவிதக் காட்சி. நொடிப்பொழுதில் இருக்குமிடம் தெரியாது ஓர் அண்டம் துகள் துகளாக நொறுங்கிப் போய்விடுவது இன்னொருவிதக் காட்சி. ஆக்குதல், நிலைபெறச் செய்தல், அழித்தல் ஆகிய மூன்றும் இறைவனுடைய விளையாட்டு. இவ்விளையாட்டில் எரிமலைக்கும் பூகம்பத்துக்கும் இடமுண்டு. அவனுடைய பேரமைப்பை நாம் கருத்தில் வாங்கினால் நாம் இருப்பதைக் குறித்து மகிழ்வுற்றிருக்கவோ, இறப்பதைக் குறித்து மனம் நொந்து போகவோ இடமில்லை. ஜனன மரணத்தைக் கடந்துள்ள அவனுடைய பெருநிலையை உணர்ந்தால் தான் இருப்பது, இறப்பது ஆகிய இரண்டையும் கிரகிக்க முடியும். யாவும் அவனுடைய இயக்கமே.*

**கேள்வி : (55)** தபோவனக் கல்வித் திட்டத்தில் மாணவர் தம்முடைய மாணவ வாழ்வின் பெரும் பகுதியைப் பெற்றோரிடமில்லாது குருகுலத்தில் கழிக்கவேண்டுமென்ற ஏற்பாடு உள்ளது. இவ்வாண்டு ஆரம் 4, சித்திரை மீ இதழில் வெளிவந்த 'குருகுல முறையில் கல்லூரிப் படிப்பு' என்கிற தலையங்கத்திலும் கல்லூரி மாணவர் நான்கு ஆண்டுகள் விடுமுறைக்கும் கூட வீடு செல்லமாட்டார்கள் என்று எழுதப்பெற்றுள்ளது. இளம் வயதில் இவ்வாறு மாணவர் தமது பெற்றோர், உற்றோர் இனத்தாருடன் தொடர்வு அற்றுப்போனால், பின்னால் கல்லூரியினின்றும் திரும்பி வீடு வந்து அவர்

கள் வீட்டுப் பொறுப்பை ஏற்கும்போது குடும்பத்தின் பழக்க வழக்கங்கள், ஆசாரங்கள், தனிப்பண்பு இவற்றை அறியாமல் குடும்பத்தின் விசேஷத்தொழில் திறமை, கலைத்திறமை இவற்றையும் பெருமல், குடும்பத்தின் அமைப்பு முறையில் பொருத்தமாக அமைந்து கொள்ள முடியாது வேற்ருர்கள் போல் இருந்து விடுவாரோ என்ற ஐயம் ஏற்படுகிறது. தனித்தனிக் குடும்பங்களின் மூலம்தானே சமூகத்தின் நாகரிகமும் பண்பும் வாழையடி வாழையாக வரமுடியும்? குருகுலப் பயிற்சி, குடும்பப் பண்பின் தொடர்வு ஆகிய இரண்டும் கங்கையும் யமுனையும் போன்று மாணவருக்குக் கிடைக்குமாறு ஒரு திட்டம் வகுக்க மாட்டீர்களா?

*பிறப்பிலும் மிக்கது பயிற்சி*-**Nurture is greater than nature** — *என்ற ஆங்கிலப் பழமொழி ஒன்று உண்டு. சிறு வயதிலிருந்து இளைஞர் பெறுகின்ற பயிற்சி எத்தகையதோ அதற்கு ஏற்றவாறு அவர்களுடைய இயல்பு மாறியமைகிறது. எத்தகைய இயல்புகளுடன் அவர்கள் பிறந்தார்களோ அத்தகைய இயல்புகளையும் இளமைப் பயிற்சி பெரிதும் மாற்றிவிடுகிறது என்பது இதன் கருத்து. இதை முன்னிட்டே 'இளமையில் கல்' என்னும் கோட்பாடும் வந்துள்ளது. பழைய ஜன்மாந்திர வாசனையின் பயனாக எத்தகைய இயல்புகள் மனதிலே புதையப்பெற்றவர்களாக மக்கள் பிறந்திருக்கிறார்கள் என்பது நமக்குத் தெரியாது. பிறவிக் குணமாக மனதில் புதைந்திருப்பது நல்லது ஆனாலும் சரி,*

கெட்டது ஆனாலும் சரி அதைப் பயிற்சியால் பெரிதும் பண்படுத்திவிடலாம். நல்ல இயல்புடன் பிறந்தவனுக்கு நல்ல பயிற்சி மேலோங்குதற்குப் பேருதவி புரிகிறது. கெட்ட இயல்போடு பிறந்தவனுக்கும் நல்ல பயிற்சியால் பெருநன்மை ஏற்படுகிறது. கெட்ட இயல்பின் வேகத்தை நல்ல பயிற்சி குறைத்து விடுகிறது. ஆக, இளைஞர்களைப் பண்படுத்தும் செயலில் நம் கைவசம் இருப்பது பயிற்சி ஒன்றே. பூர்வ ஜன்மசம்ஸ்காரங்கள் அல்லது பிறவிக்குணம் என்பது நம் கைவசத்தில் இல்லை.

நல்ல பயிற்சி கொடுப்பதற்குச் சிறுவர்களின் சொந்த வீடுகள் சிறந்த சூழ்நிலையா, அல்லது கல்வி ஸ்தாபனங்கள் சிறந்த சூழ்நிலையா என்பது அடுத்த கேள்வி. அவரவர் சொந்த வீடுகளில் சிறுவர்கள் இன்புற்று வாழ்ந்திருக்கிறார்கள் என்பது உண்மை. வீடுகளினின்று அவர்களைப் பிரித்தெடுக்கும் பொழுது பெரிதும் அவர்கள் மனவேதனைப்படுகின்றனர். கல்வியின் பொருட்டுப் பெற்றோரிடமிருந்து பிரிந்து வேற்றூருக்குப் போக சிறார் யாரும் மகிழ்ச்சியுறுவதில்லை, வேதனைப்பட்டுக்கொண்டே போகின்றனர். நல்ல கல்வி ஸ்தாபனங்களில் இருக்கின்ற பொழுதும் அவர்கள் அடிக்கடி தங்கள் வீட்டைப் பற்றி நினைத்துக்கொள்வதே இயல்பு. சொந்த வீடுகளினின்று நெடுநாள் அவர்கள் பிரிந்திருந்தால் தங்கள் குடும்ப ஐதிகங்களும் அவர்களுக்குத் தெரியாது போய்விடும் என்பது உண்மை. ஆயினும்

அவரவர் வீட்டில் பெறும் பயிற்சியால் உண்டாகும் நன்மை மிகக் குறைந்தது.

நோய்களுக்குச் சிகிச்சைசெய்வதற்கு ஆஸ்பத்திரிகளில் இருக்கின்ற வசதிகளைச் சொந்த வீடுகளில் பெறமுடியாது. சொந்த வீடுகளில் மகிழ்வுடன் வாழ்திருக்கலாம். ஆனால் சிகிச்சைக்கு வேண்டிய உதவிகளை ஆங்குப் பெறமுடியாது. நல்ல சிகிச்சை வேண்டுமென்கின்றவர்கள் அதற்கேற்ற ஆஸ்பத்திரிகளுக்குப் போகவேண்டும். மனத்திருப்தியின் பொருட்டு அவரவர் வீட்டில் இருந்துகொண்டே வைத்தியம் பண்ணிக்கொள்வது போதாது. வேறு சில சான்றுகளையும் எடுத்துக்கொள்ளலாம். நல்ல புகைப்படம் பிடிக்கவேண்டுமென்று விரும்புகிறவர்கள் அதற்கென்று அமைந்துள்ள (Studio) சித்திரச் சாலைக்குச் செல்ல வேண்டும். விதவிதமான அழகிய மரம் செடிகொடிகளைப் பார்க்க விரும்புகின்றவர்கள் (Public gardens) அனைவர்க்கும் பொதுவாய் அமைந்த பூந்தோட்டங்களுக்குப் போகவேண்டும். இதே கோட்பாடு கல்வித் துறையிலும் வந்தமைகிறது.

பெற்றோரிடமிருந்து நல்ல பழக்க வழக்கங்கள் சிலவற்றைப் பெறலாம், இன்புற்று அவர்களுடன் வாழ்ந்திருக்கலாம், குடும்ப ஐதிகங்களையும் இயல்பாகத் தெரிந்துகொள்ளலாம். அத்துடன் இளைஞன் ஒருவன் பெறுகின்ற பயிற்சி நின்றுவிடுகிறது. வாழ்க்கைக்கு இன்றியமையாத, கணக்கற்ற வேறு

பயிற்சிகள் பல இருக்கின்றன. காலமெல்லாம் உற்ருருடனேயே பேசிப் பழகிவாழ்ந்திருப்பவன்குறுகிய மனப்பான்மை உடையவன் ஆய்விடுகிருன். வெவ்வேறு இடங்களிலுள்ள,வெவ்வேறு பாங்கு படைத்த மக்களோடு உறவாடிப் பழகுதலில் உண்டாகிற பயிற்சி அலாதியானது. சிறுவன் ஒருவன் குருகுல வாசம் செய்வதன் மூலம் உலகத்தோடு உறவாடச் சின்னஞ்சிறு வயதிலேயே பழகுகிருன். நட்பு, பகைமை ஆகியவைகள் உலகில் எப்படி உண்டாகின்றன என்னும் பாடத்தைக் குருகுலத்தில் பெறுவதுபோன்று சொந்த வீட்டில் பெறமுடியாது. பகைமையைக் குறைத்தலும், நட்பைப் பெருக்குதலும் ஆகிய பெரிய பயிற்சிக்குக் குருகுல வாழ்வே முற்றிலும் வசதியான சூழ்நிலையாகும். வெற்றிகரமாகக் குருகுல வாசம் செய்யக் கற்றுக்கொண்டவன் வெற்றிகரமாக உலகத்தில் எந்த இடத்தில் வேண்டுமாளுலும் வாழமுடியும் என்பதைக் கற்றுக்கொண்டவன் ஆகிருன்.

பக்தி, புலனடக்கம், ஒழுக்கம் ஆகியவைகளில் பயிற்சி பெறுதற்குச் சொந்த வீடுகளைவிட கல்வி ஸ்தாபனம் பன்மடங்கு சிறந்தது ஆகும். நல்லாசிரியர் ஒருவர் ஒரு குருகுலத்தில் அமைந்திருந்தால் அவர் நூற்றுக்கணக்கான பிள்ளைகளுக்கு ஆங்குப் பயிற்சி கொடுத்துவிடுகிருர். சொந்த வீட்டில் பெறுதற்கு நூற்றுக்கணக்கான பெற்ருேர்கள் அந்த நல்லாசிரியர் பெற்றுள்ள பண்பைப் பெறவேண்டி

யது அவசியமாகிறது. சமுதாய நடைமுறையில் அது சாத்தியப்படாது. நித்திய வாழ்க்கையை முறையாக வகுத்து வைத்து நூற்றுக்கணக்கான மாணுக்கர்கள் அதைப் பின்பற்றும்படி செய்வதற்கு குருகுலம் ஒன்றே வசதியான இடமாகும்.

குருகுலத்தில் நல்ல பயிற்சி பெற்றவன் தன் சொந்தக் குடும்பம் ஒன்றுமட்டுமல்ல, உலகத்தில் எங்குச் சென்று யாருடன் ஒட்டி உறவாடுவது என்ருலும் அதற்கேற்ற பாங்கை அவன் ஏற்கனவே பெற்றிருக்கிருன். ஆதலால் இருக்குமிடமெல்லாம் அவன் சொந்த வீடு போன்றதாகிறது; சந்திக்கும் மக்களெல்லாம் அவனுக்கு உறவினர் போன்றவர் ஆகின்றனர். குருகுலத்தில் நல்ல பயிற்சி பெற்றவனுக்கு உலகமெல்லாம் தன் குடும்பம், ஊரெல்லாம் தன் சொந்த ஊர் ஆய்விடுகின்றது. ஆதலால் குருகுலப் பயிற்சியே மக்களுக்குத் தலைசிறந்த பயிற்சியாகும்.

**கேள்வி : (56)** ஒருவனுடைய கைரேகையைப் பார்த்துவிட்டு ஒரு ஜோதிடர் 'உனக்குக் கலியாணம் ஆகியே தீரவேண்டும்.குடும்பத்தில் பல கஷ்டங்கள் அனுபவித்தே தீரவேண்டும். இது ஆண்டவனுல் எழுதப் பட்டது. இதை யாராலும் மாற்றமுடியாது' என்று சொல்லுகிருர். ஆனுல் அவருக்குக் குடும்பத்தில் வாழச் சிறிதும் பிரியம் கிடையாது.அவர் ஆண்டவனை அடையவேண்டுமென்று நாள்தோறும் ஜபம், தியானம், பிரார்த்தனை முதலியவைகளைச் செய்துகொண்டு

குடும்பத்தில் சிக்காமல் இருப்பதற்காக ஆண்டவனை வேண்டிக்கொண்டு வருகிறார். ஆகையால் அவர் கைரேகையில் உள்ளபடி திருமணம் நடந்தே தீருமா அல்லது விடுதலை கிடைக்குமா?

*வினைப்பயன் என்பது ஒன்று உண்டு. காரண காரியமாக அது அமைந்துள்ளது. நல்ல செயலைச் செய்தவன் இனிய பயனை அடைகிறான். தீய வினையாற்றியவன் இன்னாத பயனை அடைகின்றான். முறை பிறழாது வினைப்பயன் உயிர்களுக்கு வாழ்க்கையில் வந்தமைகிறது. அப்படி வரப்போகின்ற வினைப்பயனை முன் கூட்டியே விளக்குகின்ற கலை ஞானங்கள் ஜோதிட மென்றும், ரேகை சாஸ்திரமென்றும் பெயர் பெறுகின்றன. இந்தச் சாஸ்திரங்களை முறையாக ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் இவைகளில் பெரிதும் உண்மை இருக்கிறது என்பது புலப்படும். காரணத்தைக் கண்டுபிடித்துவிட்டால் பிறகு காரியத்தை யூகித்துச் சொல்லிவிடலாம். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். பூமி ஒன்றின் விளைவுத்திறன், அதன் விஸ்தீரணம், அதிலே விதைக்கப்பட்டிருக்கின்ற தான்யம், போட்டுள்ள எரு, பெய்கின்ற பருவமழை ஆகியவைகள் முறையாக நமக்குத் தெரிந்துவிட்டால் அதில் இவ்வளவு தான்யம் விளையுமென்று மதிப்புப்போட்டுச் சொல்லிவிடலாம். அங்ஙனம் மனிதனுடைய வினைப்பயனை விளக்குகின்ற முறையிலே கிரகங்களின் அமைப்பும், ரேகையின் அமைப்பும் ஏற்பட்டிருக்கின்றன என்*

பதை ஆன்ருேர்கள் கண்டுபிடித்தார்கள். சாதாரணமான வாழ்க்கை வாழ்ந்து வருகின்றவர்களுக்கு இவைகளைக் கணித்து ஓரளவில் இனி நிகழப் போகின்றவைகளைச் சொல்லிவிடலாம்.

ஆனல் பாரமார்த்திக வாழ்க்கையில் தீவிரமாக ஈடுபடுகின்றவர்களுக்கு ஜோதிடமும், ரேகை சாஸ்திரமும் உதவமாட்டா. இவைகளில் தென்படுவது ஒன்று, வாழ்க்கையில் நிகழ்வது மற்ருென்ருகப் போய்விடும். ஜோதிட சாஸ்திரமே அதன்கண் உள்ள குறைபாட்டை எடுத்து விளக்குகின்றது. கிரக அமைப்பு ஒன்றிருக்க அதற்கு நான்கு, ஐந்து பலன்களை அது சொல்லுகிறது. அவைகளுள் ஜோதிடம் பார்க்கின்ற மனிதன் எதைச் சொன்னல் கேட்கின்ற மனிதன் திருப்தியடைவான் என்று பார்த்துப் பகர்கிருன். அப்போக்கில் ஜோதிடம் பகர்வது பொருந்தாது. ஒருவன் உண்மையே பேசிப் பழகவேண்டும். பிறரைத் திருப்திப் படுத்துவதற்காகவென்று ஜோதிடம் பகரலாகாது. நான்கு, ஐந்து பலன்களில் எந்த ஜாதகனுக்கு எது பலிதமாகும் என்று மனதை நடுநிலையில் வைத்துச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்—இப்படியெல்லாம் அதில் பகரப்பட்டிருக்கிறது. இவையாவையும் மீறிக் கடவுள் நாட்டத்தில் செல்லுகின்றவன் ரேகை சாஸ்திரத்தையும் ஜோதிட சாஸ்திரத்தையும் பொய்யாக்குகின்ற நெறியில் போகமுடியும். ஆத்ம சாதகர்கள் இவைகளில் கருத்து வைக்கலாகாது. அவர்கள் முற்றிலும் கட

வுளைச் சார்ந்திருக்கவேண்டும். கடவுளைச் சார்ந்திருப்பதால்தான் தங்கள் வினைப்பயனைத் தாங்களே வென்றுவிடுகின்றனர்.

**கேள்வி:** (57) 'ரகசியங்களுள் நான் மௌனம்' என்று ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். கடவுள் நாதப்பிரம்மம் என்றும் பகரப்படுகிறது. ஒருபொருளே நாதவடிவாகவும், மௌன சொரூபமாகவும் எப்படி இருக்கமுடியும்?

*இறைவன் ஓசை வடிவினனாக இருக்கிறார். அப்பொழுது அவருக்கு நாதப்பிரம்மம் என்று பெயர். ஓசை அல்லது நாதம் பிரபஞ்சத்துக்கே வித்து ஆகிறது. நாதத்தினுடைய ஸ்தூலத் தோற்றம் இப்பிரபஞ்சமாகிறது. பிரபஞ்சத்துக்கு இயற்கை அல்லது ஜகத் என்று பெயர். எது இயங்குகிறதோ அது இயற்கை. இயங்குகிற ஒவ்வொரு பொருளும் ஓசையை உண்டு பண்ணுகிறது. ஓசையைக் காரணமாகக் கொண்டு பிரபஞ்சம் உண்டாயிற்று. அதைக் காரியப் பிரம்மம் எனலாம். பிரபஞ்சமே மேலும் ஓசையை உண்டுபண்ணுதலால் காரணமாகவும் அது இருக்கிறது. ஆக, நாதப் பிரம்மத்தினிடத்துக் காரணமும் காரியமும் மாறி மாறி அமைந்து கொண்டே இருக்கின்றன. நாதப்பிரம்மமும் இந்த ஜகத்தும் ஒன்றே. ஆனால் அக்ஞான நிலையிலிருக்கும் நமக்கு அது ஜகத்தாகத் தோன்றுகிறது. பிரம்மமாகத் தோன்றுவதில்லை. ஞானம் வரும் பொழுது ஜகத் என்னும் காட்சி தெய்வக் காட்சி*

யாக மாறிவிடுகிறது. இப்படி ஓசை வடிவமாயிருக்கும் தெய்வம் மௌன சொரூபமாக இருப்பது எப்படி என்னும் கேள்வி பொருத்தமானதே.

தெய்வத்திடத்து எல்லா முரண்பாடுகளும் சந்திக்கின்றன. தெய்வம் சாந்த சொரூபமாக இருப்பது போன்று கோரசொரூபமாகவும் இருக்கிறது. சிவன் சாந்த சொரூபம். அதே பொருள் ருத்திரன் எனப்படும்பொழுது உக்கிர சொரூபமாகிறது. விஷ்ணு சாந்த சொரூபம். அப்பொருள் நரசிம்மமாகும்பொழுது பயங்கர வடிவினன். உமாதேவி சாந்த சொரூபம். காளி அல்லது துர்க்கை அச்சத்தை விளைவிக்கும் பயங்கர வடிவினள். இப்படி ஒரே பொருளிடத்து முரண்படும் இரண்டு அம்சங்களையும் காண்கின்றோம். நமக்குப் புலனாகும் பிரபஞ்சமும் இவ்வுண்மையை நிரூபிக்கிறது. கடல் அமைதியுற்றிருப்பதுமுண்டு; கொந்தளித்துக்கொண்டிருப்பதும் உண்டு. காற்று, தீ, நிலம் ஆகிய மற்ற பூதங்களிடத்தும் இந்த இரண்டு இயல்புகளையும் மாறிமாறிக் காணலாம். தெய்வம் பிரபஞ்ச சொரூபமாகவும் இருக்கிறார், பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவராகவும் இருக்கிறார். ஆகையினால்தான் அவருக்குக் கடவுள் என்ற பெயர் வந்தது. இயற்கையைக் கடந்தும், இயற்கையின் உள்ளும் இருக்கிறார் என்பது கட+உள்=கடவுள் என்பதன் பொருளாகும். இயற்கை மயமாயிருக்கும் அவர் நாதப் பிரம்மம். ஏனென்றால் ஓசைக்கு அன்னியமாக இயற்கை இல்லை. ஓசையும் இயற்கையும் ஒன்றே.

இயற்கைக்கு அப்பால் இயக்கம் இல்லை. எங்கு அசைவு இல்லையோ அங்கு ஓசை உண்டாவதில்லை. ஓசை இல்லாத இடத்து பேச்சும் இல்லை. பேச்சற்ற நிலையே மௌனநிலை. சொல்லைக்கடந்த பொருளைச் சொல்லால் விளக்கமுடியாது. ஆதலால் அது என்றைக்கும் பேச்சு உலகுக்கு ரகசியமாக இருக்கிறது. பேச்சு உலகுக்கு எட்டாதது என்பது அதன் கருத்து. நாதப்பிரம்மம் என்னும் தோற்றத்தை உடைய தெய்வமும், மௌனம் என்னும் அதீத நிலையில் உள்ள தெய்வமும் ஒன்றே. எல்லா முரண்பாடுகளும் தெய்வத்தினிடத்து சந்திப்பது போன்று இயற்கையில் அந்தர்யாமியாய் இருக்கின்ற நிலையும், இயற்கைக்கு அப்பாற்பட்ட நிலையும் அம் மெய்ப் பொருளினுடைய சொரூபங்களேயாம். ஓசை வடிவினனும் அவரே. மௌன நிலையும் அவரே.

**கேள்வி: (58)** நாளைக்குச் செய்யவேண்டிய வேலையை இன்று செய்துவிட வேண்டும். மாலையில் செய்ய வேண்டியதைக் காலையில் செய்யவேண்டும் என்று மஹாபாரதம் கூறுகிறது. இதன் உட்பொருள் யாது?

**Be with time and ahead of time** என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. காலத்துடன் ஒத்து இரு, காலத்துக்கு முந்திக்கொள், என்பது அதன் பொருள் இயற்கையில் அமைந்துள்ள சொரூபங்களிலெல்லாம் அரிதிலும் அரிதாய் இருப்பது காலம். இதன் மகிமையை யாரும் எண்ணிப் பார்ப்பதில்லை. நம் அனைவர்க்கும் ஓயாது அது சொந்தமாய் இருக்

கிறது. ஆனல் கடந்து போனது பின்பு யாருக்குமே திரும்பி வாராது. வீணே கழித்த ஒரு கணப்பொழுது வீண்போனதே. திரும்பவும் அது நமக்குக் கிடைக்கப்போவதில்லை. செல்வத்தை இன்றைக்கு நாம் சம்பாதிக்காவிட்டால் அதற்கு ஈடு சேர்த்து பின்பு ஒருநாள் அதிகமான செல்வத்தைச் சம்பாதிக்க நமக்கு முடியும். வீண்போன காலத்துக்கு எந்த விதத்திலும் ஈடு எடுக்க முடியாது. ஆகையால்தான் காலம் அரிதிலும் அரிது.

காலத்தை நன்கு பயன்படுத்துபவர் அந்தந்த வேளையில் செய்து முடிக்கவேண்டிய அலுவல்களைச் சுறுசுறுப்புடன் செய்து முடித்துக்கொண்டு, அதற்கு மேல் நாளைக்குச் செய்யவேண்டிய அலுவல்களில் ஒரு பகுதியை இன்றைக்கே முடித்துவிட்டால் காலம் என்னும் பொக்கிஷம் நமக்கு ஆதாயமாகிறது. விரைந்து வினையாற்றுகின்றவர் காலத்தினின்று பெரிய ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு வருகின்றனர். இக்கோட்பாட்டை அடிப்படையாகக்கொண்டே நாளைக்குச் செய்யவேண்டிய வேலையை இன்றைக்குச் செய்துவிடவேண்டும் என்றும், மாலையில் செய்யவேண்டியதைக் காலையில் செய்யவேண்டும் என்றும் மேலோர் பகர்கின்றனர்.

கடவுளுக்குப் பல சொரூபங்கள் இருக்கின்றன. அவர் கால சொரூபமாகவும் இருக்கிறார். காலத்தை நன்கு அறிந்துகொள்ளுதல் கடவுளின் மகிமையை அறிந்துகொள்ளுதற்குச் சமனாகிறது. காலத்தை

நன்கு பயன்படுத்துவது ஒரு விதத்தில் கடவுள் வழிபாடு ஆகும். உண்மையான வழிபாட்டில் முன்னேற்றம் இருப்பது போன்று காலத்தை நன்கு பயன்படுத்துதலில் முன்னேற்றமிருப்பது நமக்குக் கண்கூடாக விளங்குகிறது.

**கேள்வி: (59)** அகால மிருத்யு வினையின் பயனு? திருக்குற்றாலத் தேனருவி தரிசனத்திற்காகச் சென்ற தம்பதிகளில் ஒருவர் பாலத்தில் தவறி விழுந்து இறந்தார். மனைவியைக் காப்பாற்றும் பொருட்டுக் குதித்த கணவரும் இறந்தார். இவை போன்று பல நிகழ்ச்சிகள் உள. திடீரென்று வீட்டின் சுவர் மேலேவிழுதல், வேடிக்கைப் பார்க்கச் சென்ற இடத்தில் துப்பாக்கிக் குண்டுக்கு இரையாதல், இவைபோன்ற செயல்கள் நடைபெறுகின்றன. வினைக்கும் இச்செயல்களுக்கும் உள்ள சம்பந்தத்தை விளக்க வேண்டுகிறேன். அபமிருத்யுவுக்கும் வினைக்கும் உள்ள சம்பந்தத்தையும் குறிப்பிட வேண்டுகிறேன்.

வினைப்பயன் இடையருது வந்து வாய்த்துக் கொண்டிருப்பதையே வாழ்வு என்கிறோம். வாழ்வும் வினைப்பயனும் ஒன்றே. வினைப்பயன் அற்றவிடத்து வாழ்வும் இல்லை. வினைப்பயனே காரண காரியமாய் வந்தமைகிறது. காரணத்துக்கேற்ற காரியம் உளது. காரணம் ஒன்றிருக்கக் காரியம் மற்றொன்று ஆகாது. இது இயற்கையின் முறை பிறழாத செயல் ஆகும். ஆனால் நமது அறிவுக்குக் காரணங்கள் எல்லாம் புலனாவதில்லை. காரணம் ஒன்றிருக்க மற்றொன்றைக்

காரணமாக எடுத்துக்கொள்ளும் விபரீதம் நமக்கு வாய்த்து விடுவதும் உண்டு. கர்மத்தின் இயல்பு முழுவதையும் சான்றோர்களே அறிந்துகொள்ள முடியாதவர்களாய் இருக்கின்றனர். பின்பு மற்றவர்கள் இது விஷயத்தில் மனக்குழப்பம் அடைவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. நம் அறிவுக்கு எட்டாது போய்விடினும் காரணத்துக் கேற்ற காரியம் இயற்கையில் யாண்டும் ஒழுங்காக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இக்கோட்பாட்டை மட்டும் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

பாலத்தில் தவறி விழுந்தவருக்கு ஒருவேளை ஆயுள் அத்துடன் முற்றுப்பெற்றிருக்கலாம்; அல்லது இன்னும் ஆயுளில் ஒரு பகுதி பாக்கியிருக்க அவர் வீழ்ந்து மாய்ந்திருப்பாராகில் அது அகாலமரணம் என்பதாகிறது. இப்படி அமைந்த அகாலமரணம் புதியதொரு வினை. இதன் பயனும் பாக்கியிருக்கிற பிராரப்த கர்மத்தின் பயனும் சேர்ந்து இனிவரும் அந்த ஜீவனுடைய பிறவியை இயக்கும்.

ஓர் உயிரைக் காப்பாற்றும் பொருட்டு நதியில் குதித்தவர் மாண்டுபோனார். முதலில் விழுந்த உயிர் காப்பாற்றப்பெற்றது. இந்தச் சம்பவங்களை அவரவர் வினைக்கேற்ப அமைந்த ஆயுள்பலம் என்று தான் சொல்லவேண்டும். யாருக்கு எவ்வளவு காலம் வாழ்ந்திருக்கவேண்டும் என்னும் பிராரப்தமிருக்கின்றதோ அது முறையாக நடைபெற்றுக்கொண்டு போகிறது. காப்பாற்றப் போனவருக்கு அதற்கு

மேல் ஆயுள் இல்லை என்றும், முதலில் வழுவி நீரில் வீழ்ந்து சாகும்தறுவாயில் இருந்தவர்க்கு இன்னும் ஆயுள் பலம் இருக்கிறது என்றும் யூகிப்பது பொருந்தும்.

வீட்டின் சுவர் ஒருவர்மீது வீழ்ந்து அவர் மாய்ந்துபோனதைப் பொதுவாக வினைப்பயன் என்றே எடுத்துக்கொள்ளலாம். அப்படி மாய்ந்தவர் அம்முறையில் இந்த ஜன்மத்தை முடிவுக்குக் கொண்டுவரவேண்டும் என்னும் வினைப்பயனுக்கு இலக்காக அமைந்திருக்கலாம்.

வேடிக்கை பார்க்கச்சென்ற இடத்தில் துப்பாக்கிக்குண்டுக்கு இரையானது இயல்பாக அமைந்த மரணமாக இருக்கலாம். அல்லது அகால மரணமாகவும் இருக்கலாம். துப்பாக்கிக் குண்டுக்குத் திடீரென்று இரையாகி மாய்வது அந்த ஜீவனுடைய வினைப்பயனாய் இருந்தால் அது இயல்பாக அமைந்த மரணம் என்று சொல்லப்படுகிறது. இன்னும் ஆயுளில் கொஞ்சம் பாக்கி இருக்க அந்த ஜீவன் துப்பாக்கிக் குண்டுக்கு இரையாயிருந்தால் அது அகால மரணம் என்று சொல்லப்படுகிறது. அந்தந்த ஜீவனுக்கு அமைந்தது அவரவர் ஆயுள் பூர்த்தியான பிறகு அமைந்த பழைய வினைப்பயனா அல்லது அகால மரணத்தை உண்டு பண்ணுகின்ற அப்போதைக்கப்போது நிகழ்ந்த புதிய வினைப்பயனா என்று உறுதியாக முடிவுகட்டுவதற்கு வேண்டிய புள்ளி விவரங்கள் நம் கைவசத்தில் இல்லை. ஆத

லால் உத்தேசமாகத்தான் நாம் இங்ஙனம் கூறமுடியும். புதிதாகத் திடீரென்று நிகழ்கின்ற வினைப் பயன் மூன்று காரணங்களால் வரக்கூடும் என்பதையும் பெரியோர் பகர்கின்றனர். அத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தெய்விகம் என இந்த மூன்று சூழ் நிலைகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவை சேர்ந்து திடீரென்று புதிய வினைப்பயனை உண்டு பண்ணிவிடுவதும் உண்டு. இப்படி வரும் மரணத்துக்கே அகாலமரணமென்று பொதுவாகப் பெயர் கொடுக்கலாம். மேலே குறிக்கப்பட்டவர்களெல்லாம் மாண்டுபோனது காரண காரியம் என்னும் வினையின் விளைவு. எந்த மரணத்துக்கு எது காரணமாய் இருந்தது என்பதை யூகிப்பதுதான் சிரமம்.

**கேள்வி : (60)** உலகம் பொய் என்றும், காணும் பிரபஞ்சம் கற்பனை யென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளும் 'மனத்தின் நினைவே பிரபஞ்சம்' என்று சொல்லியிருக்கிறார். ஆனால் உலகில் நாம் கண்கொண்டு காணும் சூரியனும் கடலும் இமய மலை போன்ற பர்வதங்களும் எத்தனையோ யுகங்களாக இருந்து வருகின்றன. மேலும் பூமி தோன்றுவதற்கு முன்பே சூரியன் இருந்து வந்தது என்றும் தற்கால விக்ஞானிகள் கூறுகின்றனர். இது ஒருபுறமிருக்க மஹரிஷிகளும் அறிவதற்கு அரிதான அருபப் பொருளை, பரப்பிரம்மத்தை, அனுமானத்தில் ஊகித்துக் கற்பித்துக் கொள்ளுகிற பொருளை மெய்பொருள் என்றும், அழியாத சாசுவதப்பொருள் என்றும் நம்பும்

படி சாஸ்திரங்கள் போதிக்கின்றன. ஆனால் கண் கொண்டு பார்த்தும், அனுபவத்தில் அறிந்தும் நிலையாய் இருக்கும் உலகத்தைப் பொய்த் தோற்றம் என்பது எப்படி? எக்காலத்திலும் அறியக்கூடாததான பரப்பிரம்மத்தை மெய்ப்பொருள் என்பது எப்படி? இந்த முரண்பாடுடைய சங்கைகளை விளக்க வேண்டுகிறேன்.

*நமது அமைப்பைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். நம் மனது விழித்திருந்து வேலை செய்கிறது. இந்த மனதின் துணைகொண்டு புறஉலகைப் பார்க்கிறோம். இம்மனது தூக்கத்தில் வேலை செய்யாது ஒடுங்கிவிடுகின்றது. அப்பொழுது நமக்கு இவ்வுலகம் இல்லை. பின்பு இதே மனது கனவு காண்கிறது. அப்பொழுது அது தனக்குத்தானே தன்னிடத்தில் ஓர் உலகை உண்டுபண்ணிக் கொள்கிறது. கனவில் மனது கற்பித்துக்கொள்ளும் சூரியன் தனக்குப் புறம்பாயிருக்கிறதென்று அது உறுதியாக நம்புகிறது. விழித்துக் கொண்டபின் தனது கற்பிதத்துக்கு அன்னியமாகப் புறஉலகம் கனவில் இருக்கவில்லை என்னும் தெளிவு அதற்குண்டாகிறது. கனவைப்பற்றிய இவ்வுண்மையை யாரும் மறுக்க முடியாது.*

*இனி நனவுக்கு வருவோம். இதை ஜாக்கிரதாவஸ்தை என்று சொல்லுவதும் உண்டு. ஜாக்கிரதாவஸ்தையில் நாம் காணும் சூரியன் நம்முடைய மனோ கற்பிதம் அல்ல. ஜாக்கிரதாவஸ்தையில் நாம்*

காணும் வெளிஉலகம் நமது கற்பிதமல்ல. தூக்கத்தில் அல்லது மரணத்தில் நாம் ஒடுங்கிவிட்டாலும் இந்த உலகம் ஒடுங்கிவிடுவதில்லை. ஆக, இவ்வுலகம் நமக்குப் புறம்பானது. அது தன்மயமாய் இருந்து கொண்டிருக்கிறது. அதற்கும் நமக்கும் உள்ள தொடர்வு என்ன என்பது அடுத்த கேள்வி. நம் மனது அயர்ந்த நித்திரையில் வேலையை நிறுத்தி விடும்பொழுது இவ்வுலகுக்கும் நமக்கும் தொடர்வு இல்லை. அது இருக்கிறது என்றாலும் நமக்குத் தூங்கும் வேளையில் அது இல்லை. விழித்துக் கொண்டவுடன் அது தோன்றுகிறது. அதன் தோற்றத்துக்கு நமது மனதும் ஒரு கர்த்தாவாக இருந்து வருகிறது என்பது நமது அன்றாட அனுபவம். நம்மில் ஒருவன் பிறவிக்குருடன் என்று வைத்துக் கொள்வோம். அம்மனிதனுக்குத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டவுடன் இவ்வுலகம் இருக்கிறது. ஆனால் அதிலுள்ள வெவ்வேறு நிறங்கள் அம்மனிதனுக்கு இல்லை. அழகானவடிவம், அழகற்ற வடிவம் என்பதெல்லாம் அவனுக்குத் தெரியாது. அவனுடைய காட்சியில் இதே உலகம் குறைபட்ட சொரூபத்தில் இருக்கிறது. மற்றொரு மனிதன் பிறவிச் செவிடன் என்று வைத்துக் கொள்வோம். பிறவிச் செவிடன் ஊமையாய்ப் போய்விடுவதும் இயல்பு. அவனுக்கு இவ்வுலகத்தின் சப்த சொரூபம் இல்லை. பாஷை என்பதற்கு அர்த்தம் இல்லை. இன்னிசை என்பதும் அவனுக்குப் பொருளற்றது. மனதைக் கவரும்

விதத்தில் பாடல்கள் ஒருவன் பாடினுல், ஏன் இவன் வாயைத் திறந்து திறந்து வலிப்பு நோய் வந்தவன் போன்று திண்டாடுகிருன் என்று செவிடன் பொருள் படுத்துவான். அவனுடைய மனதுக்கு எட்டும் இவ் வுலகம் குறைபட்ட உலகமாகிறது. நம் அனைவர்க் கும் இவ்வுலகம் பஞ்சேந்திரியங்கள் வாயிலாகப் புலனுகிறது. மனதும் இந்த ஐந்தின் வாயிலாக உலகை உணர்ந்து வருகிறது.

பஞ்சேந்திரியங்கள் நம் அனைவர்க்கும் பொது என்ருலும் மன அமைப்பில் நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாங்குடையவர் ஆகின்ருேம். மனதில் உண்டாகும் மாறுதலுக்கு ஏற்ப புற உலகத்தைப் பற்றிய அபிப்பிராயமும் மாறுகிறது. இதே உல கம் சிலருக்கு நரகம் போன்றது. வேறு சிலர்க்கு சொர்க்கம் போன்றது. உலகம் ஒன்று என்ருலும் இதை நரகமாகக் காண்கின்ற உயிரும் உண்டு; சொர்க்கமாகக் காண்கின்ற உயிரும் உண்டு. உண் மையில் இது நரகமா அல்லது சொர்க்கமா என்பது கேள்வி. நம் மனத்துக்கேற்றவாறு இது காட்சி கொடுக்கிறது என்பது விடை. மனது என்னும் கண்ணுடி போட்டுக்கொண்டு இவ்வுலகைப் பார்க் கிருேம். பச்சைக் கண்ணுடி அணிந்திருப்பவனுக்கு உலகம் பச்சை. சிவப்புக் கண்ணுடி அணிந்திருப்ப வனுக்கு இது சிவப்பு. கோணலான கண்ணுடி அணிந்திருப்பவனுக்குப் பொருள்கள் எல்லாம் கோணல் படிந்து தென்படும். மனதைத் திருத்து

மளவு உலகக் காட்சி மாறுகிறது. மனமானது தெள்ளத் தெளிந்தவர்க்கு ஜீவன் சிவ சொரூபம் என்பது ஆன்ருேர் அனுபவம். நமது மனதை முற்றிலும் செப்பனிட்டுவிட்டால் இப்பிரபஞ்சமே பிறகு நமக்குப் பரம்பொருளாகக் காட்சி கொடுக்கிறது.

இது பிரபஞ்சமா அல்லது பரம்பொருளா என்பது அடுத்த கேள்வி. பிரபஞ்சம் என்னும் காட்சியில் தோற்றம் உண்டு, ஒடுக்கம் உண்டு.நமது மனது ஒடுங்குவது போன்று சமஷ்டியாகிய ஹிரண்யகர்பனது மனது ஒடுங்குமிடத்துப் பிரபஞ்சம் முழுதுக்கும் பிரளயம் வந்துவிடுகிறது. நாம் தூங்கும் பொழுது எப்படி நமக்குப் புறவுலகம், அக உலகம் எல்லாம் இல்லாது போய்விடுகிறதோ அப்படிப் பிரபஞ்சத்தின் கர்த்தனாகிய ஹிரண்யகர்பன் தூங்க ஆரம்பிக்கும்பொழுது இந்த சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகிய எல்லாம் ஒடுங்கிப்போய் விடும். அந்தச் சமஷ்டி மனது விழித்தெழுந்திருக்கின்றபொழுது திரும்பவும் இவை யாவுக்கும் சிருஷ்டி வந்துவிடுகிறது. தூங்குகின்றபொழுதும் விழித்திருக்கின்றபொழுதும் ஆத்மாவாகிய நான் இருக்கிறேன் என்னும் அனுபவம் நம் ஒவ்வொருவருக்கும் உண்டு. ஆக, அந்த ஆத்ம சாக்ஷி தூக்கத்திலும் இருக்கிறது, விழிப்பிலும் இருக்கிறது. எது ஒரு அவஸ்தையில் இருந்து மற்ருேர் அவஸ்தையில் இல்லாது போய்விடுகிறதோ அது மெய்ப் பொருள் அல்ல. நமது வீடு, வாசல், உற்ருர், உறவினர் எல்

லாரும் விழிப்பு அல்லது ஜாக்கிரதாவஸ்தையில் நமக்கு இருக்கின்றனர். அயர்ந்த உறக்கத்தில் அவர்கள் நமக்கு இல்லாது போய்விடுகின்றனர். நமது உலகம் நமக்கு அப்பொழுது இல்லாதுபோய் விடுகின்றது. ஆத்ம சாக்ஷி ஒன்றுதான் தன்னில் தானய் அப்பொழுது மிஞ்சியிருக்கிறது. அதே ஆத்ம சாக்ஷி விழிப்பிலும் இருக்கிறது, கனவிலும் இருக்கிறது, அயர்ந்த உறக்கத்திலும் இருக்கிறது. இந்த மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவாக இருக்கும் ஆத்ம சாட்சி மெய்ப்பொருள். தனக்குத்தானே இது பிரபஞ்சத்தைத் தோற்றுவித்துக்கொள்கிறது. பிரபஞ்சத்துக்குத் தோற்றம் ஒடுக்கம் இருப்பதால் அது மெய்ப்பொருள் அல்ல. பிரபஞ்சமுழுதையும் தேகமாகக் கொண்டிருப்பவன் பரமாத்மன். அந்தத் தேகத்தைப் பிரளயத்தில் ஒடுக்கிவிடும் நிலையிலும் அவன் சாக்ஷியாய் இருக்கின்ருன். அந்தப் பரமாத்மாவினுடைய கிரணம் அல்லது கதிர்களாக இத்தனை ஜீவர்கள் இருக்கிருர்கள். இந்த ஆத்ம சொருபம்தான் மெய்ப்பொருள். இதற்குத் தோற்றம் ஒடுக்கம் கிடையாது. இது கற்பித்துக்கொள்ளும் பிரபஞ்சத்துக்குத் தோற்றம் ஒடுக்கம் உண்டு. ஆகையினல்தான் பிரபஞ்சத்தைக் கற்பிதம் என்றும், சாக்ஷியாக இதைப் பார்த்துக்கொண்டிருக்கும் பரமாத்மாவை மெய்ப்பொருள் என்றும் பகர்கிருேம்.

**கேள்வி : (61)** நாம் உலகுக்கு நன்மை செய்யமுடியுமா என்னும் கேள்விக்கு விவேகானந்த சுவாமிகள் பதி

லளிக்கின்றார்: 'பாரமார்த்திக நிலையில் உலகுக்கு நாம் நன்மை செய்யமுடியாது. வியவகாரிக நிலையில் உலகுக்கு நாம் நன்மை செய்யமுடியும்.' இதன் கருத்தை விளக்குவீர்களாக.

*இப்பொழுது நம் காட்சியில் இருப்பது வியவ காரிக நிலை. அதாவது உலகம் தோன்றுகிறது; இந்த உலகத்தில் வெவ்வேறு பாங்குடைய ஜீவர்கள் இருக்கிறார்கள்; இதில் நல்லவர்கள் உண்டு, கெட்ட வர்கள் உண்டு; முன்னேற்றம் அடைய ஆசைப்படு கிறவர்கள் இருக்கிறார்கள், கீழ்மையில் விரைந்து செல்பவர்களும் உண்டு; இங்குச் சுகம் உண்டு; துக் கம் உண்டு; துன்பத்தை அகற்றி இன்பத்தைப் பெருக்குதற்கான முயற்சிகள் உண்டு. இதை வியவ காரிக நிலை என்கிறோம். பாரமார்த்திகநிலை என்பது பரம்பொருளைப்பற்றியது. பரம்பொருள் ஒன்றுதான் இருக்கிறது, அது போக்கற்றது, வரவற்றது, இன்ப துன்பம் அதற்கில்லை, பேரானந்தப் பெருநிலை அது.*

*இவ்வுலகத்தைக்கொண்டே இந்த இரண்டு நிலையையும் சுமாராக ஊகித்துத் தெரிந்து கொள்ள லாம். கடல் இருக்கிறது. கடல் முழுதும் சேர்ந்து பார மார்த்திகநிலை. அது போவது கிடையாது, வருவ தில்லை. ஆகாய விமானத்திலிருந்து பார்த்தால் ஒரே அமைதியான நீர்ப்பரப்பு. ஆனால் கடலின் மீது ஒரு படகில் நாம் செல்லுவோமானால் மலை போன்று அலை உருண்டு வருவதை நாம் காண்போம். அதை எதிர்த்துப் படகைச் செலுத்தவேண்டும். அப்படிச்*

செலுத்துதலில் கீழே இறங்குவதும் மேலே ஏறுவதும் ஆன போராட்டங்கள் உண்டு. கடலுக்குள்ளேயே நீரோட்டம் உண்டு. உறைபனியாக மிதக்கிக் கொண்டிருக்கும் கற்பாறைகள் உண்டு. இத்தனை வேறுபாடு இருப்பது அதன் வியவகாரிக நிலை. பரந்த நீர்ப்பரப்பு அதன் பாரமார்த்திக நிலை.

அண்டத்தில் பூமிபோன்ற கோளங்கள் சுழன்று ஓடுகின்றன. அவை உருவெடுக்கின்றன, நிலைத்திருக்கின்றன, தேய்ந்து மறைகின்றன. இவை யாவும் வியவகாரிக நிலை. அண்டங்கள் அனைத்தையும் தொகுத்தெடுத்தால் போக்கு இல்லை, வரவு இல்லை, இயக்கம் இல்லை. எல்லாம் நிறைநிலை. இது பாரமார்த்திக நிலை.

நமது வாழ்க்கையில் ஜனன மரணத்துக்கு உட்படுவது, முன்னேற்றம் அடைய முயலுவது, அதில் வெற்றி அடைவது, தோல்வியடைவது ஆகிய இவை யாவும் வியவகாரிக நிலை. ஆத்மசொரூபம் யாண்டும் இதற்கு சாக்ஷியாய் இருப்பது பாரமார்த்திக நிலை. ஆகையினால் பாரமார்த்திக நிலையில் உதவி பண்ணுபவனும், உதவி பெறுபவனும் இல்லை. வியவகாரிக நிலையில் அந்த வேற்றுமை உண்டு. இப்பொழுது வியவகாரிக நிலையில் உள்ள நாம் பரோபகாரமாக வாழ்ந்திருக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

**கேள்வி: (62)** தனக்கு வில்வித்தை கற்றுக் கொடுக்க வேண்டுமென்று ஏகலைவன் துரோணாச்சாரியரிடம் போனான். அவர் அதைக் கற்றுக்கொடுக்க மறுத்து

அவனை அனுப்பிவிட்டார். பிறகு துரோணரையே குருவாகப் பாவித்து குருபக்தியினால் ஏகலைவன் வில் வித்தையில் தேர்ச்சி யடைந்தான். அதைக் கண்டறிந்து துரோணர் ஏகலைவனுடைய வலக்கையின் கட்டை விரலைக் குரு தக்ஷிணையாக வாங்கிக்கொண்டார். அதனால் அவனுடைய வித்தையே பாழாய்ப் போயிற்று. ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்காரர் இந்தியாவுக்கு வந்த பொழுது மெல்லிய நூல் நூற்று ஆடைசெய்ய வல்லவர்களாய் இருந்தவர்களின் விரல்களை வெட்டி விட்டார்கள் என்று கேள்விப்படுகிறோம். வெளி நாட்டவர் செய்த அக்கிரமத்தை நாம் குருவாகப் போற்றும் ஒருவர் செய்திருக்கிறார். ஒருவேளை அவருக்கு ஜாதித் துவேஷம் இருந்திருக்கவேண்டும். அவர் செய்தது நியாயமா ?

*ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்காரர் என்பவர் இந்தியாவுக்கு வியாபாரத்துக்காக வந்த ஆங்கிலேய வர்த்தகர். அவர்களுக்கு வியாபாரம் வலுப்பதற்கிடையில் இந்தியாவில் ராஜ்ஜியமும் அகப்பட்டு வந்தது. இந்திய சிற்றரசர்களுக்கிடையில் ஒற்றுமை இல்லாதிருந்ததே அதற்குக் காரணமாயிற்று. படிப்படியாக நாடு முழுதையும் அவர்கள் கைப்பற்றினார்கள். பிறகு இந்நாட்டை ஆங்கில அரசாட்சிக்கு அவர்கள் ஒப்படைத்து விட்டார்கள். இது சரித்திர வரலாறு. இதற்கிடையில் இந்தியாவில் இருந்த பல கைத்தொழில்களை அவர்கள் வெவ்வேறு விதங்களில் அழித்துவிட்டார்*

கள் என்றும் பகரப்படுகிறது. பெயர் பெற்ற டாக்கா மஸ்லின் என்பது நம் நாட்டில் நெய்யப்பட்ட உயர்ந்த ஆடையாய் இருந்தது. வெளிநாடுகளிலும் அதற்கு மதிப்பு மிக இருந்தது. அத்தொழிலை அழிக்க அவர்கள் சிலருடைய கைவிரல்களை வெட்டியிருக்கலாம். சுயநலம் படைத்த மனிதன் வசதி வாய்த்தால் தன் சுயநலத்துக்காக எதை வேண்டுமானாலும் செய்வான் என்பதை உலகில் எக்காலத்திலும் எல்லா நாடுகளிலும் கண்டு வருகிறோம். ஆக, ஆங்கிலேய வியாபாரிகள் அந்நாளில் அக்கொடுமையில் ஈடுபட்டிருந்தார்கள் என்றால் அதில் வியப்பொன்றுமில்லை.

துரோணாச்சாரியருக்குச் சுயநலம் ஒன்றும் கிடையாது. தமக்காகவென்று அவர் பொருள் தேடியவரும் அல்லர். ஆயுட்கால முழுதிலும் அவர் ஏழையாகவே வாழ்ந்திருந்தார். அரச குமாரர்களுக்கு வில்வித்தை கற்பித்த அவர் வேண்டுமானால் திரவியத்தையும் ஏராளமாகத் திரட்டியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. அவர் ஒரு தீர்க்கதரிசி. உலகின் நடைமுறையை நன்கு அறிந்தவர். மந்திர சக்தியோடு கூடிய வில்வித்தை அவரிடமிருந்தது. அவ்வித்தையை நன்கு பயன்படுத்தக் கூடிய அரச குமாரர்களுக்குப் புகட்டவேண்டுமென்று அவர் எண்ணியிருந்தார். அதன்படி பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் அவ்வித்தையைப் புகட்ட அவர் முன்வந்தார். அதே வேளையில் வேட

ராஜகுமாரனுகிய ஏகலைவனும் அவரிடம் வில்வித்தை பயில வந்தான். வேடன் ஒருவனுக்கு அத்தகைய உயர்ந்த அஸ்திர சஸ்திர வித்தைகள் தேவை இல்லை என்பது அவருடைய துணிபு. ஆகையினுல் அவனுக்கு அதைப் புகட்ட மறுத்துவிட்டார்.

துரோணுச்சாரியருக்கு ஜாதி வேற்றுமை இருந்தது என்பது பொருந்தாது. அஸ்வத்தாமன் என்பவன் அவருடைய புதல்வன். அர்ஜுனன் க்ஷத்திரியன். துரோணர் பிராம்மணர். தம் சொந்த மகனுக்குப் புகட்டிய வில்வித்தையைவிட அதிகமாக அவர் அர்ஜுனனுக்குப் புகட்டியிருந்தார். ஜாதிப் பற்று அவரிடத்து இருந்திருக்குமாகில் சொந்த மகனுக்கு அதிகம் புகட்டிவிட்டு அர்ஜுனன்போன்றவர்களிடத்திருந்து அவர் அதை மறைத்து வைத்திருக்கலாம். ஆனுல் அவர் அப்படிச் செய்யவில்லை. மற்றவர்களுக்கெல்லாம் விட அதிகமாகவே அவ்வித்தையை அவர் அர்ஜுனனுக்குப் புகட்டியிருந்தார். எதிர்காலத்தில் அக்கிரமத்தை ஒழித்து நீதியை நிலைநாட்டுதற்கு அர்ஜுனன் கிருஷ்ணபகவான் கையில் கருவியாக இருக்கப் போகிருன் என்பதை ஒருவேளை அவர் அறிந்திருக்கலாம். அதை அறியாதிருந்தாலும் அர்ஜுனனுடைய குணுதிசயங்களையும் அரசாளும் திறமைகளையும் அவர் நன்கு அறிந்திருந்தார். உலகத்தைப் பரிபாலிப்பதற்கு அவனிடம் அத்தகைய வில்வித்தைகளெல்லாம் இருக்கவேண்டும் என்று அவர் எண்ணி வந்தார் போலும்.

ஏகலைவன் குருபக்தியால் வில் வித்தையில் அர்ஜுனனுக்கு நிகராய்விட்டான் என்பதைத் துரோணர் கண்டறிந்தார். ஏகலைவனையும் அவர் சந்திக்கும்படி நேரிட்டது. அவ்வித்தைகளையெல்லாம் அவன் எப்படி யாரிடமிருந்து கற்றுக்கொண்டான் எனக் கேட்டார். துரோணர்மீது ஏகலைவன் வைத்திருந்த குருபக்தியால் அவ்வித்தைகள் தனக்குக் கிட்டின என்று அக்காட்டு வேந்தனின் குமாரன் விடைவிடுத்தான். 'அப்படியாயின் நீ எனக்குக் குருதக்ஷிணை தரக் கடமைப்பட்டிருக்கின்றாய் அல்லவா?' என்று துரோணர் ஏகலைவனிடம் கேட்டார். 'என்னிடமிருக்கும் எதைத் தாங்கள் கேட்டாலும் குரு தக்ஷிணையாகப்படைத்து விடுகிறேன்' என்றான் வேட இளைஞன். 'உனது வலக்கையின் கட்டை விரலை வெட்டி எனக்குத் தக்ஷிணையாகத் தரவேண்டும்' என்று துரோணர் ஆக்ஞாபித்தார். ஏகலைவனும் மகிழ்ச்சியுடன் விரலைத் துண்டித்து அவர் முன்னிலையில் வைத்தான். அத்துடன் அவன் வில் வித்தை முடிவுபெற்றது. துரோணர் அவனை மனமுவந்து ஆசீர்வதித்தார். இது ஒரு கொடூரச் செயலாகத் தென்படுகிறது. ஆனால் இயற்கையின் நடைமுறையில் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒரு ஸ்தானம் உண்டு. அந்த ஸ்தானத்துக்குக் கீழே போய் விடாமல் அவனுக்குப் பயிற்சி கொடுத்து மேல் நிலைக்கு எடுப்பது பெரியோர் கடமை. ஆனால் அதே ஜீவனால் நிறைவேற்ற வேண்டிய அவசியம் இல்லாத ஒரு பெரிய கடமைக்

குத் தகுதியுடையவனுகஅந்த ஜீவன் தன்னைச்செய்து கொண்டால், அத்தகுதியை அவனிடமிருந்து திருப்பி எடுத்துக்கொள்ளுதல் இயற்கையின் செயல். இவ் விதிக்குட்பட்டே சான்ருேரும் சில சமயங்களில் பொருந்தாதவைகள் போன்று தென்படும் செயல் களைச் செய்கின்றனர். துரோணர் செயலும் அத் தகையது.

யாரிடத்தில் துப்பாக்கி முதலிய அக்கினி அஸ் திரங்கள் இருக்கலாம். யாரிடத்தில் அவை இருக்க லாகாது என்பதை அரசாங்கம் தீர்மானம் பண்ணு கிறது. அரசாங்கத்தின் உத்திரவின்றி யாராவது அத்தகைய ஆயுதங்களைச் சம்பாதித்து வைத்திருந் தால் அவைகளைப் பறிமுதல் செய்வது அரசாங்கத் தின் கடமை. அதே முறையில்தான் துரோணரும் ஏகலைவனிடத்திருந்து அந்த உயர்ந்த வில் வித் தையை எடுத்துக்கொண்டார். உலக நன்மையின் பொருட்டு அவர் அதை அர்ஜுனனுக்கே புகட்டி வைத்தார்.

**கேள்வி : (63)** மனிதன் நான்கு தோஷங்களை நீக்கினுல் முக்தி பெறலாம். அவை ஒழுக்கக்குறைவு, சுராபா னம், பிறர் பொருளில் இச்சை, அன்ன தோஷம் என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். நான்காவதாகிய அன்னதோஷத்தை விவரிக்கும் பொழுது முக்கியமாக சமபந்தி போஜனத்தைக் குறிப்பிடுகிருர்கள். தற் காலத்தில் அதிகமாகக் கல்வி கற்க ஆவல் கொண் டால் வெளியூர்களில் உள்ள ஹாஸ்டல்களில் தங்க

நேரிடுகிறது. சமபந்தி போஜனம் தவிர்க்க முடியாமல் போகிறது. காலத்திற் கேற்றவாறு நடப்பதும் கடமை யாகிறது. இந்நிலையில் ஏற்படுகிற பி ர மை ம யைப் போக்குமாறு வேண்டுகிறேன்.

*அன்னத்துக்கு ஏற்படும் தோஷங்களில் ஆச்ரய தோஷம் என்பது ஒன்று. அந்த தோஷத்தை எல்லா ராலும் கண்டு பிடிக்கமுடியாது. சமைக்கப்படும் உணவு ஒன்று எம்மனிதனால் கையாளப்படுகிறதோ அம்மனிதனுடைய இயல்பு சூக்ஷ்மமாக உணவில் படி கிறது என்பது கோட்பாடு. நல்லார் கைப்பட்ட உணவு நல்ல உணவு ஆகிறது. கெட்டவர்கள் கைப் பட்ட உணவு கேடுடையது ஆகிறது. இன்றைக்குச் சமுதாயத்தில் நாம் காணும் அன்ன விசாரமெல் லாம் இந்த ஆச்ரய தோஷத்தைப் பற்றியது. ஆனல் நல்லவர் யார், கெட்டவர் எவர் என்று நாம் உறுதி கூற முடியாது. கொஞ்சகாலத்துக்கு முன்பு உயர்ந்த ஜாதியில் பிறந்தவர்களிடம் உணவை ஏற்றுக் கொள்ளுதலும், தாழ்ந்த ஜாதியில் பிறந்தவர் களிடம் உணவை ஏலாதிருந்ததும் சமூகப் பழக்க வழக்கமாய் இருந்து வந்தது. ஆனல் அக்கொள்கை பெரிதும் மறைந்து போய்விட்டது. ஆகையால் ஹாஸ்டல் போன்ற இடத்தில் சமைக்கப்படும் உணவு தூயது அல்ல என்று கருதுவது பொருந்தாது. பல ஹோட்டல்களில் கிடைக்கும் உணவை விட ஹாஸ் டல்களில் கிடைக்கும் உணவு மிகத் தூயது என்றே இயம்பலாம். இன்றைக்கு ஹோட்டல்கள் பெயரள*

வில் மேல் வகுப்பினர்களால் நிர்வகிக்கப்படுகின்றன. ஆனால் உள்ளே புகுந்து ஆராய்ந்து பார்த்தால் எல்லாவித தோஷங்களையும் ஆங்குக் காணலாம்.

ஆத்ம சாதகர்கள் தங்களுக்கென்றே உணவு சமைத்துக் கொள்ளுதல் உத்தமம். அத்தகைய வாய்ப்பு அமையாத இடத்தில் சமுதாயத்தில் எங்கே ஆரோக்கிய முறையில் சமைக்கப்படும் உணவு அகப்படுகிறதோ அதை ஏற்றுக்கொள்ளலாம். அதை ஏற்கும் ஆத்ம சாதகன் ஒருவன் முதலில் தனது எண்ணத்தால் தன் வழிபடு தெய்வத்துக்கு அதை நைவேத்தியமாகப் படைக்கவேண்டும். தெய்வத்தின் பிரசாதமாகப் பிறகு அதை அருந்தலாம். அப்படிச் செய்கின்றவர்களுக்கு ஒரு தோஷமும் ஏற்படாது. இக்காலத்திய சூழ்நிலையில் இதைத்தான் நம்மால் சாதிக்க முடியும். இதற்கு மேல் மற்றொரு பேருண்மையை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். உண்ணும் உணவைவிடச் சிறந்தது எண்ணும் எண்ணம். எண்ணத்துக்கே ஆகாரம் என்கிற பெயர் உண்டு. நல்லெண்ணம் என்னும் தூய ஆகாரம் ஏற்பவர்களுக்கு அன்னத்தினின்று ஒரு கேடும் வந்து விடாது. ஒருவன் தூய உணவை உண்டு கொண்டிருப்பதற்கிடையில் காமத்துக்கு வசப்பட்டவனாக இருப்பானாகில் அவன் கீழ்மகன் என்பதும், சாதாரண உணவை உண்பதற்கிடையில் மேலான எண்ணமே எண்ணியும், ஆசையை அடக்கியும் ஒருவன் இருப்பானாகில் அவன் மேன்மகன் ஆகிறான் என்பதும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்துள்ள கோட்பாடு ஆகும்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீமத் பகவத்கீதை-விரிவுரையுடன்-பிரசார விலை | | ரூ. 5-50 |
| திருவாசகம்-விரிவுரையுடன்-பிரசார விலை | | ... 6-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ பிரசார விலை | | ... 2-00 |
| தினசரி தியானம் (பாக்கெட் சைஸ்) | | அச்சில் |
| ஞானயோக விளக்கம் (காலிகோ பைண்டு) | | ,, |
| ராஜயோக விளக்கம் | ஷை | ,, |
| கர்மயோக விளக்கம் | ஷை | ... 5-00 |
| பரமஹம்ஸரின் பெருமை | ஷை | ... 4-50 |
| தினசரி தியானம் | ஷை | ... 4-50 |
| பக்தியோக விளக்கம் | ஷை | ... 4-00 |
| கல்வி | ஷை | அச்சில் |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | | ... 2-50 |
| கடவுளின் வடிவங்கள் | | ... 2-00 |
| விவேகானந்த உபநிஷதம் | | அச்சில் |
| எதிர்கால இந்தியா | | ... 1-50 |
| அனுஷ்டான வேதாந்தம் | | அச்சில் |
| தாயுமானவர் இயற்றிய பரிபூரணானந்தம் (விரிவுரை) | | ... 1-50 |
| தாயுமானவர் இயற்றிய மௌனகுரு வணக்கம் | ஷை | ... 1-50 |
| தாயுமானவர் இயற்றிய கருணாகரக் கடவுள் | ஷை | ... 1-50 |
| தாயுமானவர் இயற்றிய ஆனந்தமானபரம் | ஷை | ... 1-50 |
| தாயுமானவர் இயற்றிய சுகவாரி | ஷை | ... 1-50 |
| தாயுமானவர் இயற்றிய சின்மயானந்த குரு | | அச்சில் |
| தாயுமானவர் இயற்றிய எங்கும் நிறைகின்றபொருள் | | ... 1-50 |
| பரமஹம்ஸர் புகட்டிய பெருநெறி விளக்கம் பாகம் 1 | | ... 1-50 |
| பரமஹம்ஸர் புகட்டிய பெருநெறி விளக்கம் பாகம் 2 | | ... 1-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம் 1 | | ... 1-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம் 2 | | ... 1-50 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | | ... 1-25 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | | ... 1-13 |
| உலகுக்கு உயிர்கொடுத்த உத்தமன் | | ... 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | | ... 1-00 |
| விரத வீரர் பீஷ்மர் | (நாடகம்) | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) | ... 1-00 |

| | |
|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | ... 0-95 |
| உலகை உய்வித்த உத்தமன் | ... 0-95 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | அச்சில் |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ... 0-80 |
| சந்நியாசி | ... 0-75 |
| தவப் புதல்வர்கள் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் (நாடகம்) | ... 0-65 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-50 |
| தாயுமானவர் இயற்றிய பரசிவ வணக்கம் (விரிவுரை) | ... 0-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-45 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா ? | ... 0-45 |
| *ஆத்ம சக்தி | ... 0-40 |
| இராவண தத்துவம் | ... 0-40 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | அச்சில் |
| தபோபலன் (நாடகம்) | ... 0-35 |
| *ஆலய வழிபாடு | ... 0-30 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-25 |
| *சக்தி தத்துவம் | ... 0-25 |
| *சிவத்த்துவம் | ... 0-25 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-20 |
| *சூரிய நாராயணன் | ... 0-20 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-20 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-15 |
| *கணபதி | ... 0-15 |
| *முருகக் கடவுள் | ... 0-15 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-15 |
| திருக்குறளில் கடவுள் வாழ்த்து | ... 0-15 |
| அருள் விருந்து 1 முதல் 13 வரை (ஒவ்வொன்றும்) | ... 0-15 |
| *அன்னை சாரதா தேவியார் வரலாறு | அச்சில் |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸ்தோத்ரம் | ... 0-10 |
| The Bhagavad Gita (IV Impression) | ... 7-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 4-50 |
| The Indian National Education | ... 4-50 |

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ:-** ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தம் பக்தர்களுக்கு நிகழ்த்திய சம்பாஷணைகளினின்று பொறுக்கி எடுத்த 1426 உபதேசங்களைக் கொண்டது இப்புத்தகம். கிரௌன் சைஸ் 424 பக்கங்கள். அதிகம் பொருள் வசதி இல்லாதவரும் இதை வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற நோக்குடன் ரூ. 4-00 விலையுள்ள இப்புத்தகம் ரூ. 2-00க்கு தரப்பெறுகிறது. தபாற்செலவு ரூ. 0-95.

**தினசரி தியானம்:-** ரூ. 4-50 விலையுள்ள புத்தகத்தை அதன் பாதி அளவான பாக்கெட் சைஸ் புத்தகமாகச் செய்து யாவரும் படித்துப் பயன் பெறவேண்டும் என்ற நோக்குடன் பிரசாரவிலையில் வெளியிடப் பெற்றுள்ளது. 368 பக்கங்கள்; பிளாஸ்டிக் காலிகோ பைண்டு. 9ஆம் பதிப்பு அச்சில் உள்ளது.

மேற்கண்ட பிரசார விலை வெளியீடுகளை நேரடியாக எங்களிடமிருந்து வரவழைக்க விரும்பும் அன்பர்கள் முன்பணம் அனுப்பி ரயில்வே பார்சல் மூலம் வரவழைத்துக்கொண்டால் செலவு குறையும். அதிகம் பிரதிகளை வரவழைப்பவர்களுக்குத் தக்க சலுகைகள் காட்டப்பெறும். பார்ஸல் கட்டணத்திலும் அனுகூலமுண்டு. ஆதலால் பிரசார விலை பதிப்புக்களை கூடுதலான அளவுக்கு வரவழைத்துத் தாங்களும் தங்கள் நண்பர்களுமாகப் பகிர்ந்துகொண்டால் குறைந்த செலவில் அல்லது செலவில்லாமல் புத்தகங்களைப் பெறுவதுடன் எங்கள் ஆத்மீகப் பிரசார கைங்கரியத்தில பங்குகொண்டவர்களும் ஆவீர்கள்.

## ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை போஸ்ட் :: திருச்சி ஜில்லா

---

## தர்ம சக்கரம்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத் திங்கள் வெளியீடு

**ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்**

**1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது**

| | ஆண்டு சந்தா | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 5-00 | 0-50 |
| வெளிநாடு | ரூ. 10-00 | 1-00 |

வேண்டும்போது திரும்பவும் பெற்றுக்கொள்ளத் தக்கதும், மிகவசதி வாய்க்கப் பெற்றதுமான டெபாஸிட் சந்தா ரூ. 50/- விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை